॥ ஸ்ரீ: ॥

ஸ்ரீமந் நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த

# அதிகார ஸங்கிரஹப் பாட்டுக்களின் உரை.

---




ஆசாரியர்களால்

வி. கே. ராமாநுஜனைக் கொண்டு

எழுதப்பட்டது.

---



கும்பகோணம்

ஸ்ரீ கோமளாம்பா பிரஸ்ஸில்

அச்சிடப்பட்டது.

---

ஸ்ரீமுக-வரு

விலை] 1934 [அணா 8

# முகவுரை.

---

ஸ்ரீமந் நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த ஸ்ரீரஹஸ்யத்திரயஸாரத்தில் இருக்கும் அதிகாரஸங்கிரஹப் பாட்டுக்களுக்கு எளிதான தமிழ்நடையில் அர்த்தம் இதில் எழுதப்பட்டிருக்கிறது. பாட்டுக்களுக்கு வியாக்கியானம் எழுதியிருக்கிற ஸாராஸ்வாதிநி முதலானவைகளில் வடமொழிச்சொற்கள் அதிகங்களாயிருப்பதால், அந்த பாஷை தெரியாதவர்களுக்கு அவைகள் உபயோகப்படுகின்றனவில்லை. இதில் கூடியவரையில் வடமொழிச்சொற்கள் கலப்பில்லாமல் தமிழில் பதவுரையும் கருத்தும் விசேஷார்த்தங்களும் எழுதப்பட்டிருக்கின்றன.

2. பாட்டுக்களின் அர்த்தங்களை நன்றாக அறிவதற்கு அதிகாரங்களில் சொல்லப்பட்ட விஷயங்களையும், கீழ் அதிகாரத்திற்கும் மேல் அதிகாரத்திற்கும் இருக்கும் ஸங்கதியையும் மிகவும் சுருக்கமாய் எழுதியிருக்கிறது.

3. ஸ்ரீதேசிகன் கிரந்தத்தை ஒருவன் ஆசாரியனிடம் ஸேவித்தப்பிறகு அதைச் சிந்தனை பண்ணும் காலத்தில் இது அவனுக்கு உபயோகப்பட வேண்டுமென்று எழுதப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ-உப-வே சின்னமு ஸ்ரீநிவாஸபாட்ராசாரியாருடையவும், ஸ்ரீ-உப-வே ஸாரநாதாசார் B. A., B. L. அவருடையவும் உதவியால் இது எழுதப்பட்டது. அவர்களுக்கு இதன்மூலம் நன்றியை அறிவிக்கிறேன்.

திருக்குடந்தை
ஸ்ரீமுக-ஸூ
பங்குனி உத்திரம்

வி. கே. ராமாநுஜாசாரி.

---

# விஷயஸூசிகை.




| | பக்கம் |
|---|---|
| குருபரம்பராஸாரம் | 1 |
| பொய்கைமுனி | 1 |
| இன்பத்தில் | 4 |
| என்னுயிர் தந்து | 6 |
| ஆரண நூல் | 8 |
| நீளவந்தின்று | 9 |
| காளம் வலம்புரி | 11 |
| உபோத்காதாதிகாரம் | 13 |
| ஆளுமடைக்கலம் | 13 |
| திருவுடன் வந்த | 15 |
| ஸாரநிஷ்கர்ஷாதிகாரம் | 16 |
| அமையாவினை | 17 |
| பிரதாநபிரதிதந்திராதிகாரம் | 18 |
| நிலை தந்த | 19 |
| அர்த்தபஞ்சகாதிகாரம் | 20 |
| பொருளொன்றென | 22 |
| தத்துவத்ரயசிந்தநாதிகாரம் | 23 |
| தேறவியம்பினர் | 25 |
| புருடன் மணிவரமாக | 101 |
| பரதேவதா பாரமார்த்தியாதிகாரம் | 26 |
| வாதியர்மன்னும் | 27 |
| முமுக்ஷுத்வாதிகாரம் | 28 |
| நின்ற புராணன் | 29 |
| அதிகாரிவிபாகாதிகாரம் | 30 |
| வேண்டும்பெரும்பயன் | 31 |
| உபாயவிபாகாதிகாரம் | 32 |
| நின்ற நிலைக்கு | 35 |

| | பக்கம் |
|---|---|
| பிரபத்தியோக்யாதிகாரம் | 36 |
| அந்தணரந்தியர் | 37 |
| பரிகரவிபாகாதிகாரம் | 39 |
| அறிவித்தனரன்பர் | 41 |
| ஸாங்கப்பிரபதநாதிகாரம் | 42 |
| அறவே பரமென்று | 43 |
| கிருதகிருத்தியாதிகாரம் | 45 |
| மன்னவர் விண்ணவர் | 46 |
| ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம் | 47 |
| முக்கிய மந்திரம் | 49 |
| உத்தரகிருத்தியாதிகாரம் | 49 |
| விண்ணர் வேண்டி | 51 |
| புருஷார்த்தகாஷ்டாதிகாரம் | 52 |
| வேதமறிந்த பகவர் | 53 |
| சாஸ்திரீயநியமநாதிகாரம் | 54 |
| நின்றனமன்புடை | 55 |
| அபராதபரிஹாராதிகாரம் | 57 |
| உளதான வல்வினைக்கு | 58 |
| ஸ்தாநவிசேஷாதிகாரம் | 59 |
| ஆராதவருள் | 102 |
| கண்ணனடியிணை | 103 |
| உத்தம வமர்த்தலம் | 104 |
| தேனர் கமலத் திருமகள் | 60 |
| நிர்யாணுதிகாரம் | 61 |
| நன்னிலமாமது | 62 |
| கதிவிசேஷாதிகாரம் | 63 |
| நடைபெறவங்கி | 63 |
| பரிபூர்ண பிரும்மாநுபவாதிகாரம் | 64 |
| எறியெழிற்பதம் | 65 |
| ஸித்தோபாயசோதநாதிகாரம் | 67 |
| மன்னுமனைத்துறவாய் | 67 |

பக்கம்

| | |
|---|---|
| ஸாத்தியோபாயசோதநாதிகாரம் | 69 |
| வரிக்கின்றனன் | 71 |
| பிரபாவவியவஸ்தாதிகாரம் | 72 |
| தகவாற்றரிக்கின்ற | 72 |
| பிரபாவரக்ஷாதிகாரம் | 74 |
| உண்மையுரைக்கும் | 75 |
| மூலமந்திராதிகாரம் | 77 |
| எட்டுமாமூர்த்தி | 105 |
| உயர்ந்தநங் காவலன் | 82 |
| த்வயாதிகாரம் | 84 |
| ஓதுமிரண்டை | 89 |
| சரமச்லோகாதிகாரம் | 91 |
| ஒண்டொடியாள் | 108 |
| மூண்டாலுமரியதனில் | 110 |
| சாதனமுநற்பயனும் | 112 |
| தன்னினைவில் விலக்கின்றி | 113 |
| குறிப்புடன் மேவும் | 94 |
| ஆசாரியகிருத்யாதிகாரம் | 96 |
| பாட்டுக்குரிய பழையவர் | 115 |
| மருளற்ற தேசிகர் | 96 |
| சிஷ்யகிருத்யாதிகாரம் | 97 |
| ஏற்றிமனத்தெழில் | 97 |
| நிகமநாதிகாரம் | 98 |
| உறுசகடமுடைய | 116 |
| முன்பெற்ற ஞானமும் | 98 |
| செப்பச் செவிக்கு | 100 |
| மறையுரைக்கும் | 118 |
| இதுவழியின்னமுது | 119 |
| எட்டுமிரண்டும் | 120 |
| வானுளமர்ந்தவர்க்கும் | 121 |
| வெள்ளைப்பரிமுகர் | 122 |

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 34 | 21 | அடக்கி. | அடக்கி, |
| ,, | 24 | இருக்கும், | இருக்கும். |
| 47 | 28 | உதாஸீநனாயிருருப்பன் | உதாஸீநனாயிருப்பன் |
| 50 | 18 | செய்யவேண்யடிதென்று | செய்யவேண்டியதென்று |
| 67<br>124 | 24<br>20 | மன்னுமனைத்துறைவாய் | மன்னுமனைத்துறவாய் |
| 80 | 10 | எப்பெருமானுக்கு | எம்பெருமானுக்கு |
| ,, | 11 | ஏம்பெருமான் | எம்பெருமான் |
| ,, | 18 | படுகிறது | படுகின்றன |
| 87 | 14 | பக்த | பத்த |
| ,, | 25 | பற்றுகிறான் | பற்றுகிறேன் |
| 105 | 14 | வேறும் | வெறும் |
| 108 | 7 | வயிரெல்லா | வுயிரெல்லா |
| 124 | 15 | வல்விளை | வல்வினை |
| ,, | 25 | கானம் வலம்புரி | காளம் வலம்புரி |
| ,, | 27 | நற்யனும் | நற்பயனும் |



ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே கோபாலார்ய மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥

# அதிகார ஸங்கிரஹம்.

## குருபரம்பராஸாரம்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தை ஒருவன் ஆசார்யனிடம் படிப்பதற்கு முன்னாலே குருபரம்பராஸாரம் என்கிற புஸ்தகத்தைப் படித்து, அதில் சொல்லிய ஸங்கதிகளைத் தெரிந்துகொண்டு, தன்னுடைய ஆசார்யன் முதலான ஆசார்யவரிசையை எம்பெருமான் வரையில் வணங்கி, ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தைப் படிக்கவேண்டுமென்று எண்ணி, ஸ்ரீ தேசிகன் இந்த புஸ்தகத்தை எழுதியிருக்கிறார்.

இதில் ஸ்ரீ தேசிகன், மங்களமாக வடமொழியில் ஒரு ச்லோகம் அருளிச்செய்து, அதிக மங்களத்திற்காக இரண்டு பாட்டுக்களை அருளிச் செய்கிறார்.

போய்கைமுனி பூதத்தார் பேயாழ் வார்தண்
பொருநல்வருங் குருகேசன் விட்டு சித்தன் *
துய்யகுல சேகரனம் பாண நாதன்
தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி*
வையமெலா மறைவிளங்க வாள்வே லேந்து
மங்கையர்கோ னென்றிவர்சண் மகிழ்ந்து பாடும் *
செய்யதமிழ் மாலைகணாந் தெளிய வோதித்
தெளியாத மறைநிலங்க டெளிகின் றேமே. (1)

(பதவுரை.) பொய்கைமுனி, பூதத்தார், பேயாழ்வார், தண்-குளுமையான, பொருநல் - தாம்ரபர்ணி யென்னும் நதியின் கரையில், வரும் - அவதாரஞ்செய்த, குருகேசன் - குருகையென்னும் நகரத்திற்குத் தலைவரான நம்மாழ்வார், விட்டுசித்தன் -

பெரியாழ்வார், துய்ய - பரிசுத்தமான மனதையுடைய, குலசே கரன், நம் பாணநாதன் - திருப்பாணாழ்வாராகிற நம்முடைய ஸ்வாமி, தொண்டர் அடிப்பொடி, மழிசை - திருமழிசையில், வந்த- அவதாரஞ் செய்த, சோதி - ஜ்யோதிஸ்ஸான திருமழி சைப்பிரான்,வையம் எல்லாம் - உலகத்தில் எங்கும், மறை - வே தங்களின் பொருள், விளங்க - நன்றாய்த் தெரியும்படி,வாள் - கத் தியையும்,வேல் - வேல் என்கிறஆயுதத்தையும், ஏந்தும் - ஏந்திக் கொண்டிருந்த, மங்கையர் மங்கையென்னும் நகரத்திலிருந்தவர் களுக்கு, கோன் - ஸ்வாமியான திருமங்கையாழ்வார்,— என்று இவர்கள், மகிழ்ந்து - எம்பெருமானை அநுபவித்து ஸந்தோஷப் பட்டு, பாடும் - அது உள்ளடங்காமல் பாடின, செய்ய - நல்ல, தமிழ்மாலைகள் - தமிழ்ப் பாட்டுக்களை, நாம், தெளிய - அதுவோ இதுவோ என்ற ஸந்தேஹமும், ஒன்றை வேறொன்றாக எண்ணு கிற மயக்கமுமில்லாமல், ஓதி - ஆசார்யர்களிடத்தில் படித்து, மறை - வேதத்தில், தெளியாத - அர்த்தம் இன்னதென்று தெரி யாத, நிலங்கள்- இடங்களை, தெளிகின்றோம்.

(கருத்து.) பொய்கை முனி முதலான பத்து ஆழ்வார்களும் எம்பெருமானை அநுபவித்து, அதினாலுண்டான ஆநந்தமானது உள்ளடங்காமல் தமிழ்ப் பாட்டுக்களைப் பாடினார்கள். அவைகள் படிக்கும்போதே வருத்தமில்லாமல் பொருளைத் தெரிவிக்கிறவை களாகவும், பூமாலைகள் போல் எம்பெருமானுக்கு ஸந்தோஷத் தைக் கொடுப்பவைகளாகவும் இருக்கின்றன. அவைகளையும், அவைகளின் பொருள்களையும் நாம் ஒரு குருவினிடத்தில் நன்றா கப்படித்து, தெளிவாகப் பொருள் தெரியாத வேதத்திலுள்ள இடங்களைத் தெளிவாக அறிகின்றோம்.

குறிப்பு:— (1) தண் பொருநல் - குளுமையான தாம்ரபர் ணியைச் சொன்னதனாலே ஆழ்வாருடைய மனது மிகவும் ஈரமுள்ளது (இரக்கமுள்ளது) என்று காட்டப்படுகிறது. மேலும் கலியுகத்திலும் எம்பெருமானை உயர்ந்த புருஷார்த்தமாக எண் ணுகிறவர்கள் பிறக்கப் போகிறார்கள் என்றும், தமிழ்தேசத்தில் அப்படி அனேகம் பேர்கள் அவதரிப்பார்களென்றும் சொல்லி, அப்படி அவதாரம் பண்ணுகிற இடங்களை ஸ்ரீ பாகவதத்தில் சொல்லியிருக்கிறது. அந்த ஸங்கதியை நம்முடைய நினைவிற்குக் கொண்டுவருவதற்காக தாம்ரபர்ணியைச் சொன்னது.

(2) பெரிய ஆழ்வாரைச் சொன்னதினுலே இவர் திரும களான ஸ்ரீ ஆண்டாளையும் சொன்னபடி.

(3) மந்திரிகள் சில ஸ்ரீ வைஷ்ணவர்களின்பேரில் குற்றம் சாட்டினபோது, அவர்கள் குற்றம்செய்திருக்க மாட்டார்கள் என்றும், பாம்பின் குடத்தில் நான் கையிடுவேன் என்றும் குலசேகர ஆழ்வார் சொன்னதைக் கொண்டு, அவரை "துய்ய" என்று விசேஷித்தது.

(4) திருப்பாணுழ்வாரைத் தோளில் ஏற்றிக்கொண்டு வரும்படி ஒரு பிராம்மணனுக்கு ஸ்ரீ ரங்கநாதன் கட்டளையிட, அப்படியே அவர் அவரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு கோ விலுக்குள் வந்தார். ஆகையாலே ஆழ்வாருக்கு "முனிவாஹநன்" என்று பெயர் வந்தது. ஸ்ரீ தேசிகனுக்கும் ஸ்ரீரங்கநாதன் "வேதாந்தாசாரியர்" என்று திருநாமம் சாற்றினுர். இந்த ஸம்பந்தத்தைக் கொண்டு இந்த ஆழ்வாரை நம்முடைய நாதன் என்று சொன்னது.

(5) பெரும்புலியூரில் ஒருயாகம்நடக்கும்காலத்தில், தன்னைப் பரம் ஜ்யோதிஸ்ஸான எம்பெருமானுகக் காட்டினதைக் கொண்டு திருமழிசையாழ்வாரை "சோதி" என்று சொன்னது.

(6) திருமங்கையாழ்வார், வாளையும் வில்லையும் கையில் வைத்துக்கொண்டு வழிப்பறி செய்து கிடைத்த பொருளைக் கொண்டு பிராமணபோஜநம் செய்துவந்தார். அப்போது ஸ்ரீ ரங்கநாதன் திருவாலியில் கல்யாணம் செய்து கொண்டு பிராட்டி யுடன் திருநகரிக்கு எழுந்தருளும்போது அவருடைய எல்லா திருவாபரணங்களையும் பறித்துக் கொண்டார். எம்பெருமான் ஒரு வியாஜத்தைக் கொண்டு அவருக்குத் திருமந்திரத்தை உப தேசிக்க, அவருக்கு ஞானம் பிறந்து வேதத்தின் அர்த்தங்களை எல்லாம் பெரிய திருமொழி முதலான பிரபந்தங்களில் வெளி யிட்டார். அவர் வாளையும் வேலையும் ஏந்தினது உலகத்தில் வேதத்தின் பொருள் நன்றாய் விளங்கும்படி ஆயிற்றென்று அவரைக் கொண்டாடின படி. சிஷ்யர்கள் குருவினிடம்ஸமித்து முதலான உபஹாரங்களைக் கொண்டு போவார்கள்; இவர் வாளை யும் வேலையும் கொண்டுபோனுர். அவர்கள் தன் சக்திக்குத் தகுந்தபடி பொருளைக் குருதக்ஷிணையாகக் கொடுப்பார்கள்; இவர்

குருவினிடமிருந்து எல்லா ஸொத்தையும் பிடுங்கிக் கொண்டார், அவர்கள் குருவை வணங்கி உபதேசம் பெறுவார்கள்; இவர் எம் பெருமானை நிர்ப்பந்தம் செய்து உபதேசம் பெற்றார். அவர்கள் பெற்ற உபதேசம் அவர்களுக்கே உதவும்; இவர் பெற்ற உப தேசமானது உலகத்திற்கே உதவும் படியாயிற்று. இந்த ஆச்சர் யத்தை ஸ்ரீதேசிகன் இங்கே வெளியிடுகிறார்.

(7) பராசரர் முதலான ரிஷிகள் செய்த புராணங்களைக் காட்டிலும் ஆழ்வார்களுடைய பிரபந்தங்களுக்கு ஒரு ஏற்றம் உண்டு. இவைகள் வேதத்தில் சொன்ன ரஹஸ்யமான பொருள் களை மிகவும் தெளிவாய்க் காட்டுகின்றன. இவைகளைப் படிப்ப தினால் எம்பெருமானிடத்தில் உடனே ப்ரீதி உண்டாகும். இந்த உபகாரத்தினால் ஸ்ரீ தேசிகன் ஆழ்வார்களை வணங்கினது.

---

இன்பத்தி லிறைஞ்சுதலி லிசையும் பேற்றி
லிகழாத பல்லுறவி லிராக மாற்றில்*
தன்பற்றில் வினைவிலக்கிற் றகவோக் கத்திற்
றத்துவத்தை யுணர்த்துதலிற் றன்மை யாக்கில் *
அன்பர்க்கே யவதரிக்கு மாய னிற்க
வருமறைக டமிழ்செய்தான் றாளே கொண்டு *
துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டுந்
தொல்வழியே நல்வழிக டுணிவார் கட்கே. (2)

(ப-ரை.) துன்பு - குற்றம், அற்ற - இல்லாதவரான, மதுர கவி, இன்பத்தில் - இனிமையாயிருப்பதில், இறைஞ்சுதலில்- ரக்ஷிக்கிறவனாக அடைவதில், இசையும் பேற்றில் - ஒப்புக்கொள் ளப்பட்ட லாபத்தில், (புருஷார்த்தத்தில்) இகழாத - விட்டுநீங் காத, பல் உறவில் - பலவிதமான - தாயாகவும், தகப்பனாகவும், குருவாகவும் இருக்கிற உறவுகளில், இராகம் மாற்றில்- கண்முத லிய இந்திரியங்களால் அநுபவிக்கக் கூடிய விஷயங்களிலுள்ள ஆசையை மாற்றுவதில், தன் பற்றில் - தன்னிடத்தில் பிடிப்பை யுண்டாக்குவதில், வினைவிலக்கில் - முன் செய்த கர்மங்களைப் போக்குவதில், தகவு ஒக்கத்தில்- கருணையினுடைய உயர்த்தியில், தத்துவத்தை உணர்த்துதலில் - தத்துவத்தை (உண்மையான பொருள்களை) அறியும்படி செய்கையில், தன்மையாக்கில் - தன் ஸ்வபாவத்தை யுண்டாக்குகையில்— ஆகிய இந்தப்பத்து விஷயங்

களில், அன்பர்க்கே - பக்தர்களுக்காகவே, அவதரிக்கும் - அவதாரஞ்செய்த, ஆயன் - கோபால உருவத்தைக் கொண்ட கிருஷ்ணன், நிற்க - இருக்கும் போது அவரை விட்டு விட்டு, அரு- அர்த்தம் அறியமுடியாத, மறைகள்- வேதத்தின் பொருள்களை, தமிழ் செய்தான் - தம்முடைய தமிழ்ப் பாட்டுக்களால் வெளியிட்டநம்மாழ்வாருடைய, தாளே - திருவடிகளையே, கொண்டு- அடைந்து, தோன்ற - உலகத்தாருக்குத் தோன்றும்படி, காட்டும் - காட்டின, தொல்வழியே-பழைய வழியே, துணிவார்கட்கு- தைரியமுடையவர்களுக்கு, நல்வழிகள்- நல்லவழிகள்.

(கருத்து.) மதுரகவியாழ்வார், அவதாரஞ் செய்து அக்காலத்திலிருந்த எம்பெருமானை விட்டு, பாட்டில் சொன்ன பத்துவிஷயங்களில் ஆழ்வாரையே யடைந்தார். இப்படி அவர் காட்டின வழியே முன்னோர்கள் நடந்தவழி. அதுவே விஷயங்களை ஜயித்து மோக்ஷம் பெறவேண்டுமென்று ஆசைப் படுகிறவர்கள் போக வேண்டிய வழி.

குறிப்பு,— (1) துன்பு- துன்பம், இந்த சொல்லானது, இங்கு துன்பத்துக்குக் காரணங்களான குற்றங்களைச் சொல்லுகிறது. அவைகளாவன:— ஒன்றை வேறொன்றாக நினைப்பது, மோசம் பண்ணுவது, தன்னைப் படித்தவனென்று எல்லாரும் கொண்டாட வேண்டுமென்றும், தனக்கு ஒரு லாபம் வேண்டுமென்றும், தன்னை யெல்லாரும் பூஜிக்க வேண்டும் என்றும் ஆசைப்படுவது. இவைகள் இவருக்கில்லாமையால் அவருடைய அநுஷ்டாநத்தை நாம் நம்பலாம் என்று கருத்து.

(2) இகழாத- இளப்பமென்று தள்ளாத என்று பொருள், அதின் காரியமான விட்டுவடுவது இங்கே சொல்லப்படுகிறது.

(3) பழமையான வழி:— முன்னாலே இருந்த மைத்ரேயர் முதலான ருஷிகள் நடந்த வழி.

(4) இந்த ஆழ்வார் கண்ணிநுண்சிறுத்தாம்பு என்னும் பிரபந்தத்தில் ஒவ்வொரு பாட்டாலும் ஆழ்வார் தமக்குச் செய்த உபகாரத்தைச் சொல்லுகிறார். ஆழ்வாரே இவருக்கு இன்பமாய் இருந்தார். அந்த ஆநந்தாநுபவத்தை அடைவதற்கு அவரே உபாயம். அவரே இவர் ஒப்புக்கொண்ட புருஷார்த்தம். அவரே இவருக்கு எல்லாவிதமான உறவினர், அவரே இவருக்

குள்ள விஷயங்களின் ஆசையைப் போக்கினார். அவரே இவரைத் தன்னிடம் வந்து சேரும்படி செய்தார். அவரே இவருடைய புண்ணியம்பாபமென்கிறஇரண்டுவிதங்களான கர்மங்களைப் போக்கினார். அவருடைய கருணைக்கு அளவில்லை. அவரே இவருக்குத் தன்னுடைய பிரபந்தங்களாலே அறியவேண்டிய விஷயங்களை அறிவித்தார். அவரே ஜீவனுக்கு அடையவேண்டிய தன்மையை அடையும்படி செய்தார்.

(5) கர்மபந்தம் போகவேண்டுமென்று ஆசைப்படுகிறவர்கள் ஆசார்யனையே அடையவேண்டியது. அப்படிச் செய்யாமல் எம்பெருமானையே அடைவதாலும், புஸ்தகங்களைப் பார்ப்பதாலும் ஒருவித பிரயோஜனமுமுண்டாகாது என்று இந்த ஆழ்வாருடைய அனுஷ்டானம் காட்டுகிறது.

---

இந்த பிரபந்தத்தில் சொல்லிய ஸங்கதிகள்:— (1.) ஒருவன் மோக்ஷம் வேண்டுமென்று ஆசைப்பட்டால், ஒரு ஆசார்யனை அடையவேண்டியது. (2.) ஆசார்யனையும் அவனுடைய ஆசாரியர்களையும் எம்பெருமான் வரையில் (உள்பட) ஒவ்வொருவர் பெயரைச் சொல்லி வணங்க வேண்டியது. (3.) எம்பெருமானே ஆசார்யஉருவம் கொண்டு அவதாரம் செய்திருக்கிறான் என்று தெரிந்து கொண்டு, அவரிடத்தில் எம்பெருமானிடத்தில் போல மிகுந்த பக்தியைச் செய்ய வேண்டியது. (4.) ஆசாரியனை எப்போதும் கொண்டாடி, எல்லாரும் அவனை அறியும்படி அவருடைய குணங்களைப் புலம்பும்படியான பக்தியைச் சிஷ்யன் செய்ய வேண்டியது.

ஒருவன் ஆசார்யனை வணங்குகிற வழியைக் காட்டுவதற்காக ஒரு பாட்டை அருளிச் செய்கிறார்.

என்னுயிர்தந் தளித்தவரைச் சரணம் புக்கி
யானடைவே யவர்குருக்க ணிரைவ ணங்கிப்*
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி யாளவந்தார் மணக்கால் நம்பி*
நன்னெறியை யவர்க்குரைத்த வுய்யக் கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனை நாதன்*
இன்னமுதத் திருமகளென் றிவரை முன்னிட்
டெம்பெருமான் றிருவடிக ளடைகின்றேனே (3)

(ப-ரை.) என் உயிர் - என் ஆத்மாவை, தந்து - கொடுத்து, அளித்தவரை - ரக்ஷித்த என்னுடைய ஆசார்யனை, சரணம்புக்கு, வணங்கி, யான் - நான், அவர் குருக்கள் நிறை - அவரது ஆசார்யர்களின் வரிசையை, வணங்கி, பின் - பின்பு, பெரும்பூதூர் ஸ்ரீ பெரும்பூதூரில், வந்த - அவதாரஞ்செய்த, வள்ளல் - உதார குணமுடைய ஸ்ரீபாஷியகாரர், பெரியநம்பி, ஆளவந்தார், மணக்கால்நம்பி, நல் நெறியை - நல்ல வழியை, அதாவதுபிரபத்தியை, அவர்க்கு - மணக்கால் நம்பிக்கு, உரைத்த - உபதேசம் செய்த, உய்யக்கொண்டார், நாதமுனி, சடகோபன், சேனைநாதன் - விஷ்வக்ஸேநர், இன் அமுதம்- இனிமையான அமுதம் போல் போக்யையான, திருமகள் - பெரியபிராட்டி, என்று இவர்களை, முன்னிட்டு - முன்னாலே வணங்கி, எம்பெருமான், திருவடிகள் - திருவடிகளை, அடைகின்றேன்.

(கருத்து.) இந்தப் பாட்டில் சொன்னபடி ஒருவன் தினந்தோறும் ஆசார்யர்களின் வரிசையை அனுஸந்தானம் பண்ணவேண்டியது. நான் எம்பெருமானுக்காகவே இருக்கிறவன் என்ற இந்த அர்த்தத்தை எனக்குத் தெரிவித்து என்னை ஒரு பொருளாகச் செய்து என்னை ரக்ஷித்த என்னுடைய அடுத்த ஆசாரியனையும், அவருடைய ஆசாரியர்கள் வரிசையும், ஒருவர் பின்னால் ஒருவரை பிரீதியுடன் வணங்குகிறேன். இதன் பின்பு பெரும்பூதூரில் கிருபையினாலே வந்து அவதரித்த மஹோபகாரகனான ஸ்ரீபாஷியகாரர், பெரியநம்பி, ஆளவந்தார், மணக்கால் நம்பி, உய்யக்கொண்டார், நாதமுனி, நம்மாழ்வார், சேனைமுதலியார், பிராட்டி இவர்களை வணங்கி, எம்பெருமானை வணங்குகிறேன்.

குறிப்பு:— (1) நான் ஆசார்யனிடம் போவதற்கு முன்பு, எம்பெருமான் ஒருவன் இருக்கிறான் என்றும், நான் அவனுக்காகவே இருக்கிறேன் என்றும், ஆகையால் அவனுக்கு இஷ்டமான வேலைகளைச் செய்து அவனை ஸந்தோஷப் படுத்தவேண்டியது என்றும் அறியவில்லை. ஆகையினாலே அந்த காலத்தில் நான் இருந்தும் இல்லாதவனாகவே இருந்தேன். ஆசார்யனை அடைந்த பிறகு இந்த ஸங்கதிகளை அவருடைய உபதேசத்தால் தெரிந்து கொண்டு ஒரு வஸ்துவாக ஆனேன். இதைப் பாட்டில் "என் உயிர் தந்தளித்தவரை" என்று சொல்லியிருக்கிறது.

(2) ஸ்ரீபாஷியகாரர் அவதாரம் செய்ததற்கு முன்னாலே, எம்பெருமான் ஒருவன் இல்லை என்றும், வேறு தேவதைகளைப் பரதேவதை என்றும் வாதிகள் சொல்ல, நாம் அதை நம்பி இந்தப் பெரிய தனத்தை இழந்திருந்தோம். அவர் அவர்களுடைய குயுக்திகளைக் கண்டித்து, பிராட்டியும் எம்பெருமானுமாகிய மகாதனம் இருப்பதை நமக்குக் காட்டிக் கொடுத்தபடியால் இந்த உபகாரத்தை நினைத்து அவரை 'வள்ளல்' என்று சொன்னது.

(3) நன்னெறி— பக்தியைக் காட்டிலும் பிரபத்தியானது அகிஞ்சநனான நமக்குத் தகுந்த மோக்ஷமார்க்கமென்று உய்யக் கொண்டார், மணக்கால் நம்பிக்கு உபதேசித்தார்.

(4) பிராட்டி இனிமையான அமிருதம் போல் எம்பெருமானுக்கும் போக்யையாய் இருக்கிறதைக் கொண்டு "இன்னமுதத் திருமகள்" என்று சொல்லிற்று.

---

நம்முடைய ஆசாரியர்களில் எம்பெருமானாரும், ஆளவந்தாரும், நாதமுனிகளும் மிகுந்த உபகாரம் செய்திருப்பதால், அவர்களைத் தனியே அநுஸந்தானம் செய்வதற்காக மூன்று பாட்டுக்களை அருளிச் செய்கிறார்.

**ஆரண நூல்வழிச் செவ்வைய ழித்திடு மைதுகர்க் கோர்***
**வாரண மாயவர் வாதக் கதலிகண் மாய்த்தபிரான்***
**ஏரணி கீர்த்தி யிராமா னுசமுனி யின்னுரைசேர்***
**சீரணி சிந்தையி னோஞ்சிந்தி யோமினித் தீவினையே. (4)**

(ப-ரை.) ஆரணம் நூல் - வேதமாகிய சாஸ்திரத்தினுடைய, (அதாவது - பிரும்ம ஸூத்திரங்களுடைய) வழி செவ்வை - வழியின் செம்மையை, அழித்திடும் - கெடுத்தவர்களான, ஐதுகர்க்கு - ஹைதுகர்களுக்கு, அதாவது:— பிரமாணமாக ஒன்றையுங்கொள்ளாமல் வெறும் யுக்திகளைக் கொண்டு ஸாதிக்கிறவர்களுக்கு, ஓர்வாரணமாய் - ஒருயானையாக, அவர் வாதம் கதலிகள்- அவர்களுடைய வாதங்களாகிய வாழைகளை, மாய்த்த - நாசஞ் செய்த, பிரான் - உபகாரகனும், ஏர் அணி - உலகத்துக்குத் தகுந்த அலங்காரமான, கீர்த்தி - கீர்த்தியை யுடையவருமான, இராமானுசமுனியின், இன் உரை - இனிமையான ஸூக்திகளை, சேர் -

சேரும், சீர் அணி - சமம் தமம் முதலான குணங்களை அலங்காரமாகவுடைய, சிந்தையினோம் - மனதையுடைய நாம், இனி - இனிமேல், தீவினை- கெட்ட கர்மங்களை, சிந்தியோம்- நினைக்க மாட்டோம்.

(கருத்து.) எம்பெருமானார் காலத்திற்கு முன்பு, வேதாந்த சாஸ்திரமான பிரம்மஸூத்திரங்கள் நியாயங்களை ருஜுவாகக் காட்டுவதைத் தள்ளிவிட்டு, இதுகர்கள் தங்களுக்குத் தோன்றின மதத்திற்கு ஒத்து அந்த ஸூத்திரங்களுக்கு உரை எழுதி அதை நாசஞ்செய்தார்கள். ஒரு யானையானது ஒரு வாழைத் தோட்டத்தின் உள்புகுந்து வாழைகளை நாசம்செய்வதுபோல், எம்பெருமானார் அவர்களுடைய வாதங்களை நாசஞ்செய்து, ஸூத்திரங்களுக்கு அவைகளின் அக்ஷரங்களைஒத்து உரைஎழுதி, இப்படிப் பெரிய உபகாரம் செய்தார். அலங்காரமான கீர்த்தியை உடைய ராமாநுஜமுனியினுடைய இனிமையான பிரபந்தங்களை நாம் அநுஸந்தானம் செய்கிறோம். இனி சமம் தமம் முதலான நல்ல குணங்களை அலங்காரமாகவுடைய நம்முடைய மனதானது எம்பெருமானுக்கு இஷ்டமில்லாத கர்மங்களை நினைக்காது.

குறிப்பு:— (1.) எம்பெருமானாரை யானையாகச் சொன்னதினால், இவர் ஆரம்பித்ததை முடிக்க வல்லவரென்றும், இவரை ஒருவரும் கலக்கமுடியாதென்றும் ஏற்படுகிறது. இதுகரின் வாதங்களை வாழையாகச் சொன்னதினால், அவைகளில் ஸாரமில்லையென்றும், அவைகளை வருத்தமில்லாமல் நாசஞ்செய்யக் கூடும் என்றும் காட்டப்படுகிறது.

(2.) அவருடைய பிரபந்தங்களைப் படிப்பதினால் நம்முடைய மனதிற்கு அலங்காரமான சமம், தமம் முதலான குணங்களுண்டாகி, நாம் எம்பெருமானுக்கு வேலைக்காரன் என்று அறிந்து, அவனுக்கு இஷ்டமான வேலைகளையே நினைப்போம். வேறொன்றையும் நினைக்க மாட்டோம் என்று கருத்து.

---

நீளவக் தின்று விதிவகை யானினை வொன்றிய நாம்
மீளவந் தின்றும் வினையுடம் போன்றி வீழுந்துழலா
தாளவந் தாரென வென்ற ருடந்து விளங்கியசீர்
ஆளவந் தாரடி யோம்படி யோமினி யல்வழக்கே. (5)

(ப-ரை.) மீள வந்து - ஸம்ஸாரத்தில் அநாதிகாலமாக ஓடித் திரிந்து, இன்று - இந்தப் பிறப்பில், விதிவகையால் - ஒரு பாக்கியத்தால், நினைவு ஒன்றிய - நல்ல நினைவை அடைந்திருக்கிற, நாம், மீள - மறுபடியும், வந்து - ஸம்ஸாரத்தில் வந்து, இன்னும் - மேலுள்ள காலத்திலும், வினையுடம்பு - கர்மத்தினாலுண்டான உடம்பில், ஒன்றி - சேர்ந்து, விழுந்து - அது காரணமாகக் கீழ்ப் பிறப்புகளை யடைந்து, உழலாது - துன்பப் படாமலிருப்பதற்காக, ஆளவந்தார் என - ரக்ஷிக்கவந்தார் என்று சொல்லும்படி, வென்று - வாதிகளை ஜயித்து, அருள் தந்து - கிருபை செய்து, விளங்கிய, சீர் - குணங்களை யுடையவரான, ஆளவந்தார் - ஆளவந்தாருக்கு, அடியோம் - தாஸர்களான நாம், இனி - இனிமேல், அல்வழக்கு - அஸத்தான சாஸ்திரங்களை, படியோம் - படிக்க மாட்டோம்.

(கருத்து.) அநாதிகாலமாக (வெகுநாளாய்) ஸம்ஸாரத்தில் ஓடித்திரிந்த நாம் இந்தப் பிறப்பில் உடம்பைக் காட்டிலும் ஆத்மா வேறு என்று தெரிந்து பரலோகத்திற்கு வேண்டிய சிந்தையை (விசாரங்களை) அடைந்திருக்கிறோம். இது ஒரு பாக்கிய விசேஷத்தாலே உண்டாயிருக்கிறது. மறுபடியும் நம்மை ஒருவனுக்கும் உட்படாதவனென்று நினைத்து, வேறு தேவதைகளை அடைந்து, எம்பெருமானுக்கும் அவரிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கும் செய்யவேண்டிய கைங்கரியங்களில் ஆசையில்லாமல் கர்மங்களைச் செய்து, உடம்புகளை அடைந்து ஸம்ஸாரத்தில் மீண்டும் உழலாதபடி, ஆளவந்தார் வாதிகளை ஜயித்து, பிரபந்தங்களாலே நமக்கு உபகாரம் செய்திருக்கிறார். இதனால் விளங்கிய கல்யாணகுணங்களையுடைய அவருடைய திருவடிகளை அடைந்திருக்கிறோம். இனி நாம் ஒருவனுக்கும் சேஷன் அன்று என்றும், எம்பெருமானைத் தவிர வேறு இன்னொருவனுக்கு சேஷன் என்றும் எண்ணும்படி செய்யும் அஸத்தான சாஸ்திரங்களைப் படிக்கமாட்டோம்.

குறிப்பு:— (1) இப்படி வாதிகளை ஜயித்து உண்மையான நம்முடைய ஸ்வரூபத்தைத் தெரிவித்து நம்மை ரக்ஷித்தபடியால், அவருக்கு ஆள- ரக்ஷிக்க, வந்தார்- அவதரித்தவர் என்று திருநாமம் ஏற்பட்டது.

(2) வினையுடம்பு என்றது முன் வினையினால் உண்டான உடம்பு என்றும், பின் வினைக்குக் காரணமான உடம்பு என்றும் பொருள் கொடுக்கிறது.

---

காளம் வலம்புரி யன்னநற் காத லடியவர்குத்
தாளம் வழங்கித் தமிழ்மறை யின்னிசை தந்தவள்ளல்
மூளுந் தவநெறி மூட்டிய நாத முனிகழலே
நாளுந் தொழுதெழு வோம்நமக் கார்நிகர் நானிலத்தே. (6)

(ப-ரை.) காளம் வலம்புரி அன்ன - காளத்தையும் சங்கையும் போலிருந்த, நல் காதல் - நல்ல பக்தியையுடைய, அடியவர்க்கு - சிஷ்யர்களுக்கு, தாளம் வழங்கி, தாளவித்யையைச் சொல்லிக்கொடுத்து, தமிழ் மறை - தமிழ் வேதமான திருவாய்மொழியினுடைய, இன் இசை - இனிமையான கானத்தை, தந்த - உபதேசித்த, வள்ளல் - உதாரகுணமுடையவரும், மூளும் - செய்யத்தகுந்த, தவம் நெறி - தபோமார்க்கங்களை, மூட்டிய - உலகத்தில் பரவும்படி செய்தவருமான, நாதமுனி - நாதமுனியினுடைய, கழல் - திருவடிகளை, நாளும் - ஒவ்வொரு நாளும், தொழுது - ஸேவித்து, எழுவோம் - உஜ்ஜீவிப்போம், நால் நிலத்து - நான்கு வகையான நிலத்தில் நமக்கு, ஆர் - எவர், நிகர் - ஸமானமானவர்.

(கருத்து.) நாதமுனிகளுக்கு அவரிடத்தில் மிகுந்த பக்தியுள்ள இரண்டு சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர்கள் வாதிகளோடு வாதம் செய்யும்போது அவர்களுடைய குரலானது காளம், வலம்புரி என்னும் வாத்தியங்கள்போல் கம்பீரமான சப்தமுள்ளதாயும், வாதிகளுக்கு பயத்தை உண்டாக்கினதாயும் இருந்ததாலே, அவர்கள் அந்த வாத்தியங்களைப் போல் இருந்தார்கள். நாதமுனிகள் அவர்களுக்குத் தாளம் போடுகிற வித்யையையும், தமிழ்வேதத்தினுடைய இனிமையான கானத்தையும் சொல்லிக் கொடுத்து இவ்விதமாய் உபகாரம் செய்தார். மேலும் மோக்ஷத்தை வேண்டுகிறவர்கள் பிரீதியுடனே செய்யவேண்டிய தபோமார்க்கமாகிய பக்தி பிரபத்தி என்கிற இவைகளை உலகத்தில் பரவும்படி செய்தார். அந்த நாதமுனிகளின் திருவடிகளை ஒவ்வொரு நாளும் ஸேவித்து நாம் உஜ்ஜீவிக்கிறோம். இந்த நான்கு வகையான பூமியில் நமக்கு ஸமமானவர் எவர் இருக்கிறார்.

குறிப்பு:— (1.) எம்பெருமானிடத்தில்போல் ஆசாரியனிடத்தில் இருக்கவேண்டிய மிகுந்த பக்தியை இங்கே 'நற்காதல்' என்று சொல்லியிருக்கிறது.

(2.) நான்கு வகையான பூமியாவது:— மருதம், நெய்தல், குறிஞ்சி, முல்லை.

(3.) இந்த மூன்று பாட்டுக்களில் முதல் பாட்டில் மனதின் வேலையையும், இரண்டாவதில் வாக்கின் வேலையையும், மூன்றுவதில் உடம்பின் வேலையையும் சொல்லியிருக்கிறது. ஆனபோதிலும் மூன்று ஆசாரியர்களிடத்திலும் மூன்று வேலைகளையும் செய்ய வேண்டியது.

---

# ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரம்.

## 1. உபோத்காதாதிகாரம்.

இந்த முதல் அதிகாரத்தில் இந்தப் பிரபந்தத்தின் விஷயத்தையும், அதின் பிரயோஜநத்தையும் காட்டுவதற்கு முதலில் ஒரு பாட்டை அருளிச்செய்கிறார்.

**ஆளுமடைக்கல மென்றெம்மை யம்புயத் தாள்கணவன்**
**தாளிணை சேர்ந்தெமக் கும்மவை தந்த தகவுடையார்**
**மூளுமி ருட்கள்விள்ள முயன் றோதிய மூன்றினுள்ளம்**
**நாளுமு கக்கவிங் கேநமக் கோர்விதி வாய்க்கின்றதே. (7)**

(ப-ரை.) அம்புயத்தாள் - தாமரைப்பூவிலிருக்கிற பிராட்டியினுடைய, கணவன், எம்மை, அடைக்கலம் - ரக்ஷிக்கவேண்டிய வஸ்துவாக ஒப்புக்கொண்டு, ஆளும் என்று - ரக்ஷிக்குமென்று, தாள் இணை - (அவனுடைய) ஒன்றுக்கொன்று ஒப்பாயிருக்கிற திருவடிகளை, சேர்ந்து - உபாயமாக அடைந்து, எமக்கும் - நமக்கும், அவை - அந்த திருவடிகளை, தந்த - உபாயமாகக் காட்டிக் கொடுத்த, தகவு உடையார் - கிருபையையுடைய ஆசாரியர்கள், மூளும் - மேல் மேல் விருத்தியை யடையும், இருட்கள் - அஜ்ஞாநங்கள், விள்ள - விண்டுபோக, நாசமாக, முயன்று - முயற்சி செய்து, அதாவது ஆசைப்பட்டு, ஓதிய - சொல்லிக் கொடுத்த, மூன்றின் - மூன்று ரஹஸ்யங்களுடைய, உள்ளம் - உட்கருத்தை, நாளும் - ஒவ்வொரு நாளும், உகக்க - நினைத்து ஸந்தோஷப்பட, இங்கு - இந்த உலகத்தில், நமக்கு, ஓர் - ஒப்பில்லாத, விதி - பாக்கியம், வாய்க்கின்றதே - நாம் ஒரு பிரயத்நம் பண்ணாதிருக்கக் கிடைத்திருக்கின்றதே.

(கருத்து.) எம்பெருமான் அகிஞ்சநரான நம்மை ரக்ஷிக்க வேண்டிய வஸ்துவாக ஏற்றுக்கொண்டு, கைங்கரியரூபமான ரக்ஷணையைச்செய்வன் என்று நிச்சயமாய் எண்ணி, அவனுடைய இரண்டு திருவடிகளை ஆசாரியர்கள் அடைந்து, அவர்கள் சிஷ்யரான நமக்கும் அவைகளைக் கொடுத்தார்கள். இதை அவர்கள் வெறும் கருணையினாலே செய்தது. வளர்ந்து வரும்படியான

அஜ்ஞானமாகிற இருளானது போரும்படி, அவர்கள் ஆசைப் பட்டு நமக்கு மூன்று ரஹஸ்யார்த்தங்களை உபதேசித்தார்கள். எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலானவைகளைத் தெரியாத படி செய்கிற பிரகிருதிமண்டலத்தில் இருக்கும்போதே இந்த மூன்று ரஹஸ்யங்களுடைய ஸாரமான அர்த்தத்தை நாம் தினந்தோறும் நினைத்து ஸந்தோஷப்படும்படி ஒரு பாக்கியம் கிடைத்திருக்கிறது. இதற்குத் தகுந்த காரணம் நான் என்ன செய்தேன் என்று தெரியவில்லை. பலனே கிடைத்திருக்கிறது.

குறிப்பு:— (1.) தாளிணை சேர்ந்து- இதினாலே பிரபத்தி செய்வது இந்தப் பிரபந்தத்திற்கு ஒரு பிரயோஜநம் என்று காட்டப்படுகிறது.

(2.) மூன்றினுள்ளம் - இதினாலே இந்தப் பிரபந்தத்திற்கு ரஹஸ்யத்ரயார்த்தம் விஷயமென்றும், அதை அறிவது இதற்கு ஒரு பிரயோஜநமென்றும் காட்டப்படுகிறது.

(3.) ஆளும் - நாம் பிரபத்தி பண்ணினால், நம்முடைய பரத்தைத் தானே சுமக்க வேண்டியதென்று ஏற்றுக்கொண்டு, நம்மைத் தனக்கு இஷ்டமான வேலைகளைச் செய்யும்படி எம்பெருமான் செய்வன் என்று கருத்து. இதினாலே இந்தப் பிரபந்தத்திற்கு இதுவே பிரதானமான பிரயோஜநம் என்று காட்டப்படுகிறது. முன் சொன்ன இரண்டும் இதற்கு உட்பட்டவைகள்.

---

இந்த அதிகாரத்தில் சொல்லும் விஷயங்களாவன:— (1) நாம் எம்பெருமானுடைய ப்ரீதிக்கு விஷயமானவர்கள். அவன் ஸ்ரீவைகுந்தத்தில் ஆதிசேஷன் மேல் பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கிறான். அதை நாம் கண்டு ஆனந்தப்பட வேண்டுமென்று அவனுக்கு ஆசை இருக்கிறது. இதற்கு நித்யஸூரிகளைப் போல் நமக்கும் பாத்தியமுண்டு. (2) இதை யடையாமல் நாம் ஸம்ஸாரத்தில் விழுந்து கஷ்டப்படுகிறோம். இதற்குக் காரணம்- நம்மை உள்ளபடி அறியாமல் நம்மை உடம்பாகவே எண்ணிக்கொண்டு அதற்கு வேண்டிய கர்மங்களைச் செய்வது. (3) எம்பெருமான் ஏதோ ஒரு ஸுக்ருதத்தை வியாஜமாகக் கொண்டு நாம்பிறக்கும் போது நம்மைக் கடாக்ஷித்தால் நமக்கு ஆசாரிய ஸம்பந்தம் உண்டாகும். அவர் நம்முடைய ஸ்வரூபத்தைத் தெரியப் படுத்தி

எம்பெருமானிடம் நாம் போகும்படியான உபாயத்தைச் செய்வர். (4) அவர் உபதேசிக்கும் விஷயங்களெல்லாம் சுருக்கமாக மூன்று ரஹஸ்யங்களில் அடங்கியிருக்கின்றன. ஆகையால் அவைகள் இந்தப் பிரபந்தத்திற்கு விஷயம்.

திருவுடன் வந்த செழுமணி போற்றிரு மாலிதயம்
மருவிட மென்ன மலரடி சூடும் வகைபெறுநாம்
கருவுடன் வந்த கடுவினை யாற்றில் விழுந்தொழுகா
தருவுட னைந்தறி வாரருள் செய்ய வமைந்தனரே. (8)

(ப-ரை.) திருவுடன் வந்த - திருப்பாற்கடலைக் கடையும் பொழுது, பிராட்டியுடன் வெளியில் வந்த, செழுமணி போல் - சிலாக்கியமான கௌஸ்துபம் என்கிற மணிபோலே, திருமால் - லக்ஷ்மீபதியான எம்பெருமானுடைய, இருதயம் - ஹ்ருதயம், திருமார்பானது, மருவு இடம் - சேர்ந்து இருக்குமிடம், என்ன - என்று சொல்லலாம்படி ப்ரீதிக்கு விஷயராய், அடி - தாமரை போன்ற திருவடிகளை, சூடும் வகை - தலையில் வைத்துக் கொள்ளும் பிரகாரத்தை, பெறு நாம் - பெறும்படியான பாக்கியத்தை யுடைய நாம், கருவுடன் வந்த - கர்ப்பத்துடன் அதாவது— அநாதியாக வந்த, கடு - கொடுமையான, வினை யாற்றில் - கர்மங்களாகிற ஆற்றில், விழுந்து, ஒழுகாது - ஆற்றுடன் போகாதபடி, அருவுடன் - ஸூக்ஷ்மமான அர்த்தத்தோடு, ஐந்து - ஐந்து விஷயங்களை, அறிவார் - அறிந்த நம்முடைய ஆசாரியர்கள், அருள் செய்ய - கிருபை செய்ய, அமைந்தனர் - ஏற்பட்டார்கள்.

(கருத்து.) கௌஸ்துபமென்னும் ரத்தினம்போலே, லக்ஷ்மீ பதியான எம்பெருமானுடைய திருமார்பு நமக்கும் இருப்பிடம் என்னும்படி எம்பெருமானுடைய பிரீதிக்கு விஷயமானவர்கள் நாம். ஆகையால் அவனுடைய திருவடிகளை நகையைப்போல் நாம் தலையில் வைத்துக் கொள்ளத் தகுந்தவர்கள். அதாவது மிகவும் போக்கியமாக அவனுடைய கைங்கரியத்தைச் செய்யத் தகுந்தவர்கள். அநாதியாக வந்த கடுமையான கர்மமாகிய ஆற்றில் விழுந்து ஆற்றுடன் போகாதபடி, நம்முடைய ஆசாரியர்கள் நமக்குக் கருணை செய்ய ஏற்பட்டார்கள். அவர்கள் எம்பெருமானுக்கு உலகம் உடம்பு என்றும், அவன் அதற்கு

ஆத்மாவென்றும், அவனுக்கும் உலகத்திற்கும் உண்டாகி யிருக்கும் இந்த உறவையும், ஒருவன் அறியவேண்டிய ஐந்து அர்த்தங்களையும் அறிந்தவர்கள்.

குறிப்பு:— (1) திருவுடன் வந்த - என்பதினாலே லக்ஷ்மீயிடத்தில்போலே எம்பெருமானுக்குக் கௌஸ்துபமணியும் பிரீதிக்கு விஷயமென்று காட்டப் படுகிறது.

(2.) கௌஸ்துப மணியானது ஜீவாபிமானி தேவதை. அதைச் சொன்னதினாலே அதை எப்படி எம்பெருமான் பிரீதியுடன் மார்பில் பூட்டிக் கொண்டிருக்கிறானோ, அப்படியே. ஜீவனும் அவன் பிரீதிக்கு விஷயமென்று காட்டப்படுகிறது. இதனால் அதிகாரத்தில் சொல்லப்பட்ட முதல் விஷயம் சொல்லப் பட்டது.

(3.) "கருவுடன்" என்கிற பாட்டின்மூன்றாவது அடியாலே அதிகாரத்தின் இரண்டாவது விஷயமும் சொல்லப்படுகிறது.

(4.) "அருள் செய்ய வமைந்தனரே" என்பதினாலே அதிகாரத்தின் மூன்றாவது விஷயம் சொல்லப்பட்டது.

(5.) பாட்டின் நான்காவது அடியில் சொன்ன அரு என்பதும், ஐந்து என்பதும் மூன்றாவது நான்காவது அதிகாரங்களில் விரிவாய் சொல்லப் படுகின்றன. அவைகளெல்லாம் திருமந்திரமாகிய முதல் ரஹஸ்யத்தில் சுருக்கமாகக் காட்டப்படுன்றன. இதனால் அதிகாரத்தின் நான்காவது விஷயம் சொல்லப்பட்டது.

---

## 2. ஸார நிஷ்கர்ஷாதிகாரம்.

---

ஒருவன் படிக்கவேண்டிய புஸ்தகங்கள் கணக்கில்லாமலிருக்க, இந்த மூன்று ரஹஸ்யங்களையே இந்தப் புஸ்தகத்திற்கு விஷயமாகச் சொல்லக் கூடுமோ என்று ஸந்தேஹம் உண்டாக, இவைதான் மிகுந்த ஸாரமுள்ளவைகள்; மற்றவைகளில் அவ்விதமான ஸாரம் கிடையாதென்று இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிறார்.

இதில் சொல்லிய விஷயங்கள்:— வேதத்தில் சொல்லிய விஷயங்களுக்கு விரோதமான கல்விகளில் ஸாரமில்லை. அவைகள் விஷம்போல் கெடுதலையும் செய்யும்; வேதத்தில் முன் பாகத்தில்

இந்த உலகத்தில் அநுபவிக்கக் கூடிய போகத்திற்கு ஸாதனங் களைச் சொல்லும் இடத்தில் ஸாரம் கொஞ்சம். ஸ்வர்க்கம் முத லான இடங்களில் அநுபவிக்கக் கூடிய போகத்திற்கு ஸாதனத் தைச் சொல்லும் இடம் சிலருக்கு ஸாரமென்று தோன்றலாம். உடம்பைவிட்டு நீங்கின ஆத்மஸ்வரூபத்தின் போகத்திற்கு ஸாதனத்தைச் சொல்லுமிடம் அதைக் காட்டிலும் அதிக ஸார மென்று சிலர் எண்ணலாம். மோக்ஷத்தை ஆசைப்படுகிறவன் இவைகளைத் தள்ளிவிட்டு, வேதத்தின் பின்பாகத்தில் மிகவும் ஸாரங்களான இடங்களை எடுத்துக்கொள்ளவேண்டியது. பாற் கடலைக்கடையும்போது உண்டானவைகளை எல்லாம் தள்ளிவிட்டு தேவர்கள்அமிருதத்தையே எடுத்துக்கொண்டார்கள். அதுபோல.

இதைப் பாட்டால் அருளிச் செய்கிறுர்:—

**அமையா விவையென்னு மாசையி ஞலறு மூன்றுலகில்**
**சுமையான கல்விகள் சூழவந் தாலுந் தொகையிவையென்**
**றிமையா விமையவ ரேத்திய வெட்டிரண் டெண்ணியநம்**
**சமயா சிரியர் சதிர்க்கும் தனிநிலை தந்தனரே. (9)**

(ப-ரை.) இவை - நாம் படித்த கல்விகள், அமையா - போதாது, என்னும் ஆசையினுல், உலகில், சுமையான - பிரயோ ஜநமில்லாமல் சுமையாக மாத்திரமிருக்கிற, அறு மூன்று கல்விகள் - பதினெட்டு வித்யைகள், சூழ வந்தாலும் - முழு வதும் அடையப்பட்டாலும், இவை - இந்த வித்யைகள், தொகை என்று - இத்தனை வித்யைகள் படித்தான் என்று சொல்வதையே பிரயோஜநமாகவுடையவைகள் என்று நிச்சயித்து, இமையா - கண் கொட்டுதல் இல்லாதவர்களான, அதாவது - கொஞ்சகாலங்கூட ஜ்ஞாநக்குறைவில்லாதவர்களான, இமையவர் - நித்தியஸூரிகள், ஏத்திய - கொண்டாடிய, எட்டு - மூலமந்திரத்தையும், இரண்டு - த்வயம், சரமச்லோகம் என்கிற மற்ற இரண்டையும், எண்ணிய - எப்போதும் நினைத்துக்கொண்டிருப்பவர்களான, நம் சமயாசிரி யர் - நம்முடைய ஸித்தாந்தத்தை எங்கும் பரவும்படி செய்கிற ஆசாரியர்கள், சதிர்க்கும் - சதுரனுக - கெட்டிக்காரனுக இருக்கும், தனி நிலை - ஒப்பற்ற இருப்பை, தந்தனர் - கொடுத்தார்.

(கருத்து.) சிலர் நாம் படித்த கல்விகள் போதாதென்று எண்ணி, கல்விகளை மேல்மேலும் கற்கிறுர்கள். இப்படி ஆசைப்

பட்டுப் பதினெட்டு கல்விகளையும் ஒருவன் கற்றாலும், அவைகள் சுமையே யல்லாமல் அவைகளால் ஒரு பிரயோஜநமிமுல்லை. இவைகள் இத்தனைகல்விகள் படித்தானென்று சொல்லுவதற்காக மாத்திரம்பிரயோஜநப்படும். இப்படி நம்முடையஆசாரியர்கள் எண்ணி, திருமந்திரத்தையும் மற்ற இரண்டு ரஹஸ்யங்களையுமே அநுஸந்தித்தார்கள். நித்தியஸூரிகளும் இவைகளைக் கொண்டாடுகிறார்கள் என்றால், இவைகளின் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ? கொஞ்சமான பிரயாஸத்தாலே மிகவும் உயர்ந்த பலனைக் கொடுக்கக்கூடிய தனி நிலையை- அதாவது ஸாரமில்லாதவைகளைத் தள்ளி மிகவும் ஸாரமானவைகளை எடுத்துக் கொள்ளும்படியான இருப்பை— ஆசாரியர்கள் நமக்குக் கொடுத்தார்கள்.

## 3. பிரதாந பிரதிதந்திராதிகாரம்.

இப்படி இரண்டு அதிகாரங்களாலே மூன்று ரஹஸ்யங்களையே இந்தப் புஸ்தகத்திற்கு விஷயமாகச் சொல்லி, அவைகள் தெரிவிக்கிற அர்த்தங்களைச் சொல்ல ஆரம்பித்து, மூன்றாவதான இந்த அதிகாரத்தில் எம்பெருமானுக்கும் உலகத்திற்கும் இருக்கும் உறவை விரிவாய் அருளிச்செய்கிறார். இந்த உறவுதான் நம்முடைய மதத்திற்கு முக்கியமான விஷயம். அது வேறு ஒரு மதத்திலும் சொல்லப்படவில்லை.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்—எம்பெருமான் உலகத்திலுள்ள வஸ்துக்களை வஸ்துக்களாகப் பண்ணி, அவைகள் வஸ்துக்களாக இருக்கும்படி தாக்கிக் கொண்டிருக்கிறான். அவன் தாக்குகிறவன், உலகம் தாக்கப்படுகிறது. அவன் ஈசுவரனாயிருந்து அதை வேலை செய்யும்படி செய்கிறான். அவன் ஏவுகிறவன், அது ஏவப்படுகிறது. உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் அவனுடைய ஸொத்து. அப்படி யில்லாதது அவைகளில் ஒன்றுமில்லை. இப்படி எம்பெருமானுக்கும் உலகத்திற்கும் மூன்றுவிதமான உறவு உண்டு. அறிவுள்ளவனாலே தாக்கப்பட்டு, ஏவப்பட்டு அவனுடைய ஸொத்தாய் அவனுக்காகவே இருப்பதை உடம்பு என்றும், அப்படித் தாக்கி, ஏவி, அதைச் சொத்தாக உடையவனை ஆத்மாவென்றும் இரண்டு

சொற்களுக்கும் பொருள். ஆகையால் உலகம் எம்பெருமானுக்கு உடம்பு; அவன் அதற்கு ஆத்மா. இப்படி எல்லாருக்கும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாய் இருக்கையாலே அவனுக்கு ஸமமானவன் ஒருவனுமில்லை. இந்த மூன்று விதமான உறவானது கூலியைக் கொடுக்கும் யஜமானனுக்கும் அதை வாங்கிக்கொண்டு வேலை செய்யும் வேலைக்காரனுக்கும் உண்டான உறவுபோலன்று. அது எப்போதுமுள்ளது.

இதைப் பாட்டால் அருளிச்செய்கிறார்.

**நிலைதந்த தாரக னாய்நிய மிக்கு மிறைவனுமாய் [மாய்த்**
**இலதோன் றெனவகை யெல்லாந் தனதெனு மெந்தையு**
**துலையோன் றிலையென நின்ற துழாய்முடி யானுடம்பாய்**
**விலையின்றி நாமடி யோமென்று வேதியர் மெய்ப்பொருளே.**

(ப-ரை.) நிலை - இருப்பை, தந்த - கொடுத்த, தாரகனாய் - தூக்குகிறவனாய், நியமிக்கும் - ஏவுகிற, இறைவனுமாய் - ஈசுவரனுமாய், இலது - அவனுடைய ஸொத்தாக இல்லாதது, ஒன்று எனவகை - ஒன்றுமில்லையென்று சொல்லும்படி, தனது எனும் - தன்னுடையதென்று சொல்லும்படியான, எந்தையுமாய் - ஸ்வாமியுமாய், துலை ஒன்று - அவனுக்கு ஸமமானவன் ஒன்று, இலையென - இல்லை யென்று சொல்லும்படி, நின்ற - இருக்கிற, துழாய் முடியான் - திருத்துழாய் மாலையைத் தலையில் சூட்டிக் கொண்டிருக்கிற எம்பெருமானுடைய, உடம்பாய், விலையின்றி - நாம் அவனுக்குச் செய்யும் வேலைக்குக் கூலியில்லாமல், நாம் அடியோம் - நாம் அவனுக்கு வேலைக்காரர்கள், என்று, வேதியர் - வேதமறிந்தவர்களுடைய, மெய் பொருள் - உண்மையான பொருள்.

(கருத்து.) துளஸிமாலையைத் திருமுடியில் சூட்டிக்கொண்டிருக்கிற எம்பெருமான் இந்த உலகத்திற்கு இருப்பைக்கொடுத்து, அந்த இருப்பை நிலைநிற்கும்படி அதைத் தூக்கிக் கொண்டிருக்கிறான். அவன் ஈசுவரனாக இருந்து அதை ஏவுகிறான். உலகத்திலுள்ள எல்லாம் அவனுடைய ஸொத்து; அவன் அவைகளுக்கு ஸ்வாமி; அவைகளில் அவனுடைய ஸொத்தாக இல்லாதது ஒன்றுமில்லை. ஆகையினால் அவனுக்கு ஸமமானவர் ஒருவனுமில்லை. இப்படியிருக்கிற அவனுக்கு நாம் உடம்பாய் இருக்கிறோம்.

இதற்கு நாம் அவனிடம் ஒரு விலையையும் பெறவில்லை. அவனுக்கும் நமக்குமுள்ள இந்த உறவு நம்முடைய ஸ்வரூபத்தைப் பொறுத்திருக்கிறது. இது வேதத்தை அறிந்த பெரியோர்கள் நிச்சயமாக எண்ணிய உண்மையான பொருள். இப்படி வேதத்தின் பொருளை அறியாதவர்கள் வேதத்தின் உட்கருத்தை அறிந்தவர்கள் அன்று.

குறிப்பு:— (1) குடம் முதலானவைகளைத் தரை தூக்குவதுபோல், எம்பெருமான் உலகத்தைத் தூக்கவில்லை. தூக்குவது ஸ்வரூபத்தாலும், ஸங்கல்பத்தாலும்.

(2) எம்பெருமான் உலகத்தை ஏவுகிறது ஒரு யஜமானன் கூலி கொடுத்து வேலைக்காரனை ஏவுகிறதுபோல் அன்று. இந்த ஏவுதலுக்குக் கூலிகொடுப்பது முதலான உபாதிகள் ஒன்றுமில்லை.

(3) எல்லாம் எம்பெருமானுடைய ஸொத்து என்பதினால் அவைகளை அவன் தன் இஷ்டப்படி விநியோகம் செய்யலாம் என்று கருத்து.

(4) உடம்பு என்கிற சொல்லுக்குப் பொருள் கீழே எழுதப்பட்டிருக்கிறது.

## 4. அர்த்த பஞ்சகாதிகாரம்.

இப்படி எம்பெருமானுக்கும் உலகத்திற்குமுள்ள உறவைச்சொல்லி, இத்துடன் நாம் அறியவேண்டிய ஐந்து பொருள்களையும், அவைகளைப் பற்றி நாம் அறியவேண்டிய விஷயங்களையும் இந்த அதிகாரத்தில் அருளிச் செய்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— (1) பிராட்டியோடு கூடிய எம்பெருமானே மிகவும் உயர்ந்த புருஷார்த்தம். (அறிவுள்ளவனாலே அடையவேண்டிய வஸ்து). (2) அவன் திருவடிகளை உபாயமாகப் பற்றி அவனுக்குக் கைங்கரியம் செய்ய வேண்டியவன் ஜீவன். (3) அவன் செய்யும் உபாயம். (4) அந்த உபாயத்தினால் அவனுக்குக் கிடைக்கும் பலன். (5) இதுவரையில் அவன் அதை அடையாதிருப்பதற்குக் காரணம்— ஆகிய இந்த ஐந்தையும் நாம் அறியவேண்டியது.

எம்பெருமானை ஐந்து குணங்களைக்கொண்டு அறியவேண்டியது. அவையாவன:— ஸ்வரூபத்திலும் ஸ்வபாவத்திலும் வேறுபாடில்லாமை, தானாகவே பிரகாசிக்கும்தன்மை, ஒருவிதமான அளவில்லாமை, ஒருவிதமான தோஷமில்லாமை, ஆனந்தமாயிருப்பது. இப்படி அறியப்பட்ட எம்பெருமானுக்கு எல்லா விதங்களான நல்ல குணங்கள் உண்டென்றும், அந்த குணங்களைக் கணக்கிடமுடியாதென்றும், ஒவ்வொரு குணத்தினுடைய அளவை மனதாலும் சொல்லாலும் எட்டமுடியாதென்றும், அவனுக்குத்திவ்வியமங்களமான திருமேனியிருக்கிறதென்றும்,பிராட்டியோடு கூடவே எப்போதும் எழுந்தருளியிருக்கிறான் என்றும், அவனுக்கு உடம்பான இரண்டு விபூதிகள் இருக்கின்றனவென்றும், அவைகளில் ஸத்துவம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிறமூன்று குணங்களையுடைய பிரகிருதியும், அத்துடன் சேர்ந்திருக்கிற ஜீவன்களும் அவனுக்கு லீலை என்கிற ரஸத்தைக் கொடுக்கிறவைகள் என்றும், ஆகையாலே அவைகளுக்கு லீலாவிபூதி என்று பெயர் வந்ததென்றும், மற்றொரு விபூதியில் ஸத்துவம் என்கிற ஒரே குணமிருக்கிறதென்றும், அது அவனுக்கு போகமாகிய ரஸத்தைக் கொடுக்கிறதென்றும், அதில் காலத்தினால் உண்டாகும் வேறுபாடுகள் இல்லையென்றும், ஆகையால் அதற்கு நித்தியவிபூதி என்று பெயர் வந்ததென்றும், அவன் உலகத்தை உண்டுபண்ணி, ரக்ஷித்து, கடைசியில் அழித்து விளையாடுகிறான் என்றும் நாம் அறியவேண்டியது.

அவனையடையும் ஜீவனுடைய ஸ்வரூபம் அணுவென்றும், அவன் தானேதோன்றுகிறவனென்றும், தனக்கு ஆனந்தமாயிருக்கிறவனென்றும், ஸ்வபாவத்தில் ஒருவித தோஷமுமில்லாதவனென்றும் அவனை அறியவேண்டியது. அவன் செய்யும் உபாயம் ஏழாவது முதல் ஆறு அதிகாரங்களிலும், அவன் அடையும் பலன் இருபதாவது முதல் மூன்று அதிகாரங்களிலும் சொல்லப்படுகின்றன. அவன் இதுவரையில் எம்பெருமானை அடையாததற்குக் காரணம் கீழே முதல் அதிகாரத்தில் சொல்லப்பட்டது. அதாவது:— அவன் தன்னையுடம்பு என்றும், தான் ஒருவனுக்கும் உட்படாதவன் என்றும், தான் ஒருவனுக்குச் சேஷன் அல்லன் என்றும், எம்பெருமானைத்தவிர மற்றொருவனுக்குச் சேஷன் என்றும் எண்ணுகை. இதை அவித்யா என்றுசொல்லுகிறது. இதி

ணாலே அவன் உடம்பிற்கு வேண்டிய கர்மங்களைச் செய்கிறான். அவைகளாலே வாஸனை யுண்டாகிறது. அதினாலே கண் காது மூக்கு முதலானவைகளாலே அநுபவிக்கக்கூடிய வஸ்துக்களில் ருசியுண்டாகிறது. ருசியாலே மறுபடியும் கர்மங்களைச் செய்கிறான். அவைகளாலே அடிக்கடி உடம்போடு ஸம்பந்தம் ஏற்படுகிறது. இந்த அவித்யை, வாஸனை, ருசி, கர்மம், உடம்போடு ஸம்பந்தம்- இவைகள் சக்கிரம்போல்சுற்றிக் கொண்டுவருகின்றன. இவன் எம்பெருமானுடைய உத்திரவுகளை மீறிநடக்கிறான். அதினாலே அவனுடைய நிக்கிரஹம் வருகிறது. அதினால் உண்டாகும் தடைகள் விரிவாகச் சொல்லப் பட்டிருக்கின்றன.

ஒருவன் அறியவேண்டிய ஐந்து அர்த்தங்களையும் பாட்டாலே அருளிச்செய்கிறார்:—

**பொருளொன் றெனநின்ற பூமக ணாத னவனடிசேர்ந்**
**தருளொன் றுமன்பன வன்கொ ளுபாய மமைந்தபயன்**
**மருளொன் றியவினை வல்விலங் கென்றிவை யைந்தறிவார்**
**இருளொன் றிலாவகை யென்மனந் தேற வியம்பினரே. (11)**

(ப-ரை.) பொருள் ஒன்று என நின்ற - அவன் ஒருவனே நாம் அடையவேண்டிய வஸ்து என்று சொல்லும்படி யிருக்கிற, பூமகள் நாதன் - தாமரைப் பூவிலிருக்கிற பிராட்டியினுடைய நாதன், அவன் அடி சேர்ந்து - அவருடைய திருவடிகளை யடைந்து, அருள் ஒன்றும் - அவனுடைய கருணையோடு ஒன்றாயிருக்கிற, அன்பன் - அவனை யனுபவிக்கிறவனான ஜீவன், அவன் கொள் உபாயம் - அவன் பண்ண வேண்டிய உபாயம், அமைந்த பயன் - அந்த ஜீவனுடைய ஸ்வரூபத்துக்குத் தகுதியான பிரயோஜநம், மருள் ஒன்றிய - அவித்யையோடு கூடிய, வினை வல் - கர்மங்களாகிற பலமான, விலங்கு,— என்று இவை ஐந்து அறிவார் - என்கிற இந்த ஐந்து விஷயங்களையும் அறிந்த ஆசாரியர்கள், இருள் ஒன்று இலாவகை - அஜ்ஞானம் கொஞ்சமுமில்லாதபடி, என் மனம் தேற - என்னுடைய மனது ஸந்தேஹமில்லாமல் அறியும்படி, இயம்பினர் - சொன்னார்கள்.

(கருத்து.) இவன் ஒருவனே மிகவும் உயர்ந்த புருஷார்த்தமென்றும், எப்போதுமிருக்கிறவன் என்றும் சாஸ்திரங்களாலே சொல்லப்பட்ட எம்பெருமான் ஒன்று; அவன் திருவடிகளை உபா

யமாகப் பற்றி எப்போதும் அவனுடைய கருணைக்கு விஷயமாய்க் கொண்டு, அவனையே மிகுந்த பிரீதியுடன் அனுபவிக்கும் தன்மையுள்ள ஜீவன் இரண்டு; அவன் எம்பெருமானிடம் போவதற்காகச் செய்ய வேண்டிய உபாயம் மூன்று; அந்த உபாயத்தாலே அவனுக்குக்கிடைக்கும் பலன் நாலு; இந்தபலனை அடைவதற்குத் தடையாயிருப்பது அவித்யை, இதினாலே கர்மங்கள் செய்யப்பட்டு அவைகளாலே உறுதியாக அவன் கட்டுப்பட்டு இருப்பது ஐந்து; இந்த ஐந்தையும் அறிந்த என்னுடைய ஆசாரியர்கள் எனக்கு அஜ்ஞானமில்லாதபடி என் மனதானது ஸந்தேகமில்லாமல் அறியும்படி உபதேசம் செய்திருக்கிறார்கள்.

---

## 5. தத்துவ த்ரய சிந்தநாதிகாரம்.

---

இப்படி எம்பெருமானுக்கும் உலகத்திற்கும் இருக்கும் உறவையும், அத்துடன் ஒருவன் அறியவேண்டிய ஐந்து விஷயங்களையும் இரண்டு அதிகாரங்களாலே சொல்லி, நமக்குள்ள உடம்பே ஆத்மா என்கிற தப்பு எண்ணமும், நாம் ஒருவனுக்கு உட்பட்டவில்லை என்கிற தப்பு எண்ணமும் போவதற்காக, கீழ் அதிகாரத்தில் சொன்ன ஐந்து விஷயங்களில் அசேதனங்கள், சேதனர்கள், ஈசுவரன் என்கிற மூன்று தத்துவங்களுக்கு லக்ஷணங்களைச் சொல்லி, அவைகள் வெவ்வேறு என்று இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— சித்து, அசித்து, ஈசுவரன் என்று மூன்று தத்வங்கள் இருக்கின்றனவென்றும், அவைகளில் சித்து போகத்தைப் பெறுகிறவனென்றும், அசித்து அவனுக்கே போகத்தைக் கொடுக்கிறதென்றும், ஈசுவரன் இரண்டையும் நியமிக்கிறவனென்றும், சாஸ்திரம் சொல்லுகிறது. சித்து என்கிற ஜீவன் ஞானம் என்கிற குணமுள்ளவன். அந்த குணம் அசித்துக்குக் கிடையாது. ஆகையால் ஜீவனைச் சேதனன் என்றும், அசித்தை அசேதனம் என்றும் சொல்லுகிறது. ஜீவன் தானேபிரகாசிக்கிறவன். அவனுடைய குணமாகிய ஜ்ஞானம் மற்றவைகளைப் பிரகாசிக்கும்படி செய்கிறது. இந்த சக்தி அசித்துக்குக் கிடையாது. ஆகையால் ஜீவ

னையும், அவன் குணத்தையும் ஜ்ஞானமென்றும், ஸ்வயம்பிரகாச மென்றும், அசித்தை ஜடமென்றும் சொல்லுகிறது. ஜீவன் தனக்கே பிரகாசிக்கிறவன். இந்த ஸ்வபாவம் அவன்குணத்திற் கும் அசித்துக்கும் இல்லை. அவைகள் வேறு ஒருவனுக்குப் பிர காசிக்கின்றவைகள். ஆகையாலே ஜீவனைப் பிரத்தியக் என்றும், மற்ற இரண்டையும் பராக் என்றும் சொல்லுகிறது. இப்படி இவைகளைத் தெறிந்துகொண்டால், ஜீவன் ஸூக்ஷ்மமான பிரகி ருதியைக் காட்டிலும், அதிலிருந்து உண்டாகும் உடம்பு, இந் திரியங்கள், பிராணன்— இவைகளைக் காட்டிலும் வேறு என்றும் ஏற்படும். எம்பெருமான் ஜீவனைப் போல சேதநனுயும், ஞாந மாயும், பிரத்தியக்காயும் இருக்கிறுன். ஆனுல் ஜீவனுடைய ஸ்வ ரூபம் அணு. எம்பெருமானுடைய ஸ்வரூபம் விபு. அதாவது அவன் எங்குமிருப்பவன். ஜீவனுக்கு கர்மஸம்பந்தத்தை உடை யவனுயிருக்கும் தன்மை உண்டு. எம்பெருமானுக்கு அது கிடை யாது. ஏனென்றுல்? ஜீவன் எம்பெருமானுக்கு உட்பட்டவன். எம்பெருமான் ஒருவனுக்கும் உட்படாதவன். இந்த கர்மஸம் பந்தத்திற்கு யோக்கியதை ஜீவன் முக்தனுன பிறகும் தொடர்ந்து வரும். அவனை ஸம்ஸாரியாகப் பண்ணுவதற்கு ஸஹகாரியான கர்மமம் அப்போது இல்லை. சொன்ன இரண்டு காரணங்களாலே ஜீவனைக்காட்டிலும் எம்பெருமான் வேறு. ஜீவனும், அசித்தும் சேர்ந்த உலகத்தைக் காட்டிலும் எம்பெருமான் வேறு என்பது அவனுக்கும் உலகத்திற்கும் உண்டான உறவாலாயே ஏற்படும். மூன்று குணமுள்ள பிரகிருதியைக் காட்டிலும் வேறு இரண்டு அசேதனங்கள் உண்டு. அவைகளில் ஸத்துவமென்கிற ஒரேகுண முள்ளதாய் சுத்தஸத்துவமென்று பேர் பெற்றது ஒன்று. அது ஸ்வயம்பிரகாசம். மூன்று குணமுள்ள பிரகிருதியைப் போல் ஜடமன்று. அது ஆனந்தத்தைக் கொடுப்பது. முக்குணமுள்ள பிரகிருதி கர்மத்தினுல் கட்டுப்பட்டவர்களுக்கு ஸுகத்தையும், துக்கத்தையும் கொடுக்கும். கர்மம் போனுல் அதுவே ஸுகமாக இருக்கும். மற்றொரு அசேதனம் காலம்; இதற்கு ஆதியும் முடி வுமில்லை. அது எல்லாவற்றிற்கும் பிரகாரமாகவே இருக்கும். இந்த விஷயங்களைச் சொல்லி ஜீவன்கள் மூன்று வகையென்றும், அவர்களுக்கும் மூன்றுவிதமான அசேதனங்களுக்கும் ஸ்வரூ பத்தையும், இருப்பையும், அவைகள் செய்யும் வேலையையும்,

அவைகளுக்கு ஒன்றுக்கொன்று இருக்கும் வேறுபாடுகளையும், எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும், இருப்பையும், வேலைகளையும் விரிவாக நிரூபணம் செய்து, மூன்று தத்துவங்களை அறிவதின் பிரயோஜநத்தைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

தேற வியம்பினர் சித்து மசித்து மிறையுமென
வேறு படும்வியன் றத்துவ மூன்றும் வினையுடம்பில்
கூறு படுங்கோடு மோகமுந் தானிறை யாங்குறிப்பும்
மாற நினைந்தரு ளால்மறை நூல்தந்த வாதியரே. (12)

(ப-ரை.) மறை நூல் தந்த ஆதியர் - வேதமாகிய சாஸ்திரத்தை உபதேசம் செய்த முன்னிருந்த ஆசாரியர்கள், சித்தும் - சேதநனும், அசித்தும் - அசேதநமும், இறையும் - ஈசுவரனும், என - என்று சொல்லப்பட்ட, வேறுபடும் - ஒன்றுக்கொன்று வேறான, வியன் - ஆச்சரியங்களான, தத்துவம் - தத்துவங்கள், மூன்றும் - மூன்றையும், தேற - நாம் ஸந்தேஹமில்லாமல் அறியும்படி, அருளால்- கருணையினால், இயம்பினர்- சொன்னார்கள். எதற்காக என்றால்? வினை உடம்பில் - கர்மங்களால் வந்த உடம்பில், கூறுபடும் - தான் சேர்ந்து இரண்டையும் ஒன்றாக எண்ணும், கொடுமோஹமும் - கொடுமையான மயக்கமும், தான் இறையாம் குறிப்பும் - தானே ஈசுவரன் என்று யுக்தியால் செய்யும் தீர்மானமும், மாற - போகவேண்டுமென்று, நினைந்து, சொன்னார்கள்.

(கருத்து.) வேதமாகிய சாஸ்திரத்தின் அர்த்தத்தை உபதேசம் பண்ணின முன்னாலே இருந்த ஆசாரியர்கள் சித்து, அசித்து, ஈசுவரன் என்று ஒன்றுக்கொன்று வேறான ஆச்சரியங்களான மூன்று தத்துவங்களை வேதவாக்கியங்களில் சிலவற்றால் உண்டாகும் ஸந்தேஹம் தீரும்படி நமக்கு உபதேசித்தார்கள். இதின்பிரயோஜநம்- கர்மத்தினாலே உண்டான உடம்போடு நம்மை ஒன்றாக எண்ணி, நாளுக்கு நாள் திருடமாகவாகும் கொடுமையான மயக்கமும், ஈசுவரனென்று ஒருவன் இல்லை; நாமே ஈசுவரன் என்கிற எண்ணமும் மாறுவது. இந்த பிரயோஜநம் நமக்குக்

---

ஒரு ரோஜாப்பூ சிவப்பாய்க் காணப்படுகிறது. அந்த சிவப்பு என்கிற குணம் அதினுடைய பிரகாரம். ஒரு மாடானது ஒரு ரூபமுள்ளதாகவே தோன்றுகிறது. அந்த ரூபம், அதினுடைய பிரகாரம். ஜீவன் உடம்போடு கூடவே கண்ணுக்குப் படுகிறான். அது அவனுக்குப் பிரகாரம்.

கிடைக்க வேண்டுமென்று நம்மாசாரியர்கள் கருணையுடன் உபதே சித்தார்கள். அவர்கள் தங்களுக்குப் நல்லபெயராவது, லாபமாவது பூஜையாவது உண்டாகவேண்டுமென்று இப்படி உபதேசம் பண் ணவில்லை. அது கருணையினுலே செய்யப்பட்டது.

குறிப்பு:— கொடுமோஹம்- கொடுமையாவது ஜீவனை நரகத் தில் விழும்படி பண்ணி அவனைப் புருஷார்த்தங்களை இழக்கும்படி செய்வது.

---

## 6. பரதேவதா பாரமார்த்யாதிகாரம்:

---

இப்படி எம்பெருமானுக்கும் உலகத்திற்கும் உள்ள உறவை யும், அத்துடன் அறியவேண்டிய ஐந்துபொருள்களையும் சொல்லி, அவைகளில் மூன்று தத்துவங்களுக்கு லக்ஷணங்களைச் சொல்லி, அவைகள் ஒன்றுக்கொன்று வேறு என்று காட்டி, அவைகளில் ஈசுவரன் என்கிற தத்துவம் இன்னது என்று நாமறியவேண் டியதால் ஸ்ரீமானுன நாராயணனே அந்த ஈசுவரதத்துவமென் றும், அவனே மோக்ஷத்தைக் கொடுத்து முக்தர்களாலே அனுப விக்கப் படுகிறவன் என்றும், ஆகையாலே அவனே பர (எல்லா ருக்கும் மேல்பட்ட) தேவதை என்றும் இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிறுர்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்;— (1) சிலர் எல்லா ஆத்மாக்களும் ஒன்று என்றும், அவர்களில் தேவதைகள் எல்லாம்ஒன்று என்றும் சொல்லுகிறுர்கள். இதுகூடாது. ஏனென் ருல் ஒரு ஆத்மாவினுடைய ஸுகாநுபவமும் துக்காநுபவமும் மற்றவர்களின் அநுபவத்தைக் காட்டிலும் வேருக இருக்கின்ற ன. (2) பிரதாநரான பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்கிற மூன்று பேர் விஷயத்தில், அவர்கள் ஒரே தேவதை; மூன்று ரூபமாகத் தோன்றுகிறுர்கள் என்றும், மூன்று பேரும் ஸமர் என்றும், அவர்களில் பிரும்மா பரதேவதை என்றும், ருத்திரன் பரதேவ தை என்றும், அவர்களுக்கு மேற்பட்ட பரமசிவம் என்று ஒன்று இருக்கிறதென்றும் சொல்லுகிற பக்ஷங்களும் கூடா. பிரும்மாவும் ருத்திரனும் எம்பெருமானுலே உண்டுபண்ணப் பட்டவர்கள்.

அவர்கள் கர்மத்தினுலே கட்டுப்பட்டவர்கள்' எம்பெருமானுடைய மாயைக்கு உட்பட்டவர்கள். எம்பெருமானை ஆராதநம்செய்து தங்களுடைய பதவியைப் பெற்றவர்கள். அவர்கள் தங்களை ஆராதநம் பண்ணுகிறவர்களுக்குப் பலனைக் கொடுப்பது எம்பெருமானுக்கு அதீனம்; அவர்கள் கொடுக்கும் பலனும் அல்பம்; அவர்களை எம்பெருமானுடைய சரீரமென்று அறிந்து ஆராதநம் செய்தால், பலன் அதிகம். எம்பெருமானையே நேராக ஆராதநம் செய்தால் கிடைக்கும் பலன் இன்னும் அதிகயாக இருக்கும்' அவர்களுக்கு மோக்ஷம் கொடுக்க அதிகாரமில்லை. அவர்கள் தியானத்திற்கு விஷயமாயிருக்கத் தகுந்தவர்கள் அன்று; ஏனென்றால் சுபாச்ரயத்வம் என்பது அவர்களுக்கு இல்லை. அவர்களில் பிரும்மா ஒருவனைப் பிறக்கும்போது கடாக்ஷித்தால் அவனுக்கு ரஜோகுணம் மேலிடும். ருத்திரன் அப்போது கடாக்ஷித்தால் தமஸ்ஸு என்கிற குணம் மேலிடும். எம்பெருமான் கடாக்ஷித்தாலோ ஸத்துவ குணம் மேலிட்டு மோக்ஷத்திற்கு வேண்டிய வேலையை அவன் செய்வன். எம்பெருமானுடைய திருமேனியே தியானத்திற்கு விஷயம். அவனே மோக்ஷத்தைக் கொடுக்கிறவன். இந்த காரணங்களாலும் வேறு காரணங்களாலும் எம்பெருமானே பரதேவதை என்று தீர்மானம் செய்யப்படுகிறது. எம்பெருமானும் பிராட்டியும் சேர்ந்தே பரதேவதை.

இதைப் பாட்டாலே அருளிச்செய்கிறுர்.

**வாதியர் மன்னுந் தருக்கச் செருக்கின் மறைகுலையச்**
**சாது சனங்க ளடங்க நடுங்கத் தனித்தனியே**
**ஆதி யெனுவகை யாரண தேசிகர் சாற்றினர்நம்**
**போதம ருந்திரு மாதுட னின்ற புராணனையே.** (13)

(ப-ரை.) வாதியர் - யுக்திகளைக் கொண்டே வாதம் செய்கிறவர்கள், மன்னும் - தங்களிடத்தில் ஸ்திரமாயிருக்கும், தருக்கம் செருக்கின் - தர்க்கத்தினுடைய கர்வத்தினுலே, மறை குலைய - வேதங்கள் நடுங்கும் படியும், சாதுசனங்கள், அடங்க - எல்லாரும், நடுங்க - நடுங்கும்படியாகவும், தனித்தனியே, ஆதியெனுவகை - ஜகத்காரணனுகிய பரதேவதையென்று சொல்லாதபடி, ஆரண தேசிகர் - வேதத்தை உபதேசித்த நம் ஆசாரியர்கள், நம் - நம்முடைய, போது அமரும் திருமாதுடன் - தாமரைப் பூவிலிருக்

கும் பிராட்டியுடன், நின்ற - உலகத்தாருக்கு அடையவேண்டிய வஸ்துவாகவும் அடைவதற்கு உபாயமாகவுமிருக்கிற, புராணனை- எப்போதுமிருக்கிற எம்பெருமானை, சாற்றினர் - பரதேவதை யாகச் சொல்லிக் கொடுத்தார்கள்.

(கருத்து.) துர்வாதிகள் தங்களுக்கு யுக்திகளைச் சொல்ல ஸாமர்த்தியம் இருக்கிறதென்ற கர்வத்தினாலே, ஒவ்வொன்றைத் தனித்தனியாக பரதேவதை என்று சொல்லுகிறார்கள். இதினாலே வேதம் நடுங்குகிறது. தர்க்கத்தில் பழக்கமில்லாத ஆஸ்திகர்க ளெல்லாரும் நடுங்குகிறார்கள். இந்த நடுக்கம் போவதற்காகவும், வாதிகளுடைய துர்வாதங்கள் நிலை நிற்காதென்பதைக் காட்டுவ தற்காகவும் வேதத்தை உபதேசித்த நம்முடைய ஆசாரியர்கள் எம்பெருமானையே பரதேவதை என்றும், உலகத்திற்குக் காரணம் என்றும் சொல்லிக் கொடுத்தார்கள்.

குறிப்பு:— (1) 'மன்னும்' என்கிற சொல்லிற்கு ஸ்திரமான என்று பொருள், அதாவது— அதைக் கண்டிப்பது கஷ்டம்.

(2) புராணன்– பிரும்மாவையும் ருத்ரனையும் போல உண் டாகாமல் எப்போதும் இருக்கிற புருஷன் என்று பொருள்.

---

## 7. முமுக்ஷுத்வாதிகாரம்.

---

இப்படி இந்தப் புஸ்தகத்திற்கு விஷயமான மூன்று ரஹஸ் யங்கள் சொல்லுகிற தத்துவத்தை நாலு அதிகாரங்களாலே விரி வாய்ச் சொல்லி, மேலே ஜீவன்கள் எம்பெருமானை அடைவதற்கு உபாயங்களை ஆறு அதிகாரங்களாலே சொல்ல ஆரம்பித்து, உபா யம் செய்வதற்கு முன்னால் கர்மத்தினாலே உண்டான கட்டுப் போகவேண்டும் என்று ஒருவன் ஆசைப்பட வேண்டுமென்றும், அப்படி ஆசைப்படுகிற ஜீவனிடத்தில் என்ன அடையாளங்கள் இருக்க வேண்டும் என்றும் இந்த அதிகாரத்தில் அருளிச் செய்கிறார்.

இதில் சொல்லிய விஷயங்கள்:— முமுக்ஷு என்கிறவன் கர் மத்தினால் உண்டான கட்டிலிருந்து விடுபட ஆசைப்படுகிறவன். ஒருவனை முமுக்ஷு என்று அறிவதற்கு அடையாளங்கள்:—

(1)செய்யக்கூடாதென்று வேதம்சொல்லுகிற கர்மங்களைச் செய்யாதிருக்கை. (2) எம்பெருமானைத் தவிர வேறு பலன்களுக்கு ஸாதனமாக வேதம் சொல்லுகிற கர்மங்களில் வெறுப்பு. அவைகளால் உண்டாகும் பலன்கள் அல்பம். கொஞ்சகாலமே யிருக்கும்; கஷ்டப்பட்டுத் தேட வேண்டியவைகள்;. அவைகளின் அநுபவம் துக்கத்துடன் கலந்திருக்கும்; பிற்பாடும் துக்கம் உண்டாகும்; உயர்ந்த பலனை யடைவதற்குத் தடையாயிருக்கும்; கெடுதலான அபிமானத்தை உண்டாக்கும்; இவைகளை அடிக்கடி நினைத்தால் வெறுப்பு உண்டாகும். (3) ஜீவனுடைய ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவது. அதாவது— அவன் உடம்பு, இந்திரியங்கள், பிராணன் இவைகளைக் காட்டிலும் வேறுஎன்றும், எம்பெருமானுக்கே உட்பட்டவனென்றும், அவனுக்காகவே இருக்கிறவனென்றும் அறிகை. இதை மூலத்தில் ஐந்துவிதமான அஹங்காரங்களையும், ஐந்துவிதமான மமகாரங்களையும் விடவேண்டியது என்று சொல்லியிருக்கிறது. அஹங்காரம் என்பது ஒன்றை நான் என்று எண்ணுவது, மமகாரம் என்பது ஒன்றை எனதென்று எண்ணுவது. (4) விஷயபோகங்களுக்கு எதிர்த்தட்டான எம்பெருமானுடைய அநுபவத்தில் ருசியுண்டாவது. இந்த அடையாளங்களை உடைய முமுக்ஷுவானவன் ஸம்ஸாரத்திலடிச் சூட்டாலே எம்பெருமானிடம் போவதற்குத் துடிப்பன். இந்த அர்த்தத்தை ஆசாரியனுடைய கருணையினாலே அறியவேண்டியதென்று பாட்டாலே அருளிச்செய்கிறார்.

**நின்ற புராண னடியிணை யேந்து நெடும்பயனும்**
**போன்றுத லேநிலை யென்றிடப் பொங்கும் பவக்கடலும்**
**நன்றிது தீய திதென்று நவின்றவர் நல்லருளால்**
**வென்று புலன்களை வீடினை வேண்டும் பெரும்பயனே. (14)**

(ப-ரை.) நின்ற புராணன் - பிராட்டியுடன் கூடஇருக்கும் புராணபுருஷனாகிய எம்பெருமானுடைய, அடி இணை - இரண்டு திருவடிகளையும், ஏந்தும் - தலையில் சூட்டிக்கொள்வதாகிய, அதாவது— கைங்கரியம் செய்வதாகிய, நெடும் - நீண்ட, அதாவது— முடிவில்லாத, பயனும் - பிரயோஜநத்தையும், பொன்றுதலே - நாசமடைவதே, நிலை என்றிட - ஸ்வபாவமென்னும்படி, பொங்கும் - வரவர அதிகமாகும், பவம் கடலும் - ஸம்ஸாரமாகிற ஸமுத்

திரத்தையும், இவைகளில், இது நன்று - முன்னல் சொல்லப்பட்டது நல்லது, இது தீயது - பின்னல் சொல்லியது கெட்டது, என்று, நவின்றவர் - உபதேசித்த ஆசாரியர்களுடைய, நல் அருளால் - நல்ல கருணையால், புலன்களை - இந்திரியங்களை, வென்று - ஜயித்து, பெரும் பயன் - பெரிய புருஷார்த்தமான, வீடினை - மோக்ஷத்தை, வேண்டும் - அறிவுள்ளவன் ஆசைப்படுவன்.

(கருத்து.) எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் கைங்கரியம் செய்வதாகிற நீடித்திருக்கிற பலனையும், அழிவதே ஸ்வபாவமாய் வரவர அதிகமாகும் ஸம்ஸாரமாகிய ஸமுத்ரத்தையும் காட்டி, அவைகளில் முன் சொன்னது நல்லதென்றும், பின் சொன்னது கெடுதலென்றும் நமக்குக் கருணையாலே ஆசாரியர்கள் உபதேசித்தார்கள். இந்த உபதேசத்தைப் பெற்ற நாம் விஷயங்களில் போகாதபடி இந்திரியங்களை ஜயித்து மோக்ஷமாகிற பெரிய பலனை ஆசைப்படுவோம்.

குறிப்பு:— (1) 'நின்ற' என்பதற்கு முன் பாட்டில் திருமாதுடன் நின்ற என்பதைப் பார்த்து உரை எழுதியிருக்கிறது.

(2) நெடும் பயன்- முடிவில்லாமல் எப்போதும் தொடர்ந்து வரும் பலன் என்றபடி.

(3) பொன்றுதலே- ஸம்ஸாரத்தில் பிறப்பும் இறப்பதுமே ஸ்வபாவமாயிருப்பது.

(4) நல்லருளால்- அருளுக்கு நன்மையாவது ஒருவன் க்ஷேமத்தை அடையவேண்டுமென்கிற எண்ணத்தாலேயே வருவது.

---

## 8. அதிகாரி விபாகாதிகாரம்.

---

இப்படித் தத்துவங்களை அறிந்து, முமுக்ஷுக்களாய் மோக்ஷம் அடைவதற்கு உபாயங்களைச் செய்கிறவர்கள் இருவர். இதை இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிருர்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— (1) அதிகாரம் என்கிறது ஒரு பலத்தில் ஆசையும், அதற்கு ஸாதனமான கர்மத்தைச் செய்ய மூன்றுவிதமான ஸாமர்த்தியமும். அதாவது கர்மத்தைச் செய்யும் விதத்தை அறிகை; அதைச் செய்யும்

திறமை; அதைச் செய்ய சாஸ்திரம் இடம் கொடுப்பது. முமுக்ஷுவான அதிகாரி இருவர். ஒருவன் பிரபத்தியைச் செய்து அதிலுண்டாகும் பக்தியாலே மோக்ஷத்தை அடைகிறவன். மற்றொருவன் பிரபத்தியாலேயே அதாவது- பக்தியில்லாமலே மோக்ஷத்தை அடைகிறவன். இருவருக்கும் பிரபத்தி வேண்டியது. இருவர்களுக்கும் பக்தியுண்டு. அவர்களில் ஒருவனுக்கு பக்தியே பலன். மற்றொருவனுக்கு அது பலனுக்கு உபாயம்.

(2) பிரபன்னர்கள் மூன்றுவகைப்பட்டவர்கள். ஒருவன் முமுக்ஷுவாய் ஆசாரியனிடத்தில் பிரபத்தி செய்யும் விதத்தை அறிந்து, பிறகு அதைச் செய்கிறவன்; இவனை ஸ்வநிஷ்டன் என்று சொல்லுகிறது. இன்னொருவனுக்கு பிரபத்தி மந்திரத்தின் பொருள் நன்றாய்த் தெரியாது. ஆனால் அதைச் சொன்னால் எம்பெருமான் தன்னை ரக்ஷிப்பன் என்று ஆசாரியர்களின் உபதேசத்தால் அறிந்து அந்த மந்திரத்தைச் சொல்லிப் பிரபத்தி பண்ணுகிறான். இவனை உக்திநிஷ்டன் என்று சொல்லுகிறது. மற்றொருவன் இதற்கும் தகாதவன். அவன் எம்பெருமானுக்கு வேண்டியவரான ஆசாரியனிடம்போய் தனக்காகப் பிரபத்திசெய்யும்படி வேண்டுகிறவன். அவனை ஆசாரிய நிஷ்டன் என்று சொல்லுகிறது. இந்த மூன்றுபேர்களும் பலனை அடைவதில் வேறுபாடில்லை.

(3) பக்தியும் பிரபத்தியுமே மோக்ஷத்திற்கு உபாயங்கள். எம்பெருமானுடைய கோயில் இருக்கும் இடத்தில் வஸிப்பதும், ஒரு பாகவதனுடைய அபிமானத்திற்கு விஷயமாயிருப்பதும் மோக்ஷத்திற்கு நேரே காரணமன்று.

(4) பக்தியைப்போல எல்லாப் பலன்களுக்கும் பிரபத்தி ஸாதனம். இரண்டுக்கும் உள்ள வேறுபாடு— சக்தியுள்ளவனுக்கு பக்தி; அது இல்லாதவனுக்குப் பிரபத்தி. இந்த விஷயங்களைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

**வேண்டும் பெரும்பயன் வீடென் றறிந்து விதிவகையால்**
**நீண்டுங் குறுகியும் நிற்கும் நிலைகளுக் கேற்குமன்பர்**
**மூண்டோன்றின் மூல வினைமாற் றுதலின் முகுந்தனடி**
**பூண்டன்றி மற்றோர் புகலொன் றிலையென நின்றனரே. (15)**

(ப-ரை.) வேண்டும் பெரும் பயன் - ஒருவனுக்குக் கிடைக்க வேண்டிய பெரிய பிரயோஜநம், வீடு என்று - மோக்ஷமென்று, அறிந்து, நீண்டும் - வெகு காலத்தில் முடிக்கக் கூடியதாயும், குறுகியும் - கொஞ்ச காலத்தில் செய்யக்கூடியதாயும், நிற்கும், நிலைகளுக்கு - உபாயங்களுக்கு, விதிவகையால் - முன் செய்த புண்ணியவிசேஷத்தால், ஏற்கும் - தகுந்தவரான, அன்பர் - எம்பெருமானுடைய அநுபவத்தில் ஆசையுள்ளவர்கள், அவைகளில் ஒன்றில், மூண்டு - முயற்சி செய்து, மூலவினை - ஸம்ஸாரத்திற்குக் காரணங்களான கர்மங்களை, மாற்றுதலின், முகுந்தன் அடி பூண்டு அன்றி - எம்பெருமானுடைய திருவடிகளைப் பிரீதியுடன் பற்றி அன்றி, அதாவது-- பிரபத்தியைப் பண்ணுமல், மற்று ஓர் புகல் - வேறு ஓர் உபாயம், இலையென - இல்லையென்று சொல்லும்படி, நின்றனர் - நின்றார்கள்.

(கருத்து.) ஒருவன் வேண்டும் பெரிய பயன் மோக்ஷமென்று தெரிந்து, பக்தியையோ, பிரபத்தியையோ செய்கிறான். அவைகளில் ஒன்று நெடுநாள் செய்து முடிக்கவேண்டியது. மற்றொன்று ஸ்வல்பகாலத்தில் செய்யக் கூடியது. அவனுடைய முன் செய்த புண்ணியத்திற்குத் தகுந்தபடி ஒன்றைச் செய்யத் தகுதியும், அதற்குத் தகாமல் மற்றொன்றைச் செய்யத் தகுதியும் ஏற்படுகிறது. இப்படி இரண்டில் ஒன்றில் பிரயத்நம் செய்து ஸம்ஸாரத்திற்குக்காரணங்களான வினைகளைப் போக்கவேண்டியது. அப்படிச் செய்வதற்குப் பிரபத்தி செய்வதைக் காட்டிலும் வேறு உபாயம் இல்லை.

குறிப்பு:— பக்தி பண்ணுகிறவன் பக்திக்கு விரோதிகளான வினைகளைப் பிரபத்தியாலே விலக்குகிறான். எம்பெருமானை அடைவதற்கு விரோதிகளான வினைகளைப் பக்தியாலே போக்குகிறான். பிரபத்தி செய்கிறவன் எம்பெருமானை அடைவதற்கு விரோதிகளான எல்லா வினைகளையும் ஒரேகாலத்தில் பிரபத்தியாலே போக்குகிறான்.

---

## ௨. உபாய விபாகாதிகாரம்.

---

இப்படித் தத்துவங்களை அறிந்து முமுக்ஷுக்களான அதிகாரிகளுக்கு வேண்டிய மோக்ஷத்திற்கு உபாயங்களை இந்த அதிகாரத்தில் பிரித்துக்காட்டுகிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:—(1) உபாயம் இருவகைப்படும். முமுக்ஷுவானவன் செய்கிற பக்தியும் பிரபத்தியும் ஒரு ஜ்ஞாநவிசேஷம். இது இவனாலே செய்யப்படுவதினால் அதற்கு ஸாத்தியமான உபாயம் என்று பெயர். இவனுடைய உபாயமான ஜ்ஞாநத்திற்கு விஷயமாயும், பிறகு பலனைக் கொடுக்கிறவனாயுமிருப்பதால் எம்பெருமானும் உபாயம். அவன் இவன் செய்யும் வியாபாரத்திற்கு முன்னேயே இருப்பதால் அவன் ஸித்தமான உபாயம்.

(2) பக்தியோகமாவது எம்பெருமானுடைய ஸ்வரூபம், குணங்கள், ரூபம் முதலானவைகளைத் தியானம் செய்வது. எண்ணெய்யை ஒரு கிண்ணத்திலிருந்து கீழே கொட்டும்போது அது ஒரே தாரையாய் விழுகிறது. அதுபோல இந்த தியானத்தில் வேறு நினைவு கலப்பில்லாமல் இருக்கவேண்டியது. கண்ணாலே பார்த்தால் எப்படித் தெளிவாக இருக்குமோ, அப்படியே இந்த தியானமும் தெளிவாய் இருக்கவேண்டியது. அதுவும் மிகுந்த பிரீதிரூபமாய் இருக்கவேண்டியது. இவ்விதமான தியானத்திற்கு பரபக்தி என்று பெயர்.

3. இந்த பக்தியோகம் உண்டாவதற்கு உபாயங்கள் கர்மயோகமும், ஜ்ஞாநயோகமும். கர்மயோகமென்பது ஒருவன் தன்னையும் எம்பெருமானையும் உள்ளபடி அறிந்து, பலன்களில் ஆசையில்லாமல் எம்பெருமானுடைய ஆராதநமாகச் செய்யும் கர்மம் (வேலை). இதைச் செய்யும்போது "நான் இதைச் செய்கிறேன்" என்கிற எண்ணத்தையும், 'இது என்னுடைய கர்மம்' என்கிற எண்ணத்தையும் விட்டு, அதை எப்போதும் செய்துகொண்டு வரவேண்டியது. இத்துடன்கூட நித்தியங்களான கர்மங்களையும் நைமித்திகங்களான கர்மங்களையும், காமியகர்மங்களையும் சேர்த்து முன்சொன்னபடி பலன்களில் ஆசையில்லாமல் செய்யவேண்டியது. நித்தியகர்மமென்பது எம்பெருமான் செய் என்று கட்டளையிட்டது. அதைச் செய்யாவிட்டால் எம்பெருமானுக்குக் கோபம் உண்டாகும். நைமித்திகமாவது கிரஹணம் முதலான நிமித்தம் (காரணம்) உண்டானால் செய்யவேண்டிய கர்மம். காமியமென்றால் ஒரு பலனுக்குக் காரணமாகச் சொல்லப்பட்ட

கர்மம். அதைச் செய்யவேண்டிய நிர்ப்பந்தமில்லை. முமுக்ஷு வானவன் அதைச் செய்தால் அந்தப்பலனில் ஆசையை விட்டு அதை எம்பெருமானுடைய கைங்கரியமாகச் செய்யவேண்டியது.

(4) ஜ்ஞாநயோகமாவது— ஒருவன் தன்னுடைய ஸ்வரூபத்தை இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருப்பது. தன் ஸ்வரூபமாவது— உடம்பு, கண் முதலான இந்திரியங்கள், பிராணன்— இவைகளைக் காட்டிலும் தான் வேறு; தான் எம்பெருமானாலே தாங்கப்படுகிறவன், வண்டியில் பூட்டின மாடு வண்டிக்காரனுக்கு உட்பட்டிருப்பதுபோல் தான் எம்பெருமானுக்கு உட்பட்டிருப்பது; தான் எம்பெருமானுக்காகவே இருப்பது; இந்த மூன்று விஷயங்களைக்கொண்டு தான் எம்பெருமானுக்கு உடம்பு; எம் பெருமான் தனக்கு ஆத்மா, இவ்விதமான தன் ஸ்வரூபத்தை இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருப்பது. எவன் இந்திரியங்களை ஜயித்திருக்கிறானோ அவன்தான் இந்த ஜ்ஞாநயோகத்தைச் செய்யத் தகுந்தவன்.

(5) சிலர் ஜ்ஞாநயோகமில்லாமலே கர்மயோகத்தினாலேயே தம்முடைய ஸ்வரூபத்தைப் பார்க்கிறார்கள். ஜ்ஞாநயோகத்தினாலும் அதைப் பார்க்கலாம். இப்படி ஸ்வரூபத்தைப் பார்ப்பது யோகம் செய்யும்போது நேரிடும். யோகமென்பது அசங்காமல் உட்கார்ந்துகொண்டு, இந்திரியங்கள் தங்களுடைய வேலையைச் செய்யாதபடி அவைகளை அடக்கி. மனதைத் தியானம் செய்ய வேண்டிய விஷயத்தில் நிறுத்தி, அதையே இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருப்பது. இப்படி யோகம் செய்யும்போது தன் ஸ்வரூபத்தை ஒருவன் உள்ளபடி பார்க்கிறான். அது மிகவும் இன்பமாக இருக்கும், அதில் அகப்படாமல் பக்தியோகம் செய்ய ஆரம்பிக்கவேண்டியது. இதைச் செய்யும்போது தன்னுடைய ஸ்வரூபத்தைப் பார்ப்பது வேண்டியிருப்பதினாலே அது பக்தியோகத்திற்கு உதவி செய்கிறது. உதவி செய்கிறதற்கு அங்கமென்றும் உதவியைப் பெற்றுக்கொள்ளுமதற்கு அங்கி என்றும் பெயர்.

(6) இந்த பக்தியோகத்தை வைகுந்தத்திற்குப் போகும் வரையில் ஒவ்வொரு நாளும் செய்யவேண்டியது. இத்துடன் தன்னுடைய வர்ணத்திற்கும் (ஜாதிக்கும்) ஆச்ரமத்திற்கும் ஏற்

பட்டிருக்கிற கர்மங்களைச் செய்துகொண்டு வரவேண்டியது. அவைகளைச் செய்வதால் எம்பெருமானுக்குப் ப்ரீதி உண்டாகி பக்தியோகம் செய்கிறவனுக்கு ரஜஸ், தமஸ் என்கிற குணங்கள் அடங்கி ஸத்துவகுணம் மேலிடும். அதினாலே பக்தியோகம் வளர்ந்துவரும். இந்த உதவியினாலே அந்தக் கர்மங்கள் அங்கம், பக்தி யோகம் அங்கி.

(7) பக்தியோகம் வளர்ந்துவரும்போது, எம்பெருமானைப் பார்க்கவேண்டுமென்று ஆசை உண்டாய் ஒருவனை அழும்படி செய்யும். அப்போது எம்பெருமான் தன்னை உள்ளபடி ஒரு க்ஷணம் காட்டுவன். இப்படி அவனைப் பார்ப்பதற்கு பரஜ்ஞானம் என்றுபெயர். இது உண்டானபோது எம்பெருமானை விட்டு ஒரு க்ஷணமும் பிரிந்திருக்கமுடியாதபடியான ஆவல் உண்டாகும். அதற்குப் பரமபக்தி என்று பெயர்.

இந்த விஷயங்களைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

நின்ற நிலைக்குற நிற்குங் கருமமு நேர்மதியால்
நன்றெென நாடிய ஞானமு நல்குமுட் கண்ணுடையார்
ஒன்றிய பத்தியு மொன்றுமி லாவிரை வார்க்கருளால்
அன்று பயன்றரு மாறு மறிந்தவ ரந்தணரே. (16)

(ப-ரை) நின்ற நிலைக்கு - இந்திரியங்களையடக்கமுடியாமல் ஒருவனிருக்குமிருப்புக்கு, உற நிற்கும் - தகுதியாக இருக்கிற, கருமமும் - கர்மயோகத்தையும், நேர்மதியால் - கூர்மையான புத்தியாலே செய்யக்கூடியதும், நன்று என நாடிய - ஆத்மாவைப் பார்ப்பதற்கு அடுத்த உபாயமாக இருப்பதால் நல்லதென்று தேடப்பட்டதாயுமிருக்கிற, ஞானமும் - ஞானயோகத்தையும், நல்கும் - ப்ரீதியுடன் கூடிய, உள்கண் உடையார் - உள்ளேயிருக்கும் ஆத்மாவைப் பார்ப்பவர்கள், ஒன்றிய பத்தியும் - தன்னையே மறந்து தியானம்பண்ணப்பட்ட விஷயத்தோடு சேர்ந்திருக்கும்படியான பக்தியோகத்தையும், ஒன்றும் இலா - இவைகளில் ஒன்றுஞ் செய்யமுடியாதவர்களுக்கும், விரைவார்க்கு - பக்தியோகத்திலுள்ள தாமதத்தைப் பொறுக்கமுடியாதவர்களுக்கும், அருளால் - கருணையால், அன்று - அவர்கள் கேட்டபொழுதே, பயன் தருமாறும் - பிரயோஜநத்தைக் கொடுக்கும் உபாயத்தையும் அதாவது பிரபத்தியையும் ஆகிய இவைகளை, அறிந்தவர், அந்தணர் - வேதமறிந்தவர்கள்.

(கருத்து) கர்மயோகம் முதலானவைகளை இந்த அதிகாரத்தில் சொன்னபடி எவர்கள் அறிந்தவர்களோ, அவர்களே வேதத்தை நன்ருய் அறிந்தவர்கள். அதிகாரத்தில் சொல்லியவைகளாவன:— (1) கர்மயோகம் இதை மூன்று வர்ணத்திலுள்ள எவனும் செய்யலாம். (2) இந்திரியங்களை ஜயித்து மனதை ஒன்றில் நிலை நிறுத்தி கூர்மையான புத்தியோடு செய்வது ஜ்ஞாநயோகம். இது ஒருவன் தன் ஸ்வரூபத்தைப் பார்ப்பதற்கு அடுத்த உபாயமாகையால், பாட்டில் 'நன்று என' நல்லது என்று சொல்லப்பட்டது. (3) ஒருவன் தன் மனதை தன் ஸ்வரூபத்தில் நிறுத்தி யோகம் செய்வது. இதைச் செய்பவனை "உட்கண்ணுடையார்" உள்ளே கண்ணுடையார் என்று பாட்டு சொல்லுகிறது. இது மிகுந்த பிரீதியைக் கொடுக்குமானதாலே அதுவே பிரியமாக இருக்கும். அதை 'நல்கும்' என்று பாட்டு சொல்லுகிறது. (4) பக்தியோகம். இதைச் செய்கிறவன் அத்துடன் ஒன்றி—சேர்ந்து இருக்கிருன். அவன் வேறென்றையும் நினைக்காமல் இதையே பிரீதியுடன் செய்கிருன். (5) மேலே சொன்னவைகளில் ஒன்றும் இல்லாமல் உடனேயோ, அல்லது இந்த தேஹம் போனபின்போ மோக்ஷம் வேண்டுமென்று அவஸரப்படுகிறவர்களுக்கு அவர்கள் கேட்டபோதே கிருபையினுலேயே மோக்ஷமாகிய பலனைக் கொடுக்கும் உபாயம் பிரபத்தி. இவைகளை அறிந்தவர்களே வேதமறிந்தவர்கள்.

---

## 10. பிரபத்தியோக்கியாதிகாரம்.

---

இப்படித் தத்துவங்களை அறிந்து, முமுக்ஷுக்களான அதிகாரிகள் செய்யும் உபாயங்களில் லகுவான பிரபத்திக்கு எவன் தகுந்தவன் என்று இந்த அதிகாரத்தில் சொல்லப்படுகிறது.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— (1) அதிகாரமென்பது ஒரு பலனில் ஆசையும், அதற்கு உபாயத்தைச் செய்ய ஸாமர்த்தியமும். ஸாமர்த்தியமென்பது உபாயத்தைச் செய்யும் வழியை அறிவதும், அதைச் செய்யும் சக்தியும், அதைச்

செய்யத்தகுந்த ஜாதியில் பிறந்திருப்பதும், (2)மோக்ஷம் கிடைக்க வேண்டுமென்றும் ஆசையானது பக்தி செய்பவனுக்கும் பிரபத்தி செய்கிறவனுக்கும் உண்டு. ஆனல் பக்தியோகம் செய்யும் வழியை அறியாதவன், அறிந்தாலும் அதைச் செய்யச் சக்தியில்லாதவன், அறிவும் சக்தியுமிருந்தாலும் பக்தியோகத்தைச் செய்ய சாஸ்திரத்தினல்அநுமதிகொடுக்கப்படாதவன், இவைகளெல்லாம் இருந்தாலும் பக்தி யோகத்திலுள்ள தாமதத்தைப் பொறுத்துக் கொள்ளாமல் உடனே பலன் கிடைக்கவேண்டும் என்கிற ஆசை உடையவன், ஆகிய நால்வரும் பிரபத்திக்கு அதிகாரிகள். இப்படி பக்தியோகம் பண்ணத்தகாதவனுக இருப்பதை ஆகிஞ்சந்யம் என்று சொல்லுகிறது. இவன் மோக்ஷத்தில் ஆசை உடையவனுய் அதற்கு ஏற்பட்ட உபாயமான பக்தியோகம் செய்யமுடியாதவனுய் இருப்பதினலே மிகவும் வருத்தப்பட்டு அழுவன். இப்படி அழுகையே இதற்கு அதிகாரம். (3) இத்துடன் கூட பிரபத்தி செய்கிறவன் மோக்ஷம் தவிர வேறு பிரயோஜநத்தையும் தேடான். அதற்காக வேறு தேவதையினிடம் போகவும் மாட்டான். இப்படிப்பட்டவனுக்கு அநந்யகதிகத்வம் உண்டென்று சொல்லப்படுகிறது. (4) மோக்ஷத்தை ஆசைப்படுவதுடன்கூட கொஞ்சகாலம் இங்கே இருக்கவேண்டுமென்றுவது அதுபோல் வேறொன்றையாவது ஆசைப்பட்டால் மோக்ஷம் தாமதித்து வரும்.

இந்த விஷயங்களைப் பாட்டாலே அருளிச்செய்கிருர்.

**அந்தண ரந்திய ரெல்லையி னின்ற வனைத்துலகும்**
**நொந்தவ ரேமுத லாகநு டங்கி யனன்னியராய்**
**வந்தடை யும்வகை வண்டக வேந்தி வருந்தியநம்**
**அந்தமி லாதியை யன்ப ரறிந்தறி வித்தனரே.** (17)

(ப-ரை) அந்தணர்- பிராமணர், அந்தியர் - கடைசி ஜாதியிலிருப்பவர், எல்லையில்- இந்த இரண்டு எல்லைகளுக்குள்ளே நின்ற - அவர்களுள் பட இருக்கும், அனைத்து உலகும் - உலகத்திலுள்ள எல்லாரும், நொந்தவரே - வருத்தப்பட்டவர்களே, முதலாக, நுடங்கி - இளைத்துப் போய், அனன்னியராய் - வேறு பலனையும், வேறு தேவதையையும் தேடாதவராய், வந்து, வண் தகவு ஏந்திய - மிகுந்த கருணையுள்ளவனுய், வருந்திய - நம்மை இர

க்ஷிப்பதற்காகப் பிரயாஸப்படுகிற,நம்அந்தம் இல் ஆதியை - முடி வில்லாமல் ஜகத்துக்குக்காரணனுனநம்முடைய ஸ்வாமியை, அடையும் வகை - அடையும் வழியை, அன்பர் - குருவினிடத்திலும் எம்பெருமானிடத்திலும் மிகுந்த பக்தியுள்ள ஆசாரியர்கள், அறிந்து-தாங்கள் தெரிந்துகொண்டு, அறிவித்தனர் - நமக்குச் சொல்லிக் கொடுத்தார்கள்.

(கருத்து.) உயர்ந்த ஜாதியில் பிறந்தவன் தான் பிரபத்தியைச் செய்யலாம், தாழ்ந்த ஜாதியில் பிறந்தவன் பிரபத்தியைச் செய்ய லாகாதென்று நியமமில்லை. இந்த இருவர்களும் இவர்களுக்கு நடுவில் உள்ள எல்லா ஜனங்களும் பிரபத்தி செய்யத்தகுந்தவர்கள். அவர்களில் எவன் ஸம்ஸாரத்தினுல் வருந்தி எப்போது மோக்ஷம் கிடைக்குமென்று பிரபத்தி பண்ணுகிருனே, அவன் முக்கியமான அதிகாரி. அவர்களிலும் உடனே மோக்ஷம் வேண்டுமென்கிறவர்கள் ஆர்த்தர்கள். அவர்கள் இன்னும் முக்கியமான அதிகாரிகள். இந்த உடம்பு போனபிற்பாடு மோக்ஷம் வேண்டுமென்கிறவர் திருப்தர். அவர்கள் அவ்வளவு முக்கியமாகிய அதிகாரி அன்று. பிரபத்தி பண்ணுகிற எல்லாருக்கும் வேண்டிய அதிகாரம் - பக்தியோகம் பண்ணமுடியாமையால் வருத்தப்பட்டு உடம்பு இளைத்துப்போயிருப்பதும், வேறு பிரயோஜனத்தைத்தேடாமையும், வேறுதேவதையிடம் போகாமையும். இப்படி பிரபத்தி செய்வதற்குத்தகுதியாக எம்பெருமான் இருப்பதை நம்முடைய ஆசாரியர்கள் தாங்களறிந்துகொண்டு நமக்கும் அதைச் சொல்லிக்கொடுத்திருக்கிருர்கள். எம்பெருமான் இருப்பதாவது.—மேன்மையான கிருபை உள்ளவனுயிருப்பது. மேன்மையாவது, நாம் என்ன குற்றம் செய்தாலும் அதினுல் கலங்காமை; அவன் நம்மை ரக்ஷிப்பதற்கு எங்கே இடம் அகப்படப்போகிறதென்று யாதிருச்சிகமான ஸுக்ருதம் முதலியவைகளைத் தேடிக்கொண்டிருப்பது. அந்தமில்—முடிவில்லாமை— அதனுலே அவனிடம் போனவன் திரும்பிவருவனேவென்று ஸந்தேஹப்படவேண்டியதில்லை. அவன் ஆதி—உலகத்தை உண்டுபண்ணினவன், உண்டுபண்ணினவனே காப்பாற்றத் தகுந்தவன்: அவன் வருந்துகிருன், அவன் நம்மை ரக்ஷிப்பதற்காக மிகுந்த பிரயாஸை எடுத்துக்கொள்கிருன்.

---

## 11. பரிகரவிபாகாதிகாரம்.

இப்படி தத்துவங்களை அறிந்து முமுக்ஷுக்களான அதிகாரிகளில் லகுவான பிரபத்தியைச் செய்யத் தகுந்தவன், அந்த பிரபத்தியைச் செய்யும்போது அதற்கு வேண்டிய அங்கங்களை அறியவேண்டியது. அவைகளை இந்த அதிகாரத்தில் அருளிச் செய்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— (1) பிரபத்திக்கு ஐந்து அங்கங்கள் உண்டு. அவையாவன:— (1) அநுகூலமாய் இருப்பதாய் எண்ணுவது; (2) பிரதிகூலமாய் இருப்பதை விடுவது; (3) தன்னுடைய இஷ்டத்திற்கு ஸாதநமான உபாயமில்லாமல் வருத்தப்படுவதைக்காண்பிக்கை. இதற்குக் கார்ப்பண்யம் என்று பெயர்; (4) கேட்டுக்கொண்டால் ஸமர்த்தனான ஒருவன் தன்னை ரக்ஷிப்பன் என்னும் நம்பிக்கை. இது ஒருவழியாலும் கலங்காதிருக்கவேண்டியது. அப்படியிருப்பதற்கு மஹாவிச்வாஸம் என்று பெயர்; (5) ரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்திப்பது.

2. இந்த ஐந்து அங்கங்களில்லாமல் பிரபத்தி கிடையாது. இதைச் சக்ரவர்த்தி திருமகனிடத்தில் விபீஷணன் செய்த பிரபத்தியிலும், பிராட்டியிடம் திரிஜடை செய்த பிரபத்தியிலும், உலகத்தில் ஒருவன் ரக்ஷிக்கவேண்டிய வஸ்துவை அடைக்கலம் வைக்கிற இடத்திலும் பார்க்கலாம்.

3. இந்த அங்கங்கள் பிரபத்திக்குச் செய்யும் உதவியாவது— முதல் இரண்டு அங்கங்களாலே எம்பெருமானுடையகட்டளையை மீறாமல் இருப்பது உண்டாகும். கார்பண்ணியமானது ரக்ஷிப்பவனுடைய கருணையை விருத்தி செய்யும். பிரபத்திக்குப் பின்பும் வேறொரு உபாயத்தைத் தேடாமையை உண்டுபண்ணும். மஹாவிச்வாஸத்தாலே ஸந்தேஹப்படாமல் ரக்ஷகனிடம்போய் பிரபத்தி பண்ணும்படி செய்யும். பின்பு ரக்ஷண விஷயத்தில் தனக்குப் பொறுப்பு இல்லாமலிருக்கும்படி செய்யும் கடைசி அங்கமும் வேண்டியது. ஒருவன் ரக்ஷிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளாவிட்டால் ரக்ஷிக்கிறவனுக்கு ரக்ஷிக்கவேண்டுமென்கிற இச்சை உண்டாகாது.

4. மஹாவிச்வாஸம் என்கிற அங்கம் கிடைப்பது மிகவும் கஷ்டம் ஏனென்றால் இந்த விஷயத்தில் ஐந்து ஸந்தேஹங்கள் உண்டாகும். அவைகளும் அவைகளைத் தீர்க்கும் வழியும்:— (1) அளவில்லாத அபராதங்களைச் செய்த நாம் எப்படி எம்பெருமான்முன்னாலே போகக்கூடும் என்று ஒரு ஸந்தேஹம். பதில்:- பிராட்டி எப்போதும் எம்பெருமானிடம் கூடஇருந்து நம்மைப் பற்றிச் சிபார்சு செய்கிறாள். ஆகையால் நாம் கூசாமல் போகலாம். அவளுடைய சிபார்சை எம்பெருமானும் தள்ளமுடியாது. (2) அபராதம் செய்த நமக்குத்தண்டனையை விதிக்காமல் மிகவும் உயர்ந்த பலனை எம்பெருமான் கொடுப்பனோ என்பது இரண்டாவது ஸந்தேஹம். பதில்:- எம்பெருமானுக்கும் நமக்கும் இருக்கும் உறவினாலே நாம் செய்கிற பிரபத்தியைவியாஜமாகக்கொண்டு தண்டிக்கவேண்டுமென்கிற எண்ணத்தை விட்டு, மிகவும் உயர்ந்த பலனையும் கொடுப்பன். மிகுந்த குற்றம் செய்த பிள்ளை தகப்பன் காலில் வந்து விழுந்தால், அவன் குற்றத்தை மன்னித்து தன்னுடைய ஸொத்தை எல்லாம் அவனுக்குக் கொடுக்கிறான். அதுபோல் எம்பெருமானுக்கும் நமக்கும் இருக்கிற உறவு ஒரு நாளும் விடமுடியாது. (3) நாம் செய்கிற பிரபத்தியாகிற வியாபாரம் மிகவும் சொல்பமாயிருக்க, அதைப் பரிபூர்ணரான எம்பெருமான் கவனிப்பனோ என்பது மூன்றாவது ஸந்தேஹம். பதில்:- எம்பெருமானுடைய கருணைக்கு எல்லையில்லை யாகையால், அவன் இந்த வியாபாரத்தைப் பெரிய உபகாரமாக எண்ணி பிரபத்திக்குப் பலனைக் கொடுப்பன். (4) நாம் கேட்ட பலனைத் தாமதமில்லாமல் எம்பெருமான் கொடுப்பனோ என்று நாலாவது ஸந்தேஹம். பதில்:— வேறு பலனைக் கேட்டால் எம்பெருமான் உடனே கொடுக்கமாட்டான், மோக்ஷத்தைக் கேட்டாலோ உடனே கொடுத்து விடுவன், இந்த விஷயத்தில் அவனுக்கு ஸஹகாரி (கூட இருந்து ஒத்தாசை செய்பவர்கள்) வேண்டியதில்லை. அவனுடைய ஸங்கல்பமே போதும். (5) மிகவும் தாழ்ந்த நமக்கு உயர்ந்த மோக்ஷத்தைக் கொடுப்பனோ என்பது கடைசி ஸந்தேஹம். பதில்:— அதைக் கொடுப்பது தன்னுடைய லாபமாக எண்ணும்படியான உதாரகுணமுள்ளவனாகையாலே இதுவும் கூடும்.

5. மோக்ஷத்திற்காகப் பிரபத்தி செய்யும்போது ஸாத்துவிகத் தியாகம் என்கிற அதிகமான ஒரு அங்கம் உண்டு. அதாவது செய்கிற பிரபத்தியை நான் செய்யவில்லை; அதை எம்பெருமானே செய்கிறான். அந்த வியாபாரமும் அவனுடைய வியாபாரம்; என்னுடையது அன்று. இதினுடைய பலனும் அவனுடையது. என்னுடையது அன்று— என்று எண்ணுவது. இத்துடன் இப் பிரபத்தியும் உபாயமன்று, எம்பெருமானே உபாயமென்றும் எண்ணவேண்டியது.

மஹாவிச்வாஸவிஷயத்தில் உண்டாகும் ஸந்தேஹங்களையும், அதைத் தீர்க்கும் வழிகளையும் காட்டின ஆசாரியர்களிடத்தில் நன்றியறிவுள்ளவனாயிருக்கவேண்டுமென்று பாட்டால் அருளிச் செய்கிறார்.

அறிவித் தனரன்ப ரையம் பறையு முபாயமில்லாத்
துறவித் துணியிற் றுணையாம் பரனை வரிக்கும்வகை
உறவித் தனையின்றி யொத்தா ரெனநின்ற வும்பரைநாம்
பிறவித் துயர்செகு வீரென் றிரக்கும் பிழையறவே (18)

(ப-ரை.)ஐயம் - ஸந்தேஹத்தை, பறையும் - சொல்லும்படியான, உபாயம் இல்லா துறவி- உபாயமில்லாமையாகிற ஏழ்மைத் தனத்தினால், துணியில் - உண்டாகும் துக்கத்தில், துணையாம் - அதைப்போக்கி நமக்கு வேண்டியதைக் கொடுத்து உதவிசெய்கிற, பரனை - மிகவும் உயர்ந்த எம்பெருமானை, வரிக்கும் வகை - பிரார்த்திக்கும் படியான வழியை, அன்பர் - நம்மிடத்தில் ஆசையுள்ள ஆசாரியர்கள், அறிவித்தனர். எதற்காக என்றால்— உறவு இத்தனை இன்றி - கொஞ்சங்கூட ஸம்பந்தமில்லாமல், ஒத்தார் என - கர்மவச்யராயிருப்பதால் நம்மைப் போலிருப்பவர்கள் என்று சொல்லும்படி, நின்ற - இருக்கிற, உம்பரை - வேறு தேவதைகளை, பிறவி துயர் - ஸம்ஸாரத்திலுள்ள துக்கத்தை, செகுவீர் என்று - போக்குவீர் என்று, இரக்கும் - யாசிக்கும், பிழை அறவே - குற்றம் நீங்குவதற்காக.

(கருத்து) கர்மயோகம் முதலாய் பக்தியோகத்தோடு முடியும் உபாயங்களை நம்மாலே செய்யமுடியுமோ என்கிற ஸந்தேஹம் உண்டாகும். இந்த ஸந்தேஹத்தை உண்டுபண்ணுகிற அந்த உபாயங்களைச் செய்ய முடியாமல் நாம் துக்கப்படும்போது, நமக்

குத்துணையாக மிகவும் உயர்ந்த எம்பெருமான் வருவன். அவனை நாம் பிரார்த்திக்கும்படியான வழியை நம் ஆசாரியர்கள் நமக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். இது எதற்காகவென்றால்- ஸம் ஸாரத்தின் துக்கங்களை நீங்கள் போக்க வேண்டுமென்று நாம் பிரம்மா முதலான தேவர்களிடம் போய் யாசிக்கும் படியான குற்றம் நீங்குவதற்காக. தேவர்களுக்கும் நமக்கும் கொஞ்சங்கூட உறவில்லை. நம்மைப்போல் அவர்களும் கர்மத்திற்கு உட்பட் டவர்கள். ஆகையால் அவர்களிடம் போய்க் கேட்பது நமக்குத் தகாத வேலை.

குறிப்பு:— 'பரனை' என்ற சொல்லுக்கு எல்லாருக்கும் மேற்பட்டவன் என்று பொருள். எம்பெருமான் அப்படி யிருப் பதினாலே அவனிடம் குற்றவாளிகளாகிய நாம் போகக்கூடுமோ என்கிற ஸந்தேஹம் காட்டப்படுகிறது. 'துணையாம்' என்பதி னாலே இந்தஸந்தேஹம் போகும்படியான எம்பெருமானுடைய குணமும் அவனுக்கும் நமக்குமிருக்கும் உறவும் காட்டப் படுகின்றன.

## 12 ஸாங்கப் பிரபதநாதிகாரம்.

இப்படி தத்துவங்களை அறிந்து முமுக்ஷுக்களான அதிகாரி களில், லகுவான பிரபத்தியைச் செய்யத் தகுந்தவன், அதற்கு வேண்டிய அங்கங்களை அறிந்து அவைகளுடன் பிரபத்தியைச் செய்யும் விதத்தை இந்த அதிகாரத்தில் அருளிச் செய்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள். (1) கீழே சொன்ன அங்கங்களோடு பிரபத்தியைப் பண்ணும்போது, ஒரு வன் தன்னுடைய ஸ்வரூபத்தையும், தன்னை ரக்ஷிக்கும் சுமை யையும், தன்னை ரக்ஷிப்பதினால் உண்டாகும் பலனையும் எம்பெரு மானிடம் ஸமர்ப்பிக்கவேண்டும். அதாவது–(1) என்னுடையஸ்வ ரூபம் என்னுடைய ஸொத்து அன்று. அது தேவரீருடையது. (2) இதை ரக்ஷிக்கும் சுமையை என்னாலே தாங்கமுடியாது; பக்தி யோகத்தினுடைய ஸ்தானத்தில் தேவரீரே நின்று இந்தச் சுமை யை ஏற்றுக்கொண்டு அது எதைச் செய்யுமோ அதை எல்லாம் தேவரீரே செய்யவேண்டியது. இந்த விஷயத்தில் எனக்கு இனி

மேல் ஒரு பாமும் இல்லை. (3) இந்த ரக்ஷணத்தினுடைய பலனும் என்னுடையதன்று. அது தேவரீருடையது. இந்த மூன்று விஷயங்களிலும் எனக்கு ஸம்பந்தமில்லை. தேவரீருக்கே ஸம்பந்தமுண்டு என்று உறுதியாய் எண்ணுவது பிரபத்தி.

(2) மோக்ஷம் தவிற வேறு பலன்களை ஆசைப்பட்டு அதை அடைவதற்காக பிரபத்தி பண்ணும்போது, அதைக்கொடுக்கவேண்டிய சுமை மாத்திரம் கொடுக்கப்படுகிறது. ஸ்வரூபத்தினுடையவும், பலனுடையவும்ஸமர்ப்பணம் இல்லை. மோக்ஷத்திற்காகப் பக்தியோகம் செய்யும் போது ஸ்வரூபத்தினுடையவும், பலனுடையவும் ஸமர்ப்பணம்உண்டு. ரக்ஷணத்தினுடைய சுமையைப் பக்தி செய்கிறவன்தானே சுமக்கிறான். அதை எம்பெருமானிடம் கொடுக்கிறதில்லை. மோக்ஷத்திற்காகப் பிரபத்தி பண்ணும்போது மூன்றும் ஸமர்ப்பிக்கப்படுகின்றன.

(3) மோக்ஷத்தை ஆசைப்பட்டுப் பிரபத்திபண்ணுகிறவன் ரக்ஷணத்தின் பலனை எப்படி எம்பெருமானிடம் கொடுப்பதென்றால்- எம்பெருமானுடைய ஸந்தோஷமாகிய பலனே முக்கியமானது. பிரபத்திபண்ணுகிறவன் பலனை அடைந்து ஸந்தோஷப்படுவது எம்பெருமானுடைய ஸந்தோஷத்திற்காக. ஒரு கிளிக்குப் பால் கொடுத்து அதை இஷ்டப்படி பறக்கவிடுவதின் பலன் கிளியின் யஜமானனுக்கே. கிளிக்கு ஸந்தோஷமுண்டானாலும் அது அதின் யஜமானனின் ஸந்தோஷத்திற்காகவே ஏற்படுகிறது. அதுபோல.

இதின் மேலே, பிரபத்தி பண்ணுவது கூடாதென்று ஆளவந்தார் ஸ்தோத்ரத்தைக்கொண்டு பண்ணுகிற ஒரு அதிவாதத்திற்குப் பதில் சொல்லி, அதிகாரத்தின் அர்த்தத்தைப் பாட்டாலே அருளிச் செய்கிறார்.

> அறவே பரமென் றடைக்கலம் வைத்தன ரன்றுநம்மைப்
> பெறவே கருதிப் பெருந்தக வுற்ற பிரானடிக்கீழ்
> உறவே யிவனுயிர் காக்கின்ற வோருயி ருண்மையைநீ
> மறவே லெனநம் மறைமுடி சூடிய மன்னவரே. (19)

(ப-ரை) நம் மறைமுடி சூடியமன்னவர் - வேதத்தின் அர்த்தம் இன்னதென்று தீர்மானம் செய்வதற்குப் பட்டாபிஷேகஞ் செய்துகொண்ட ராஜாக்களைப் போலிருக்கும் நம்முடைய பூர்வா

சாரியர்கள், உறவே- தன்னிடமிருக்கும் உறவாலே, இவன் உயிர்- இவனுடைய ஸ்வரூபத்தை, காக்கின்ற - ரக்ஷிக்கிற, ஓர் உயிர் - ஒப்பில்லாத பரமாத்மாவினுடைய, உண்மையை, நீ மறவேல் என - நீ மறவாதே யென்று சொல்லிக் கொடுத்து, அன்று - அநாதிகாலம் முதலாக, நம்மை, பெறவே கருதி - தன்னிடம் கொண்டுபோக விரும்பி, பெரும் தகவு உற்ற - மிகவும் கருணை யுடைய, பிரான் அடிக்கீழ் - உபகாரகனான எம்பெருமானுடைய திருவடிகளின் கீழே, பரம் அற என்று -நம்மை ரக்ஷிக்கும் சுமை நம்மை விட்டு நீங்கும்படி, அடைக்கலம் - ரக்ஷிக்க வேண்டிய வஸ்துவாக, வைத்தனர்.

(கருத்து) தேசத்தை ரக்ஷிக்கும்பொருட்டு பட்டாபிஷேகம் செய்துகொண்ட ராஜாபோல் நம்முடைய முன்னோர்களான ஆசாரியர்கள் வேதத்தின் அர்த்தம் இன்னதென்று தீர்மானம் செய்வதற்காக வெகு பிரயாஸை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் நம்முடைய ரக்ஷணமாகிய சுமை நம்மை விட்டுப் போவதற்காக நம்மை எம்பெருமான் திருவடிகளின் கீழே ரக்ஷிக்க வேண்டிய வஸ்துவாக வைத்தார்கள். அந்த எம்பெருமான் நம்முடைய ரக்ஷணத்தை தன்னுடைய லாபமாக எண்ணி மிகுந்த கருணையாலே யாதிருச்சிகமான ஸுக்ருதம் முதலான வியாஜங்களைத் தேடிக்கொண்டு நம்மைப் பிரபத்திவரையில் கொண்டுவந்து விட்டிருக்கிறான். அப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவடிகளின்கீழ் அடைக்கலம் வைத்தார்கள். அவன், தனக்கும் நமக்குமுள்ள உறவைக்கொண்டு எல்லாரையும் ரக்ஷிக்கிறான். அவன் எல்லாருக்கும் உள்ளே ஆத்மாவாக இருந்து அவர்களை நியமனம் பண்ணுகிறான். அவனே எல்லாருக்கும் ஓரே உயிர். இந்த உண்மையை நீ பிரபத்திபண்ணும்போது மறக்கக்கூடாதென்று நமக்கு உபதேசம் செய்து இந்த வியாபாரத்தைச் செய்திருக்கிறார்கள்.

குறிப்பு:— (1) நம்மை ரக்ஷிப்பதற்கு முக்கியமான காரணம் நமக்கும் எம்பெருமானுக்கும் உள்ள உறவு. இது "உறவே இவன் உயிர் காக்கின்ற" என்று சொல்லப்பட்டது.

(2) 'இவன் உயிர்' என்று சொல்லி, உன்னுடைய உயிர் என்றாவது நம்முடையஉயிர் என்றாவது சொல்லாததின் பொருள் இந்த ரக்ஷணமானது எல்லாருக்கும் செய்யப்படுகிறது என்று.

(3) 'நீ மறவேல்' என்று சொன்னதின் கருத்து— இந்தப் பொருள் மிகவும் ரஹஸ்யமானதென்று மூன்றும் பேருக்குத் தெரியாமல் உபதேசம் செய்யப்பட்டது என்று.

(4) எம்பெருமானுக்கும் நமக்கும் உறவு இருந்தபோதிலும், அவன் கருணையினாலே நம்மை ரக்ஷிக்க அவஸரத்தைப் பார்த்துக்கொண்டிருந்தபோதிலும், நாம் ஒரு வியாஜத்தைச் செய்யாவிட்டால், அவன் நம்மை ரக்ஷிக்கிறதில்லை என்றும், அவன் ஒரு வியாஜத்தைத் தேடுகிறான் என்றும் காட்டுவதற்காக 'அடைக்கலம் வைத்தனர்' என்று பாட்டில் சொல்லியிருக்கிறது.

(5) 'அடைக்கலம் வைத்தனர்' என்று ஆசாரியநிஷ்ட பிரபத்தியைச் சொன்னபோதிலும், தானாகத் தனக்கு பிரபத்தி பண்ணும்போதும் ஆசாரியனுடைய உபதேசத்தால்அது செய்யப்படுவதினால் ஒருவன் தன்னை ஆசாரியர்களே அடைக்கலம் வைத்தார்களென்று எண்ண வேண்டியது.

## 13. கிருதகிருத்தியாதிகாரம்.

இப்படி ஆறு அதிகாரங்களாலே உபாயத்தைச் சொல்லி, மேல் பத்து அதிகாரங்களாலே அதினுடைய பலனைச் சொல்ல ஆரம்பித்து, ஒருவன் தன்னுடைய சரீரம்போனபிறகு மோக்ஷம் பெறவேண்டுமென்று பிரபத்தி பண்ணினால், அவன் எப்படி இருக்கவேண்டியது, என்ன செய்யவேண்டியது, எங்கே இருக்க வேண்டியது என்பவைகளைஏழு அதிகாரங்களாலே சொல்லுகிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— (1) பிரபந்நன் தன்னுடைய ரக்ஷணத்தின் சுமையை எம்பெருமானிடம் கொடுத்துவிட்டபடியாலே அவனுக்கு இனிமேல் அந்த விஷயத்தில் ஒரு சுமையுமில்லை. அவன் செய்யவேண்டிய வேலை செய்தாய் விட்டது. ஆகையால் அவன் கிருதகிருத்தியனென்று சொல்லப் படுகிறான். எம்பெருமான் நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிப்பேன் என்று கீதையின்கடைசி சுலோகத்தில் சொல்லியிருப்பதாலே, மோக்ஷம் கிடைக்குமோ கிடைக்கமாட்டாதோ என்று ஸந்தேஹப் படவேண்டியதில்லை. தேஹம் போனவுடனே மோக்ஷம் கிடைக்குமென்று தேறி,பயமுமில்லாமலிருப்

பன். ஆசாரியனுடைய கருணையால் நித்தியஸூரிகளுடன் கூட இருந்து எம்பெருமானை அனுபவிப்பேன் என்கிற எண்ணத்தாலே ஸந்தோஷமாகவும் இருப்பன்.

(2) இதுவரையில் பிரபந்நன், தேவர்கள் பிதிருக்கள் முதலானவர்களுக்குக் கடன்பட்டு அவர்களுக்கு வேலைக்காரனாக இருந்தான். இனிமேல் கடனும் தீர்ந்து விட்டது; வேலைக்காரனாக இருப்பதும் போய்விட்டது. ஆனால் முன்போலவே நித்தியங்களும், நைமித்திகங்களுமான கர்மங்களை எம்பெருமானுடைய ஆராதநங்களாகச் செய்து கொண்டே வரவேண்டியது.

(3) இப்படி அவைகளைச் செய்யும்போது, இந்திரன், அக்னி முதலான தேவதைகளின் பெயருள்ள மந்திரங்களைச் சொன்னபோதிலும், இவன் பரமைகாந்தியாயிருப்பதற்கு விரோதமில்லை. ஏகாந்தி என்றால் எம்பெருமான் கையையே பார்த்திருக்கிறவன். அவனிடத்தில் ஒன்றையும் கேட்காதவன் பரம - ஏகாந்தி. இந்திரன் முதலான சொற்கள் எம்பெருமானையே சொல்லுகின்றன. அவன் எல்லாருக்குள்ளும் ஆத்மாவாக இருப்பதினாலே இந்திரன் என்ற சொல்லுக்கு இந்திரனுடைய ஆத்மா என்று பொருள். இப்படியே மற்ற சொற்களுக்கும். இந்திரன் என்ற சொல்லுக்கு மிகவும் உயர்ந்த ஐச்வர்யம் உள்ளவனென்றும் பொருளானபடியால் அது எம்பெருமானையே சொல்லுகிறது.

இதன் மேலே கத்யத்தில் சொல்லியிருக்கிற "ஸுகமாக இரு" என்கிற எம்பெருமானுடைய சொல்லுக்குப் பொருள் எழுதி, பிரபத்தி பண்ணினவனைப் பாட்டாலே ஸ்தோத்திரம் செய்கிறார்.

**மன்னவர் விண்ணவர் வானோ ரிறையோன்றும் வான்கருத்**
**அன்னவர் வேள்வி யனைத்து முடித்தன ரன்புடையார்க் [தோர்**
**கேன்ன வரந்தர வேன்று நம்மத்தி கிரித்திருமால்**
**முன்னம் வருந்தி யடைக்கலங் கோண்டநம் முக்கியரே.**

(ப-ரை) அன்பு உடையார்க்கு - தன்னிடத்தில் பக்தியுடையவர்களுக்கு, என்ன வரம், தர என்று - தருகிறது என்று, நம் அத்திகிரி திருமால் - ஹஸ்திகிரியில் இருக்கும் நம்முடைய லக்ஷ்மீ பதியான எம்பெருமான், முன்னம் - முன்பு, வருந்தி - பிரயாஸப்பட்டு, அடைக்கலம் கொண்ட, நம் முக்கியர் - நம்முடைய பிர

பந்நர்கள்—, மன்னவர் - தேசத்தை ஆளும் ராஜாக்கள் போல் நம்முடைய ஸ்வாமிகள், விண்ணவர் - தேவதைகளைப் போலே நாம் ஆராதிக்கத் தகுந்தவர்கள், வானோர் இறை - நித்திய ஸூரிகளுக்கு யஜமாநன், ஒன்றும் - வஸிக்கும், வான் - வானத்தில் அதாவது - பரமபதத்தில், கருத்தோர் - ஆசையையுடையவர்கள், அன்னவர் - ஹம்ஸர்கள், அதாவது— இது நல்லது, இது கெட்டது என்று பிரித்து அறியுமவர்கள், வேள்வி அனைத்தும் முடித்தனர் - செய்யவேண்டிய யாகமெல்லாம் செய்து முடித்தவர்கள்.

குறிப்பு:— முக்கியர் என்று பிரபத்தியினுடைய மேன்மையைக் காட்டச் சொன்னபடி.

---

## 14. ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்.

இப்படிக்கீழ் அதிகாரத்தில் பிரபந்நன் ஸந்தேஹமும், பயமுமில்லாமல் ஸந்தோஷமாய் இருப்பதைச் சொல்லி, அவன் தன்னுடைய ஸ்வரூபத்தையும், செய்த உபாயத்தையும், அடையப் போகிற பலனையும் எப்போதும் நினைத்துக்கொண்டு இருக்க வேண்டியது என்பதையும், அப்படி நினைத்துக்கொண்டு இருப்பதற்கு அடையாளங்களையும் இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— ஒருவன் தன்னுடைய ஸ்வரூபத்தையும், தான்செய்த உபாயத்தையும், அதனால் கிடைக்கப் போகிற பலனையும் உள்ளபடி அறிந்து, அதை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கவேண்டியது. இப்படியிருப்பதற்கு ஸ்வநிஷ்டை என்று பெயர். அது மூன்று வகைப்படும்:— ஸ்வரூபநிஷ்டை, உபாய நிஷ்டை, புருஷார்த்தநிஷ்டை என்று. இந்த மூன்றும் இருப்பதற்கு அடையாளங்கள்:—

(1) ஒருவன் தன்னை வைதால் மனது கலங்காது. அது தன்னுடைய உடம்பைப் பற்றினதாக இருந்தால், தான் உடம்பைக் காட்டிலும் வேறானவனாகையாலே உதாஸீநனாயிருருப்பன். அது தன்னைப் பற்றியே யிருந்தால், ஐயோ! இவன் நம்மை வைகிறானே, இவனுக்கு என்ன வருமோ என்று அவனைப் பற்றி இரக்கப்படுவன். அவன் சொல்லும் குற்றம் தன்னிடம் இருந்தால்,

அந்தக் குற்றத்தை நினைப்பூட்டினனே என்றும், குற்றம் இல்லா விட்டால், குற்றம் ஒருவேளை நேரிடும், ஜாக்கிரதையாய் இரு என்று எச்சரிக்கை பண்ணினன் என்றும் அவனிடத்தில் நன்றி பாராட்டுவன். அவனும் தன்னைப்போல எம்பெருமானுக்கு உட்பட்டவன். ஆகையினால், எம்பெருமான் அவனைக் கொண்டு முன் செய்த தன் கர்மத்திற்குப் பலனைக்கொடுக்கிறன் என்று நினைத்து அவனிடத்தில் கோபம் கொள்ளமாட்டான். தனக்கு எப்போதும் நல்லதைச் செய்யும் எம்பெருமான் இப்படி ஒரு கர்மத்தைப் போக்கினனென்று ஸந்தோஷப்படுவன். இவைகள் ஸ்வருபநிஷ்டையின் அடையாளங்கள்.

(2) எம்பெருமான் பிரபத்திக்கு வசப்பட்டுத் தன்னை ரக்ஷிக்க ஸித்தமாயிருப்பதாலே, இதற்காக வேறு ஒரு தேவதையையும் கண்ணாலே பார்க்கமாட்டான். அவன் ரக்ஷகனாயிருப்பதால் அவனுடைய பலத்தைக் கொண்டு ஒன்றுக்கும் பயப்படமாட்டான். தனக்கு இஷ்டத்தைக் கொடுப்பதற்கும் இஷ்டமில்லாததை விலக்குவதற்கும் அவன் கையையே பார்த்திருப்பன். தன் ரக்ஷணவிஷயத்தில் தான் ஒன்றும் செய்யமாட்டான். தனக்கு ஜ்வரம் முதலான வியாதிகள் வந்து மரணம் உண்டாகுமென்று தோன்றினாலும் துக்கப்படமாட்டான். எம்பெருமானிடம் சீக்கிரம் போகலாமென்று ஸந்தோஷப்படுவன். இவைகள் உபாய நிஷ்டையின் அடையாளங்கள்.

(3) தன்னுடைய உடம்பின் ரக்ஷணமானது முன் செய்த கர்மத்திற்குத் தகுந்தபடி நடக்குமென்று அதைப்பற்றி விசாரப்படமாட்டான். தன் பிரயத்நமில்லாமல் தர்மத்திற்கு விருத்தமல்லாத விஷயங்கள் கிடைத்தால், அதை அநுபவிப்பன். இதினாலே முன் செய்த புண்ணியம் கழிந்தது என்று எண்ணுவன். ஒன்று கிடைத்தாலும் ஸந்தோஷப்படான். கிடைக்காவிட்டாலும் துக்கப்படான். தான் அடையப் போகிற மோக்ஷஸுகத்தை ஆவலுடன் நினைத்துக் கொண்டிருப்பன். அது எப்போது வரப்போகிறதென்று நாளை எண்ணிக் கொண்டிருப்பன். இவைகள் புருஷார்த்த நிஷ்டையின் அடையாளங்கள்.

இந்த விஷயங்களைச் சுருக்கமாகப் பாட்டால் அருளிச் செய்கிறார்.

முக்கிய மந்திரங் காட்டிய மூன்றி னிலையுடையார்
தக்கவை யன்றித் தகாதவை யொன்றுந் தமக்கிசையார்
இக்க ருமங்க ளேமக்குள வென்று மிலக்கணத்தால்
மிக்க வுணர்த்தியர் மேதினி மேவிய விண்ணவரே. (21)

(ப-ரை.) முக்கிய மந்திரம் - மூலமந்திரம், காட்டிய - தெரிவிக்கிற, மூன்றில் நிலை உடையார் - ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் என்கிற மூன்றில் நிலை யுடையவர்கள், அவைகளை எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவர்கள், தக்கவை அன்றி - தமக்குத் தகுந்தவைகளையல்லாமல், தகாதவை ஒன்றும் - தகாதவைகளை யொன்றையும், தமக்கு, இசையார் - ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இ கருமங்கள் - கீழே சொன்ன கோபமில்லாமை முதலான விஷயங்கள், எமக்கு உள என்றும் - நமக்கு உண்டு என்றும், இலக்கணத்தால் - அடையாளங்களால், மிக்க உணர்த்தியர் - உயர்ந்த ஜ்ஞாநத்தை யுடையவர்கள், மேதினி மேவிய - பூமியில் எம்பெருமான் வஸிக்குமிடங்களில் ஆசையுடனிருக்கிற, விண்ணவர் - நித்தியஸூரிகள்.

(கருத்து.) கீழே சொன்னவைகள் தங்களுக்கு இருப்பதை அவைகளின் அடையாளங்களாலே அறிந்து தங்களுக்கு ஸ்வநிஷ்டை யிருக்கிறதென்று அறிந்தவர்கள் முக்தரைப்போல் ஆனந்தமுடையவர்கள். அவர்களுக்கு ஒருவிதக்கெடுதியும் வராது. அவர்களை இந்தப் பூமியில் ஆசைப்பட்டு வாஸம் செய்கிற நித்தியஸூரிகள் என்று சொல்லலாம்.

---

## 15. உத்தர கிருத்தியாதிகாரம்.

---

இப்படி தத்துவங்களை அறிந்து பிரபத்தியைச் செய்தவன் பூமியில் இருக்கும்போது, எப்படியிருப்பன் என்று கீழ் இரண்டு அதிகாரங்களால் சொல்லி, அவன் எவைகளைச் செய்துகொண்டு இருக்கவேண்டியது என்பதை இந்த அதிகாரத்தில் அருளிச் செய்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— பிரபத்தி செய்தவனுக்கு அது முடிந்தவுடனே அதின் பலனாக எம்பெருமானுடைய கைங்கரியம் ஆரம்பிக்கிறது. அவன் இங்கே இருக்

கும் நாளில் செய்யவேண்டிய வேலைகளாவன:— எம்பெருமானு டைய கைங்கரியம் ஆஜ்ஞாகைங்கரியமென்றும், அநுஜ்ஞா கைங் கரியமென்றும் இருவகைப்படும். அவைகளில் இதைச் செய் என்று சொல்லப்பட்டவைகள் ஆஜ்ஞாகைங்கரியம். அவைகளைக் கட்டாயம் செய்யவேண்டியது. செய்யாவிட்டால் பிரத்தியவாயம் (குற்றம்) உண்டு. இவைகளைச் செய்யலாமென்று சொல்லப்பட்ட வைகள், அநுஜ்ஞாகைங்கரியம். எவைகளைச் செய்யாவிட்டால் பிரத்தியவாயம் இல்லையோ, செய்தால் எம்பெருமானுக்கு ஸந் தோஷமுண்டாகுமோ, அவைகள் அநுஜ்ஞா கைங்கரியங்கள். அநுஜ்ஞாகைங்கரியங்களில் எவைகள் தன்னால் செய்யமுடியுமோ, எவைகளை நினைத்தபோது விடமுடியுமோ, அவைகளையே செய்ய வேண்டியது. ஆறு தாண்டுவதற்கு ஓடத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறவன் சொக்கட்டான் ஆடினால் பந்தயம் வைத்து ஆடமாட்டான். பந்தயத்திற்கு ஆடினால் அதை நினைத்த போது விடமுடியாது. அதை முடித்துத்தான் போகவேண்டும். விளையாட்டாக ஆடினால் அதை நினைத்தபோது விட்டுப் போக லாம். அது போல. அந்த கர்மங்களைச் செய்யும்போது எப்படிச் செய்யவேண்யடிதென்று சாஸ்திரம் சொல்லுகிறதோ, அப்படியே செய்யவேண்டும்.

(2) எம்பெருமானுடைய கைங்கரியங்களைச் செய்யும்போது பிரீதியுடன் செய்யவேண்டியது. தாயார் குழந்தையின் வேலை யையும், நல்ல ஸ்திரீ தன் புருஷன் வேலையையும், நல்ல சிஷியன் குருவின் வேலையையும் பிரீதியுடன் செய்வதுபோல். பயத்துட னும் அவைகளைச் செய்யவேண்டியது. வேலைக்காரன் ராஜாவின் வேலையைச்செய்வது போலவும், யானைப்பாகன் யானையை ரக்ஷிப் பது போலவும்.

(3) ஜ்ஞாநமும் பக்தியும் வேண்டியதாகையால், நல்ல ஜ்ஞாந முடைய ஒரு பெரியவரிடம் கூட இருந்து ஜ்ஞாநத்தை யடைய வேண்டியது. நல்ல அநுஷ்டாநமுள்ள பெரியவரிடமிருந்து அவ ருடைய அநுஷ்டாநங்களில் தன்னுடைய ஆச்ரமத்திற்குத் தகுந்தவைகளை எடுத்துக் கொள்ளவேண்டியது.

(4) இப்படி ஜ்ஞாநமும், அநுஷ்டாநமும் இருக்கிறதென்று கர்வப்படக் கூடாது. தனக்கு ஏதாவது ஆழ்வார்களுக்குப் போல எம்பெருமான் விசேஷ அநுக்ரஹத்தைச்செய்தால், அப்போதும்

கர்வம் கூடாது, தான் அகிஞ்சநனுயிருக்கும் இருப்பை மறந்து போகக்கூடாது. அதற்காகத் தாம் முன்னிருந்த இருப்பை அடிக்கடி நினைக்கவேணும். அதினுல் மனம் தளர்ச்சி அடையக் கூடாது. இப்போது ஆசாரியன் அநுக்ரஹத்தினுலே வந்திருக்கும் நிலைமையை நினைத்துத் தேறி இருக்கவேண்டும்.

(5) தான் இருக்குமிடத்தில் தேவாலயமிருந்தால், ஒவ்வொரு நாளும்போய் எம்பெருமானுடைய அர்ச்சையை ஸேவிக்க வேண்டியது.

(6) எம்பெருமானுக்குத் தான் சேஷனுயிருப்பதை ஒரு போதும் மறக்கக் கூடாது. பதிவிரதையான ஒருஸ்திரீ தன் திரு மங்கலியத்தை ரக்ஷிப்பதுபோல் அதை நினைத்துக்கொண்டிருக்க வேண்டியது. பரதாழ்வான் சக்கரவர்த்தி திருமகனுடைய பாதுகைகளுக்கு எதையும் விஜ்ஞாபநம் செய்து ராஜ்யத்தைப் பரிபாலநம் செய்ததுபோல், தான் செய்யும் எதையும் எம்பெருமானிடம் விஜ்ஞாபநம் செய்யவேண்டியது.

(7) ஆசாரியர்களும் எம்பெருமானும் தனக்குச் செய்த உபகாரங்களை எப்போதும் நினைத்துக் கொண்டிருந்து அவர்களிடம் நன்றி பாராட்டவேண்டியது.

**விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவு மடிமையெல்லாம்**
**மண்ணுல கத்தின் மகிழ்ந்தடை கின்றனர் வண்டுவரைக்**
**கண்ண னடைக்கலங் கோள்ளக் கடன்கள் கழற்றியநம்**
**பண்ணம ருந்தமிழ் வேத மறிந்த பகவர்களே. (22)**

(ப-ரை) வண் துவரை - அழகிய துவாரகா நகரத்திலிருக்கும், கண்ணன், அடைக்கலம் கொள்ள, கடன்கள் கழற்றிய - தேவர்கள் முதலானவர்களுக்குப் பட்டிருந்த கடன்கள் தீர்ந்தவர்களும், பண் அமரும் தமிழ் வேதம் - கானத்தோடு கூடிய திருவாய்மொழியை, அறிந்தவருமான, நம் பகவர்கள் - நம்முடைய பிரபந்ந ச்ரேஷ்டர்கள், விண்ணவர் - நித்திய ஸூரிகள், வேண்டி - ஆசைப்பட்டு, விலக்கு இன்றி - ஒருவிதத் தடையுமில்லாமல், மேவும் - செய்யும், அடிமை எல்லாம் - எல்லாக் கைங்கரியங்களையும், மண் உலகத்தில் - இந்த பூமியில், மகிழ்ந்து - ஸந்தோஷப் பட்டு, அடைகின்றனர் - அடைகிறார்கள்.

(கருத்து.) பிரபந்நர்கள் மற்றவர்களைப் போல கைங்கரியங்களைச் செய்யாவிட்டால் குற்றம் வருமோ என்று பயந்து செய்கிறார்களில்லை. பிரீதியினாலேயே அதுவே ஸ்வயம் பிரயோஜநமென்று எண்ணிச் செய்கிறார்கள்.

குறிப்பு:— 'அடைகின்றனர்' என்று நிகழ் காலச் சொல்லினாலே இதை இப்போதும் பார்க்கலாமென்றபடி.

## 16. புருஷார்த்த காஷ்டாதிகாரம்.

முன் அதிகாரத்தில் பிரபந்நன் இங்கிருந்த காலத்தில் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. இத்துடன் அவன் நிற்கக்கூடாது, எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கும் கைங்கரியம் செய்யவேண்டுமென்று இந்த அதிகாரத்தில் சொல்லப்படுகிறது. பிரபந்நன் ஆசைப்படவேண்டியபிரயோஜநம் புருஷார்த்தம். அது பாகவதர்கள்வரையில் போகவேண்டியிருப்பதால், அதைப் புருஷார்த்த காஷ்டை என்று சொல்லியிருக்கிறது.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:—

(1) ஒருவனைப் பாகவதன் என்று எட்டு அடையாளங்களால் அறியலாம். அவைகளாவன:— (1) பாகவதனிடத்தில் இருக்கும் குற்றங்களைப் பார்க்காமல் அவனிடம் பிரீதி பண்ணுகை. (2) அவன் எம்பெருமானுக்குப் பூஜை செய்வதைக்கண்டு ஸந்தோஷப்படுவது. (3) எம்பெருமானுடைய கதையைக் கேட்பதில் சிரத்தை. (4) அதைக் கேட்கும்போது தொண்டை தழதழப்பதும், கண்ணில் ஜலம் வருவதும், உடம்பில் மயிர்க்கூச்சலுண்டாவதும். (5) தானும் எம்பெருமானுக்கு ஆராதநம் செய்வதற்குப் பிரயத்தினம் செய்கை. (6) எம்பெருமானுடைய வேலையைச் செய்கையில் டம்பமில்லாமை, அதாவது.— தன்னை ஒருவன் கொண்டாடவேண்டுமென்று அதைச் செய்யாமை. (7) எம்பெருமானை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கை. (8) எம்பெருமானிடத்தில் ஒன்றையும் கேட்காதிருப்பது.

(2) பிரபந்நன் எம்பெருமானுக்குச் சேஷன்; அதாவது.— அவனுக்காகவே இருக்கிறவன்; அவனை எம்பெருமான் தன் இஷ்

டப்படி விநியோகம் செய்யலாம். எம்பெருமானுக்குப் பாகவதர்களிடத்தில் மிகுந்த பிரீதி இருக்கிறது. அவர்களைத் தனக்கு ஆத்மாவென்று ஸ்ரீகீதையில் அவனே சொல்லியிருக்கிறான். அவன் பிரபந்நனை அவர்களுக்குச் சேஷமாகப் பண்ணுகிறான். ஆகையால் அவன் பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்து அவர்களை ஸந்தோஷப்படுத்த வேண்டியது.

(3) பாகவதர்களின் குணங்களைப் பார்த்து அவைகளில் ஈடுபட்டு ஒருவன் அவர்களுக்குக் கைங்கரியம் பண்ண ஆசைப்படுவன். இந்த விதமாயும் அவர்களின் கைங்கரியம் அவனுக்குக் கிடைக்கிறது.

(4) இந்த விஷயத்தில் சில ஸந்தேஹங்கள் உண்டாகின்றன. (1) எம்பெருமானுக்கே சேஷனான பிரபந்நன் பாகவதர்களுக்குச் சேஷனாய் இருக்கலாமோ? (2) பிரபந்நன் பாகவதர்களுக்குச் செய்யும் கைங்கரியமானது அவனுடைய ஸ்வரூபத்தினால் உண்டாகிறதா? அல்லது ஒரு காரணத்தினால் உண்டாகிறதா? (3) இரண்டு பாகவதர்கள் ஒருவருக்கொருவர் கைங்கரியம் செய்தால், ஒருவனுக்கே சேஷத்வமும், சேஷித்வமும் வருமே, இது கூடுமா? இவைகளுக்குப்பதில்களையும், பாகவதர்களுடைய பிரஸாதத்தையே ஒருவன் ஆசைப்பட வேண்டுமென்றும் சொல்லி, அதிகாரத்தின் முக்கியமான அர்த்தத்தைப் பாட்டால் அருளிச் செய்கிறார்.

வேதமறிந்த பகவர் வியக்க விளங்கியசீர்
நாதன் வகுத்த வகைபெறு நாமவ னல்லடியார்க்
காதர மிக்க வடிமை யிசைந்த முியாமறைநூல்
நீதி நிறுத்த நிலைகுலை யாவகை நின்றனமே. (23)

(ப-ரை) வேதம் அறிந்த - வேதத்தின் அர்த்தம் தெரிந்த, பகவர் - பாகவதர்கள், வியக்க - ஆச்சரியப்படும் படியாக, விளங்கிய சீர் - நல்ல குணங்களையுடைய, நாதன் - யஜமானனான எம்பெருமான், வகுத்த - தன் இஷ்டப்படி நம்மை உபயோகப்படுத்துகிற, வகை - விதத்தை, பெறும் நாம் - பெறவேண்டிய அதாவது ஒப்புக்கொள்ள வேண்டிய நாம், அவன் - அந்த எம்பெருமானுடைய, நல் அடியார்க்கு - நல்ல பக்தியை யுடைய வேலைக்காரர்களுக்கு, ஆதரம் மிக்க - பிரீதி மிகுந்த, அடிமை இசைந்து -

கைங்கரியத்தை ஒப்புக்கொண்டு, அழியா - எப்போதுமிருக்கிற, மறை நூல் - வேதமாகிய சாஸ்திரத்தினாலே, நீதி - நீதியுடன், நிறுத்த - ஏற்படுத்தப்பட்டிருக்கிற, நிலை - இருப்பு, குலையாவகை - கெட்டுப் போகாதபடி, நின்றனம் - இருக்கிறோம்.

(கருத்து.) எம்பெருமான், வேதத்தின் அர்த்தத்தை அறிந்து, அறிந்தபடி நடக்கிற பாகவதர்கள் ஆச்சரியப்படும்படியாக விளங்குகிற நல்ல குணங்களை உடையவன். அவன் எல்லாருக்கும் யஜமானன். அவனுக்குச் சேஷனான நம்மை அவன் எப்படி உபயோகப் படுத்துகிறானோ, அதை ஒப்புக்கொண்டு அவனுடைய திருவுள்ளத்தின்படி நாம் நடக்கவேண்டியவர்கள். அவன் நம்மைத் தன்னுடைய நல்ல தாஸர்களுக்கு அடிமைவேலை செய்யும்படி செய்திருக்கிறான். அதை நாம் மிகுந்த பிரீதியுடன் செய்யவேண்டியது. இப்படிச் செய்யும்போது எப்போதும் அழியாமல் இருக்கிற வேதமாகிய சாஸ்திரமானது நியாயத்துடன் எந்த நிலையைச் சொல்லுகிறதோ, அந்த நிலை கெடாமல் நாம் இருக்கிறோம்.

குறிப்பு:– (1) நல்லடியார் - நன்மையாவது- அபராதத்தில் ருசி முதலான தோஷமில்லாமை.

(2) வேதமானது ஒரு பாகவதனுக்குக் கைங்கரியம் செய்யும்போது, வர்ணம், ஆசிரமம், ஆசாரியன் சிஷ்யன், பிள்ளை தகப்பன் என்கிற முறை இவைகளைக் கவனித்துச் சில வியவஸ்தைகளைச் சொல்லியிருக்கிறது. அவைகளை மீறாமல் நாம் பாகவத கைங்கரியம் செய்யவேண்டியது, அதாவது:- ஒரு பிராமணன் பாகவதனாயிருக்கும் சூத்திரனையும், ஸந்நியாஸி பாகவதனாயிருக்கும் கிருஹஸ்தனையும், ஆசாரியன் பாகவதனாயிருக்கும் சிஷ்யனையும், தகப்பனார் பாகவதனாயிருக்கும் புத்திரனையும் நமஸ்காரம் செய்யக்கூடாது.

## 17. சாஸ்திரீய நியமநாதிகாரம்.

கீழ் இரண்டு அதிகாரங்களில் எம்பெருமானுக்கும், பாகவதர்களுக்கும் கைங்கரியம் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டது. அந்த கைங்கரியங்கள் எவைகள் என்றும், அவைகளை

எப்படிச் செய்யவேண்டுமென்றும், இப்போது சாஸ்திரத்தைக் கொண்டே பிரபந்நன் அறியவேண்டியதாகையால், அதில் சொன்னவைகளுக்குக்கட்டுப்பட்டு பிரபந்நன் இருக்கவேண்டியது என்றும் இந்த அதிகாரத்தில் சொல்லப்படுகிறது.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— (1) பிரபந்நன் முக்தியை அடைந்த பின், எம்பெருமானுக்கு எந்த கைங்கரியம் இஷ்டமோவென்று தன்னுடைய விரிவை அடைந்த ஜ்ஞானத்தாலே பார்க்கலாம். இப்போது பிரபந்நனுடைய ஜ்ஞானமானது சுருங்கி யிருப்பதினாலே அப்படிச் செய்யமுடியாது. ராத்திரியில் விளக்கைக் கொண்டு ஒன்றை நாம் அறிவது போல், எம்பெருமானுக்கு இஷ்டமான கைங்கரியத்தைச் சாஸ்திரத்தைக்கொண்டே பிரபந்நன் அறியவேண்டியது.

(2) இந்த விஷயத்தில் சிலர் சொல்லும் அதிவாதங்கள். (1) ஸ்ரீபாஷ்யகாரர் திருநாட்டுக்கு எழுந்தருளும்போது சில கைங்கரியங்களைச் செய்யும்படி சொல்லியிருக்கிறார். அவைகளில் சாஸ்திரப்படி நடக்கவேண்டுமென்பதைச் சேர்க்கவில்லையே. (2) ஸ்ரீஆளவந்தார் பிரீதியினாலேயே பிரபந்நன் வேலையைச் செய்யும்படி தூண்டப்படுவனென்று சொல்லியிருப்பதினாலே சாஸ்திரம் தள்ளப்படவில்லையா? இவைகளுக்குப் பதில் சொல்லப்படுகிறது.

(3) ஜனங்கள் அநுகூலரென்றும், பிரதிகூலரென்றும், உதாஸீனரென்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் பிரித்து அவர்களிடத்தில் பிரபந்நன் இருக்கவேண்டிய விதத்தை அருளிச் செய்திருக்கிறார். அவர்களில் அநுகூலர் எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவர்கள்; பிரதிகூலர் அவனிடத்தில் த்வேஷம் செய்பவர்கள்; உதாஸீனர் பிரீதியும் த்வேஷமும் இல்லாதவர்கள். அநுகூலரைக் கண்டால் ஸந்தோஷப்பட வேண்டியது; பிரதிகூலரைக் கண்டால் பயப்பட வேண்டியது; உதாஸீநரைக் கண்டால் அவர்களையொரு பொருளாக நினைக்காமல் இருக்க வேண்டியது.

அதிகாரத்தின் முக்கியமான அர்த்தத்தைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

நின்றன மன்புடை வானோர் நிலையி னிலமளந்தான்
நன்றிது தீயதி தென்று நடத்திய நான்மறையால்
இன்று நமக்கிர வாதலி லிம்மதி யிந்நிலவே
அன்றி யடிக்கடி யாரிரு ளோர்க்க வடியுளதே. (24)

(ப-ரை.) நிலம் அளந்தான் - பூமியை மூன்று அடியாக அளந்த எம்பெருமான், நன்று இது - இது நல்லது, தீயது இது- இது கெடுதலானது, என்று, நடத்திய - நடத்திக் கொண்டிருக்கிற, நால் மறையால் - நான்கு வேதங்களைக் கொண்டு, அன்பு உடை - எம்பெருமானிடத்தில் பக்தியுள்ள, வானோர் - வைகுந்தத்திலிருக்கும் நித்தியஸூரிகளுடைய, நிலையில் - இருப்பில், அதாவது- பிரீதி மிகுந்து அது உள்ளடங்காது செய்யும் கைங்கரியங்களில், நின்றனம் - இருக்கிறோம். இன்று - இப்போது நமக்கு, இரவு ஆதலில் - ராத்திரியாகையால், இ மதி - இந்த வேதமாகிய சந்திரனுடைய, இ நிலவே - அதின் அர்த்தத்தை நன்றாகக் காட்டுகிற ஸ்மிருதிகளாகிய வெளிச்சம், அன்றி - இல்லாமல், அடிக்கடி, ஆர் - நிறைந்திருக்கிற, இருள் - அஜ்ஞானமாகிற இருட்டை, தீர்க்க - போக்க, அடி உளதே - ஸாதநம் உண்டோ.

(கருத்து.) நித்தியஸூரிகள் எப்படி ஸ்வயம் பிரயோஜநமாகக் கைங்கரியம் செய்கிறார்களோ, அப்படியே நாமும் கைங்கரியங்களைச் செய்கிறோம். அவர்களுக்குத் தங்களுடைய ஜ்ஞானமே துணையாயிருக்கிறது. நமக்கு இப்போது ஜ்ஞானம் சுருங்கியிருப்பதாலே சாஸ்திரத்தைத் துணையாகக் கொண்டு கைங்கரியங்களைச் செய்கிறோம். ஏனென்றால்- இங்கு இருக்கிற காலத்தில் நம்முடைய அறிவு குறைந்திருக்கிறது. ராத்திரியில் ஒருவன் ஒன்றை அடையமுடியாதது போல், நாம் எம்பெருமானுடைய திருவுள்ளம் இன்னதென்று அறியமுடியாது. ராத்திரியில் சந்திரனுடைய நிலாவெளிச்சத்தைக் கொண்டு ஒன்றை அறிவதுபோல், நாம் வேதத்தையும் ஸ்மிருதிகளையும் கொண்டு எம்பெருமான் திருவுள்ளத்தை அறியவேண்டியது. இப்படிக்கில்லாவிட்டால் நெருங்கியிருக்கிற இருட்டைப் போக்க வேறு உபாயமில்லை.

குறிப்பு:-- 'நிலமளந்தான்' என்று சொல்லுகையாலே எம்பெருமான் நடத்துகிற சாஸ்திரமே நம்பத்தகுந்தது. மற்ற பசுபதி முதலானவர்கள் செய்திருக்கிற ஆகமங்கள் அப்படியன்று என்று காட்டப்படுகிறது. அந்த அவதாரத்திலேயே பிரும்மாவையும் பசுபதியையும் காட்டிலும் உயர்ந்தவன் என்று தெரிவிக்கப்பட்டது. பிரும்மலோகம் போன அவனுடைய திருவடிக்குப் பிரும்மா திருமஞ்ஜனம் செய்தான். அந்த ஜலத்தைப் பசுபதி தலையில் தாங்கிக்கொண்டதினாலே அவனுக்குச் சிவன் என்று பெயர் வந்தது.

## 18. அபராத பரிஹாராதிகாரம்

இப்படி எம்பெருமானுக்கும் பாகவதர்களுக்கும் கைங்கரியங்களைச் சாஸ்திரத்தைத் துணையாகக் கொண்டு செய்யும்போது, அபராதம் ஒன்றும் வாராதபடி பிரபந்நன் நடக்கவேண்டியது. அபராதம் வந்தால் அதற்குப் பரிஹாரம் பண்ணும் விதத்தை இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:– (1) முமுக்ஷுவுக்கு வேண்டிய அடையாளங்கள் உள்ளவனாயிருந்து பிரபத்தி பண்ணினவனுக்கு அபராதம் உண்டாகாது. முன்செய்த வினையால் அபராதம் நேர்ந்தால், பிரபந்நன் உடனே லஜ்ஜைப்பட்டு வருத்தப்படுவன். அவன் அபராதத்திற்கு ஏற்பட்ட பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டியது. அதற்குச் சக்தியில்லாவிட்டால் பிரபத்தியைப் பண்ணவேண்டியது.

(2) இதைச் செய்யாவிட்டால் எம்பெருமான் அவனைத் தண்டித்து அவனுடைய அபராதத்தைப் போக்குவன். ஆனால் தண்டனையானது முன்போல் கடுமையாய் இல்லாமல் லகுவாக இருக்கும். ஒருகாலும் அவன் யமனுக்கு உட்படமாட்டான்.

(3) இன்ன வயது முடிவில் மோக்ஷம் வேண்டுமென்று கேட்டவனுக்கு அந்த காலத்திற்குள் சொன்னபடி அபராதபரிஹாரம் ஏற்படும். இப்படிக் காலம் குறிக்காமல் மோக்ஷம் வேண்டுமென்று கேட்டவனுக்கு அபராதத்திற்குப் பரிஹாரம் உண்டாகும்வரையில் வயது வளர்ந்துவரும்.

(4) இதில் சொல்லிய அதிவாதங்கள்:— (1) தெரிந்து செய்கிற அபராதத்தையும் எம்பெருமான் க்ஷமிப்பன் என்று ஒரு பெரியவர் சொல்லியிருக்கிறார். (2) பிராட்டி 'உங்களுக்குச் சரணமாக இருக்கிறேன்' என்று சொன்னபிறகு ராக்ஷஸிகள் செய்த அபசாரங்களை அவள் பொறுக்கவில்லையா ? (3) ஒரே குற்றத்திற்கு ஒருவனுக்கு லகுவான தண்டனையும் மற்றொருவனுக்குக் கடுமையான தண்டனையும் கூடுமோ ? (4) 'எல்லாப் பாபங்களிலுமிருந்து உன்னை விடுவிப்பேன்' என்று எம்பெருமான் ஸ்ரீகீதையில் சொல்லியிருக்கிறபடியால், 'எல்லா பாபங்களிலும்' என்கிற சொல்லில் பின்பு செய்யும் அபராதமும் அடங்கவில்லையா ? இந்த அதிவாதங்கள் கண்டிக்கப்படுகின்றன.

(5) பிரபந்நன் விலக்கவேண்டிய அபசாரங்களில் முக்கியமானது பாகவதஅபசாரம். ஜாதி, குணம், வ்ருத்தம் இவைகளாலே உயர்ந்தவர்களின் மேன்மையைக் குறைக்கப் பார்ப்பதும், பாகவதனான சூத்திரனை மற்ற சூத்திரர்களைப்போல் பார்ப்பதும், அபசாரங்கள். பாகவத அபசாரத்திற்குப் பாகவதர்களிடத்திலேயே க்ஷமை கொள்ளவேணும்.

(6) ஒரு பாகவதன் தன்னை வெறுத்தால் தான் குற்றம் செய்யாதிருந்தபோதிலும், அவனிடம் க்ஷமை கொள்ளவேணும். தான் முன்செய்த வினைக்காக எம்பெருமான் அவனைக்கொண்டு தன்னைத் தண்டிக்கிறான் என்று எண்ணவேண்டியது.

முதல் உட்பிரிவில் சொன்ன விஷயத்தைப் பாட்டாலே அருளிச் செய்கிறார்.

**உளதான வல்வினைக் குள்ளம் வெருவி யுலகளந்த**
**வளர்தா மரையிணை வன்சர ணாக வரித்தவர்தாம்**
**களைதா னெனவெழுங் கன்மந் துறப்பர் துறந்திடினும்**
**இளைதா நிலைசெக வெங்கள் பிரானருட் டேனெழுமே. (25)**

(ப-ரை) உளதான - இப்போதிருக்கிற, வல்வினைக்கு - பிலமான பாபங்களுக்கு, உள்ளம் வெருவி - மனது பயப்பட்டு, உலகு அளந்த - பூமியையளந்த எம்பெருமானுடைய, வளர் - பிரும்மலோகம் வரையில் வளர்ந்துபோன, தாமரைஇணை-இரண்டு திருவடித்தாமரைகளை, வன் - பலமான, சரணாக - உபாயமாக, வரித்தவர்தாம் - பற்றின பிரபந்நர்கள், களைதான் என - வயல்களில் பயிர்களையமுக்கும் களைகள்போல், எழும் - கைங்கரியங்களுக்கு விரோதியாகும், கன்மம் - கர்மங்களை, துறப்பர் - விட்டுவிடுவர், அதாவது அவைகளைச் செய்யமாட்டார்கள். துறந்திடினும் - இப்படி அவைகளைச் செய்யாதிருக்கிற விஷயத்திலும், இளைது ஆ - மந்தபுத்தியுள்ளவனாயிருக்கிற, நிலை - இருப்பானது, செக - கெடும்படி, எங்கள் - நம்முடைய, பிரான் - உபகாரகனான எம்பெருமானுடைய, அருள் தேன் - கருணையாகிய தேனானது, எழும் - உண்டாகும்.

(கருத்து) பிராரப்தம் என்று சொல்லப்பட்ட பலமான பாபங்களுக்குப் பயப்பட்டு ஒருவன் பிரபத்தி பண்ணுகிறான். அவன் இங்கேயிருந்து எம்பெருமானை அநுபவிப்பதற்கு விரோ

தியான கர்மங்களைச் செய்யமாட்டான். பாபத்தை உண்டாக்கும் பாபங்களுக்கும் சேர்த்துப் பிரபத்தி பண்ணியிருப்பதாலே. அவனுக்கு புத்திமாந்தியத்தாலே அவிவேகம்வந்து பாபத்தைப் பண்ணுவனோவென்று ஸந்தேஹப் படவேண்டாம். அந்த அவிவேகம் வராதபடி எம்பெருமானுடைய கருணை அவனை ரக்ஷிக்கும்.

குறிப்பு:— (1) பிராரப்தத்தை 'வல்வினை' என்று சொன்னதின் கருத்து அது பக்தியோகத்தால் போகாதென்று.

(2) எம்பெருமானுடைய உலகளந்த திருவடி என்று சொன்னதற்கு அவன் எப்படி அஸுரர்களை ஜயித்து தேவர்களை ரக்ஷித்தானோ, அப்படியே பிரபந்நனுக்குண்டாகும் விரோதங்களைப் போக்கி அவனை ரக்ஷிப்பன் என்று கருத்து.

(3) தாமரை என்றது தாமரைபோன்ற திருவடிகள். அதில் ஒன்று அந்த அவதாரத்தில் வளர்ந்து பிரும்மலோகம் வரையில் போயிற்று.

(4) எம்பெருமானுடைய கருணையைத் தேனாகச் சொன்னதின் கருத்து—தேனை அநுபானமாக வைத்து மருந்து சாப்பிடுகிறவனுக்கு அது தோஷத்தைப் போக்கி நாக்குக்கும் இனிமையாகவும் இருப்பதுபோல், எம்பெருமானுடைய கருணையானது பிரபந்நனுடைய இடஞ்சல்களைப் போக்கும்; போக்கியமாகவும் இருக்குமென்று.

## 19. ஸ்தாநவிசேஷாதிகாரம்.

கீழ் நான்கு அதிகாரங்களினால் பிரபந்நன் அபராதமில்லாமல் எம்பெருமானுக்கும் பாகவதர்களுக்கும் சாஸ்திரத்தைக் கொண்டு கைங்கரியம் பண்ணவேண்டுமென்று சொல்லி, அப்படி கைங்கரியம் பண்ணும்போது, எங்கே இருக்கவேண்டியது என்பது இந்த அதிகாரத்தில் சொல்லப்படுகிறது.

இதில் சொல்லிய விஷயங்கள்:— (1) வர்ணதர்மங்களையும் ஆசிரமதர்மங்களையும் எங்கே ஸரியாய்ச் செய்யக்கூடுமோ அங்கே பிரபந்நன்இருக்கவேண்டியது அவைகளிலும் பாகவதர்கள் வஸிக்கும் இடமே தகுந்தது. அவைகளிலும் எம்பெருமான் அர்ச்சையாக எழுந்தருளியிருக்கும் இடம் மிகவும் சிலாக்கியமானது.

(2) எங்கே வேண்டுமானாலும் வஸிக்கலாமென்று ஒரு வசனமும், புண்யதீர்த்தத்திலோ ச்வபாகன் வீட்டிலோ உடம்பை விட்டுப் போகிறவனும் மோக்ஷத்தை அடைகிறான் என்கிற வேறு வசநமும், எங்கே வேண்டுமோ அங்கே ப்ரபந்நன் இருக்கலாம் என்று சொல்லவில்லையா? பதில்- முதல் வசனம் வேறு கதியில்லாதவன் விஷயம். இரண்டாவது வசனத்திற்கு மோக்ஷமாகிற பலன் வாராமல் போகாதென்று கருத்து.

தேனார் கமலத் திருமக ணாதன் றிகழ்ந்துறையும்
வானாடு கந்தவர் வையத் திருப்பிடம் வன்றருமக்
கானா ரிமயமும் கங்கையுங் காவிரி யுங்கடலும்
நானா நகரமு நாகமுங் கூடிய நன்னிலமே. (26)

(ப-ரை) தேன் ஆர் கமலம்-தேன் நிறைந்த தாமரைப்பூவில் வாஸம் செய்கிற, திருமகள் நாதன் - பிராட்டியின் கணவனான எம்பெருமான், திகழ்ந்து உறையும் - விளங்கி வஸிக்கிற, வான் நாடு - வைகுந்தமாகிய தேசத்திலிருப்பதை, உகந்தவர் - ஆசைப் படுகிறவர்கள், வையத்து இருப்பிடம் - இந்த பூமியிலிருக்கிற இடமானது, வன் தருமம் - நல்ல தபஸ்ஸுகள் செய்யத்தகுந்த, கான் ஆர் - காடுகள் நிறைந்த, இமயமும் - இமயம் என்கிற மலையும், கங்கையும், காவிரியும், கடலும்-ஸமுத்திரத்திலிருக்கிற ச்வேதத்வீபமென்கிற தீவும், நானாநகரமும் - அயோத்யை முதலான பலவிதமான பட்டணங்களும், நாகமும் - வைகுந்தமும், கூடிய - சேர்ந்த, நல் நிலம் - நல்ல இடம்.

(கருத்து) எம்பெருமான் வஸிக்கிற வைகுந்தமாகிய லோகத்தில் இருக்கவேண்டுமென்று ஆசைப்பட்ட பாகவதர்கள் பூமியில் எந்தவிடத்திலிருக்கிறார்களோ, அது மிகவும் சிலாக்கியமானது. அதில் பாட்டில்சொன்ன எல்லாவிடங்களும் சேர்ந்திருக்கின்றன.

குறிப்பு:— இந்தப் பாட்டில் எம்பெருமானுடைய கோயிலிருக்குமிடத்தைச் சொல்லாமல் பாகவதர் வஸிக்குமிடத்தைச் சொல்லுகையாலே இரண்டு இடங்களும் சேராதபோது பின் சொன்னதையே ஒருவன் எடுத்துக்கொள்ளவேணுமென்று கருத்து.

---

## 20. நிர்யாணாதிகாரம்.

இப்படி ஏழு அதிகாரங்களாலே பிரபந்நன் எப்படியிருக்க வேண்டியது, எதைச் செய்துகொண்டிருக்கவேண்டியது, எங்கே யிருக்கவேண்டியது என்று சொல்லப்பட்டது. இனி இருபது முதல் இருபத்திரண்டாவது வரையில் உள்ள மூன்று அதிகாரங் களினால் பிரபத்தியின் பலன்கள் சொல்லப்படுகின்றன. அவை களில் இரண்டு பலன்களை இந்த அதிகாரம் சொல்லுகிறது. அவை களாவன:—

(1) பிரபந்நன் பிரபத்திவாக்கியத்தைச் சொல்லுகிற முதல் க்ஷணத்தில் அவனுடைய புண்ணியங்களையும் பாபங்களையும் அவ னிடமிருந்து பிரித்துவைத்து, அவன் திருநாட்டுக்குப் போகும் போது புண்ணியங்களை அவனுக்கு வேண்டியவர்களிடத்திலும் பாபங்களை அவனுக்கு வேண்டாதவர்களிடத்திலும் எம்பெரு மான் சேர்க்கிறான். இது ஒரு பலன்.

(2) ஜீவனை ஸூக்ஷ்மமான ஐந்து பூதங்களுடனும் பிராணன் மனது பத்து இந்திரியங்கள் இவைகளுடனும் சேர்த்து அவனைத் தன்னிடம் இளைப்பாறும்படி எம்பெருமான் செய்கிறான். இது எல்லா ஜீவன்களுக்கும் உண்டு.

(3) ஹிருதயத்திலிருந்து உச்சந்தலைக்கு ஒரு நாடி போகி றது. அதினுடைய துவாரத்தைப் பிரகாசிக்கும்படி செய்து அதுவழியாய்ப் பிரபந்நனை உடம்பைவிட்டு வெளியே எம்பெருமான் கொண்டுபோகிறான். இது பிரபந்நனுக்கு மாத்திரம் உண்டு. இது இரண்டாவது பலன்.

(4) பக்தன் கடைசி நிமிஷத்தில் எம்பெருமானைத் தான் முன்னால் தியானம் செய்தபடி நினைக்கிறான். இதற்கு அந்திம ஸ்மிருதி என்று பெயர். பிரபந்நனுக்கு இதை எம்பெருமானே உண்டுபண்ணுகிறான்.

(5) நிர்யாணத்திற்குப் பிரபந்நன் விஷயத்தில் காலநியமம் இல்லை. பகலிலோ, இராத்திரியிலோ, சுக்லபக்ஷத்திலோ, கிருஷ்ண பக்ஷத்திலோ, உத்தராயணத்திலோ, தக்ஷிணாயநத்திலோ மர ணம் நேரலாம். சாஸ்திரத்தில் ஏற்பட்ட நியமங்கள் மற்றவர் களுக்காக.

3, 5 உட்பிரிவுகளில் சொன்ன விஷயங்களைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

**நன்னில மாமது நற்பக லாமது நன்னிமித்தம்**
**என்னலு மாமதி யாதானு மாமங் கடியவர்க்கு**
**மின்னிலை மேனி விடும் பயணத்து விலக்கிலதோர்**
**நன்னிலை யாநடு நாடி வழிக்கு நடைபெறவே. (27)**

(ப—ரை) மின் நிலை மேனி - மின்னலைப்போல அதாவது கொஞ்சகாலமேயிருக்கும்படியான உடம்பை, விடும் பயணத்து - விட்டுப்போகும் பிரயாணகாலத்தில், விலக்கு இலது - பிரதிபந்தகமொன்றுமில்லாமல், ஓர் நல் நிலையாம் - ஒரு விலக்ஷணமான நல்ல இருப்பை அதாவது ஸ்வபாவத்தையுடையதான, நடுநாடி - நடுவிலிருக்கிற நாடியிலிருந்து ஆரம்பிக்கிற, வழிக்கு - வழியில், நடைபெற - போவதற்கு, அடியவர்க்கு - பிரபந்நருக்கு, அங்கு - எல்லாவிடங்களிலும், அது-அவைகளுக்குள் அவரிருந்து போகுமிடமானது, நல் நிலம் ஆம் - நல்ல இடமாகும். அது - அவர் போகும் காலமானது, நல் பகல் ஆம் - நல்ல பகல்காலமாகும், அது - அப்போதுண்டாகும் நிமித்தத்தை, நல் நிமித்தம் என்னலும் ஆம் - நல்ல நிமித்தமென்று சொல்லலாம். யாதானும் அது - வேறு எதுவும், ஆம் - தகுந்ததாக ஆகும்.

(கருத்து) பிரபந்நர்கள் ஸ்திரமில்லாத உடம்பை விட்டுத் திருநாட்டிற்குப் போகிற பிரயாணத்தில் பிரதிபந்தகமில்லாமல் நடுநாடியை ஆரம்பமாகவுடைய தேவயாநம் என்கிற வழியில் அவர்கள் போவதற்கு இன்ன இடம், இன்ன காலம், இன்ன சகுநம் வேண்டுமென்பது இல்லை. அவர்கள் விஷயத்தில் எதுவும் நல்லது; அவர்கள் இருந்து போகும் இடமே நல்லது; அவர்கள் போகிற காலமே நல்ல பகல்; அவர் போகும்போது உண்டாகும் சகுநத்தையே நல்ல சகுநம் என்று சொல்லலாம்.

குறிப்பு:- (1) ஒருவன் ஒரு வேலையைச் செய்ய ஆரம்பிக்கும்போது இடமும் காலமும் நன்றாயிருக்கின்றனவா? நல்ல சகுநங்கள் நேருமா? என்று பார்க்கிறான். முக்தியை அடையப் போகிறவனுக்கு இப்படிப் பார்க்கவேண்டாமென்று கருத்து.

(2) 'மின்னிலை மேனி' என்றது ஸ்தூலமான சரீரம். அது மரணகாலத்தில் விடப்படுகிறது. ஸூக்ஷ்மமான சரீரத்துடன் அவன் போகிறான். விரஜை என்கிற ஆற்றின் கரையில் அதையும் விட்டுவிடுகிறான்.

(3) நடுநாடி என்பது ஹிருதயத்திலிருந்து உச்சந்தலைக்குப் போகிற நாடி. இது எல்லா நாடிகளுக்கும் நடுவிலிருப்பதால் நடுநாடி என்று சொல்லப்படுகிறது. மற்ற நாடிகளைப்போல் நரகத்திற்கும் ஸ்வர்க்கத்திற்கும் ஜீவனைக் கொண்டுபோகாமல் மோக்ஷத்திற்குக் கொண்டுபோவதால் அது 'நன்னிலை' என்று ஸ்தோத்ரம் பண்ணப்படுகிறது.

(4) இந்த நாடிவழியாய் வெளிக்கிளம்பினவுடனே தேவயாநம் என்கிற வழி வருகிறபடியால் இவை அதற்கு ஆரம்பம் என்று சொல்லிற்று.

(5) நடுநாடியில் பிரவேசத்திற்கு ஸ்தூலசரீரம் விலக்காயிருக்கிறது. பக்தனுக்கு பிராரப்தகர்மம் முடிந்தவுடனும் பிரபந்நனுக்குக் கோலின காலம் வந்தவுடனும் அந்த உடம்பு போய் பிரதிபந்தகம் நீங்கிவிடுகிறது.

---

## 21. கதிவிசேஷாதிகாரம்.

---

பிரபத்தியின் மூன்றுவது பலன் தேவயாநம் வழியாய்த் திருநாட்டுக்குப் போவது. அது இந்த அதிகாரத்தில் சொல்லப்படுகிறது.

அந்த வழியை அதிகாரப்பாட்டாலே விரிவாய் அருளிச்செய்கிறார்:

நடைபெற வங்கிப் பகலொளி நாளுத் தராயணமாண்
டிடைவரு காற்றி ரவியிர வின்பதி மின்வருணன்
குடையுடை வானவர் கோமான் பிரசாபதி யென்றிவரால்
இடையிடை போகங்க ளெய்தி யெழிற்பத மேறுவரே. (28)

(ப-ரை) நடைபெற - தேவயாநம் என்கிற வழியில் போகும்போது, அங்கி - அக்கினி, பகல், ஒளிநாள் - சுக்கிலபக்ஷம், உத்தராயணம், ஆண்டு - வருஷம், இடைவரு காற்று - வருஷத்துக்கும் ஸூரியனுக்கும் நடுவிலிருக்கிற வாயு, இரவி - ஸூரியன், இரவின் பதி-இராத்திரிக்கு யஜமானனுகிய சந்திரன், மின் - மின்னல், வருணன், குடையுடைவானோர் கோமான் - மூன்று உலகங்களையும் ஆளுவதற்கு அடையாளமான குடையையுடைய

தேவர்களுக்கு யஜமானனுகிய இந்திரன், பிரஜாபதி, என்று இவ ரால் - என்று சொல்லப்பட்ட இவர்களால், இடையிடை - தங் கள் தங்கள் எல்லைக்குள் கொடுக்கப்பட்ட, போகங்கள் - போகங் களை, எய்தி - அடைந்து. எழில் - பிரகாசிக்கிற, பதம் - வைகுந் தத்திற்கு, ஏறுவர்.

(கருத்து) முக்தனுகப்போகிறவன் தேவயானத்தில் போகும் போது பாட்டில் சொன்னவர்கள் அழைத்துக்கொண்டுபோய், அவனுக்கு தங்கள் தங்கள் எல்லைக்குள் போகங்களைக் கொடுக்கி ருர்கள். அவைகளை அநுபவித்துக்கொண்டு அவன் திருநாட்டுக் குப் போகிருன்.

குறிப்பு:- (1) முதல் ஐந்து சொற்கள் காலங்களைச் சொன்ன போதிலும், அவைகளின் அபிமானி தேவதைகளைச் சொல்லு கின்றன.

(2) இந்தப் பாட்டில் சொல்லப்பட்டவர்கள் முக்தி அடைகிற வனைத் திருநாட்டுக்கு அழைத்துக்கொண்டுபோகிருர்கள். அவர் களுக்கு ஆதிவாஹிகர்கள் என்று பெயர்.

(3) மின்னலில் இருக்கிற ஒரு புருஷன் இவனை நேராக எம் பெருமானிடம் கொண்டுபோகிருன். மின்னலுக்கு மேலே சொல்லப்பட்ட மூன்று பேர்களும் அவனுக்கு ஸஹாயமாயிருக் கிருர்கள்.

## 22. பரிபூர்ண ப்ரம்மாநுபவாதிகாரம்.

பிரபத்தியின் நாலாவது பலன் இந்த அதிகாரத்தில் சொல் லப்படுகிறது.

அதில் எம்பெருமானை அவனுடைய திருமேனி, நல்ல குணங் கள், அவன் ஆளும் இரண்டு விபூதிகள் இவைகளுடன் கூட முக் தன் அநுபவிக்கிருன், இந்த விஷயத்தில் சில ஸந்தேஹங்கள் இந்த அதிகாரத்தில் தீர்க்கப்படுகின்றன. அவைகளாவன—

(1) இங்கிருந்த காலத்தில் வஸ்துக்கள் கொஞ்ச ஸுகத் தையும், துக்கத்தையும் கொடுப்பதாக எல்லாருக்கும் தெரியுமே. அவைகள் முக்தனுக்குக் கர்மம் போய்விட்டதாலும் முன்போல் எம்பெருமானை விட்டு அவைகளை அநுபவிக்காமல், எம்பெருமா னுடன் கூட சேர்த்து அநுபவிப்பதாலும் மிகுந்த ஆநந்தத் தைக் கொடுக்கும்.

(2) முக்தனுடைய ஸ்வரூபமும் எம்பெருமானுடைய ஸ்வரூபமும் ஒன்றாக ஆகிறதில்லை, ஆனால் அவனுக்கு ஸமமாக ஆகிறான்.

(3) உலகத்தை உண்டுபண்ணி ரக்ஷித்து அழிக்கும் வேலையும், மோக்ஷத்தைக் கொடுப்பதும் முக்தனுக்கு இல்லை. ஸமமாயிருப்பது போகத்தில் மாத்திரம்.

(4) எம்பெருமானுக்கு எவைகள் ஆநந்தத்தைக் கொடுக்குமோ, அவைகளெல்லாம் முக்தனுக்குமுண்டு. அவைகள் எம்பெருமானுக்கு எவ்வளவு ஆநந்தத்தைக் கொடுக்குமோ, அவ்வளவும் முக்தனுக்கும் உண்டு. இவைகளுக்கு ஸாயுஜ்யம் என்றும் ஸார்ஷ்டிதை என்றும் பெயர். எல்லா முக்தர்களுக்கும் ஆநந்தம் ஒரேவிதமாயிருக்கும்.

(5) இவை இரண்டும்தான் மோக்ஷமென்று சொல்லப்படுறது. ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம் என்கிற மூன்று மாத்திரம் மோக்ஷமல்ல. ஸாலோக்யம் என்பது எம்பெருமான் இருக்கும் உலகத்தில் இருப்பது. ஸாமீப்யம் என்பது அவன் கிட்டே இருப்பது. ஸாரூப்யம் என்பது அவனுடைய வேஷம் போன்ற வேஷமுள்ளவனாயிருப்பது. முக்தனுக்கு இவை மூன்றும் ஸாயுஜ்யம் என்பதில் அடங்கியிருக்கின்றன.

(6) எம்பெருமானை அநுபவித்து ஸந்தோஷம் உள்ளடங்காமல் அவனுக்குக் கைங்கரியம் செய்யும் முக்தன் ஸம்ஸாரத்திற்கு மறுபடியும் தன் இச்சையால் வரமாட்டான். எம்பெருமானும் அவனை அனுப்பமாட்டான்.

ஆறாவது உட்பிரிவில் உள்ள விஷயத்தைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

ஏறி யெழிற்பத மெல்லா வுயிர்க்கு மிதமுகக்கும்
நாறு துழாய்முடி நாதனை நண்ணி யடிமையினம்
கூறு கவர்ந்து குருக்கள் குழாங்கள் குரைகழற்கீழ்
மாறுத லின்றி மகிழ்ந்தேழும் போகத்து மன்னுவமே. (29)

(ப-ரை.) எழில் பதம் - பிரகாசிக்கிற வைகுந்தமென்கிற இடத்தில், ஏறி, எல்லா உயிர்க்கும்-எல்லா ஜீவன்களுக்கும், இதம்-உபாயமான சின்ன வியாபாரத்தை, உகக்கும்- பெரிதாக எண்ணி

ஸந்தோஷப்படும், நாறு துழாய் முடி - வாஸனையை யுடைய துளஸிமாலையைத் திருமுடியிலுடைய, நாதனை - யஜமானனை எம்பெருமானை, நண்ணி - கிட்டி, அடிமையில் - அவனுக்குச் செய்யும் கைங்கரியங்களில், நம் கூறு - நம்முடைய பாகத்தை, கவர்ந்து - அடைந்து, குருக்கள்- ஆசாரியர்களுடைய, குரை கழல் கீழ் - சப்திக்கிற திருவடிகளின் கீழ், எழும் போகத்து - மேல் மேல் அதிகமாகும் எம்பெருமானுடைய அநுபவத்தில், மகிழ்ந்து- ஸந்தோஷப்பட்டு, மாறுதல் இன்றி - ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருதலில்லாமல், மன்னுவம் - ஸ்திரமாயிருப்போம்.

(கருத்து.) வைகுந்தமென்ற இடத்தில் போய்ச் சேர்ந்து எல்லா ஆத்மாக்களும் செய்யும் ஸ்வல்பமான ஹிதத்தைப் பெரிதாக ஸந்தோஷப்பட்டு அவர்கள் வேண்டியதைச் செய்யும் எம்பெருமானைக்கிட்டி அவனுடைய கைங்கரியத்தில் நமக்குண்டான பாகத்தை அடைந்து, நம்முடைய ஆசாரியர்களின் திருவடியின் கீழ் இருந்து அங்கே எம்பெருமானுடைய அநுபவத்தில் மகிழ்ந்து ஸ்திரமாய் இருப்போம். இதற்கு ஒருநாளும் மாறுதல் கிடையாது. அதாவது:- ஒரு நாளும் இந்த அநுபவத்தைவிட்டு ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வரமாட்டோம்.

குறிப்பு:— (1) ஹிதம் என்பது அநுகூலமான வியாபாரம். அதாவது:- நாம் செய்யும் பிரபத்தி. இதை வியாஜமாகக்கொண்டு நமக்குப் பரிபூர்ணமான தன்னுடைய அநுபவத்தை எம்பெருமான் கொடுக்கிறான் என்று கருத்து.

(2) 'நம் கூறு'- எம்பெருமானுக்கும் நமக்கும் இருக்கிற உறவாலே அவனுடைய கைங்கரியத்தில் நமக்கும் பாகம் உண்டு. எப்படி தகப்பனாருடைய ஸொத்தில் ஒவ்வொரு பிள்ளைக்கும் அவனுடைய உறவினாலேயே பாகம் உண்டோ, அப்படியே.

(3) 'குரை கழல்'- நம்முடைய ஆசாரியர்கள் விரோதிகளைக் கண்டித்து நல்ல மதத்தை உறுதிப்படுத்தி நம்மை எம்பெருமானிடம் சேர்த்ததால், அவன் ஸந்தோஷப்பட்டு அவர்களுடைய திருவடிகளில் தரிக்கும்படி ஒரு நகையைக் கொடுத்திருக்கிறான். அது சப்தித்துக் கொண்டிருக்கிறது.

## 23 ஸித்தோபாய சோதநாதிகாரம்.

இப்படி இருபத்திரண்டு அதிகாரங்களாலே மூன்று ரஹஸ்யங்கள் சொல்லுகிற ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் என்கிற இவைகளை விரிவாய்ச் சொல்லி, உபாயவிஷயமாய்ச் சிலர் செய்யும் அதிவாதங்களை நான்கு அதிகாரங்களால் கண்டிக்கிறார். அவைகளில் இந்த அதிகாரத்தில் எம்பெருமானுடைய ஸ்வபாவங்களைக் கொண்டு செய்யும் அதிவாதங்களைக் கண்டிக்கிறார்.

அவைகளாவன:— (1) எம்பெருமான் மிகுந்த கருணை உள்ளவன். அவன் ஸ்வதந்திரன். ஆகையாலே ஒருவனை எப்போது ரக்ஷிக்கவேண்டுமென்று எண்ணுகிறானோ, அப்பொழுது ரக்ஷிப்பன். அதற்காக நாம் ஒன்றையும் செய்யவேண்டாம்.

(2) நாம் எம்பெருமானுடைய ஸொத்து. அவன் ஸொத்துக்காரன். ஸொத்துக்காரன் தன் ஸொத்தைத் தானே ரக்ஷிப்பன். நாமோ தாயார் பால் குடிக்கிற குழந்தைகள் போல் இருக்கிறோம். ஆகையால் நம்மை ரக்ஷிக்கவேண்டுமென்று எம்பெருமானைப் பிரார்த்திப்பது நம்முடைய ஸ்வரூபத்திற்குப் பொருந்தாது.

(3) பிராட்டிக்கு நாம் செய்யும் பிரபத்தியில் ஸம்பந்தமில்லை. எம்பெருமான் ஒருவனே நம்முடைய கர்மங்களைப் போக்கி ரக்ஷிக்கிறான். நாம் செய்யப் போகும் கைங்கரியங்களிலே மாத்திரம் பிராட்டியும் எம்பெருமானும் உத்தேச்யர்கள்.

இந்த அதிவாதங்களுக்குக் கண்டனத்தையும் அவைகளுக்குப் பரிஹாரத்தையும் பாட்டாலே அருளிச் செய்கிறார்.

மன்னு மனைத்துறை வாய்மருண் மாற்றரு ளாழியுமாய்த்
தன்னினை வாலனைத் துந்தரித் தோங்கும் தனியிறையாய்
இன்னமு தத்த முதாலிரங் குந்திரு நாரணனே
மன்னிய வன்சரண் மற்றோர்பற் றின்றி வரிப்பவர்க்கே. (30)

(ப-ரை.) மன்னும் - ஸ்திரமாயிருக்கும், அனைத்து உறவாய் - எல்லாவிதமான உறவாயும், மருள் மாற்று - அஜ்ஞானத்தைப் போக்கும்படியான, அருள் ஆழியும் ஆய் - கருணை ஸமுத்திரமாயும், தன் நினைவால் - தன்னுடைய ஸங்கல்பத்தாலே, அனைத்

தும் - எல்லாவற்றையும், தரித்து - தூக்கிக்கொண்டு, ஓங்கும் - விளங்குகிற, தனி இறையாய் - ஒப்பற்ற ஈசுவரனாயும், இன் அமுதத்து - இனிமையான திருப்பாற்கடலில் பிறந்த, அமுதால் - அமுதம் போல் போக்கியையான பிராட்டியின் சிபார்சைக்கேட்டு, இரங்கும் - தயை செய்கிறவனாயுமிருக்கிற, திரு நாரணனே - பிராட்டியோடு கூடிய நாராயணனே, மற்று ஓர் பற்று இன்றி - வேறு உபாயமில்லாமல், வரிப்பவர்க்கு - தன்னை உபாயமாகக் கேட்டுக் கொள்ளுபவர்களுக்கு, வன் சரண் - திடமான உபாயம்.

(கருத்து.) எம்பெருமான் எல்லாவிதமான உறவாயும், நம்முடைய அஜ்ஞாநத்தைப் போக்கும் கருணா ஸமுத்திரமாயும், தன்னுடைய ஸங்கல்பத்தாலே எல்லாவற்றையும் தூக்கிக் கொண்டு நியமநம் செய்துகொண்டும் இருக்கிறான். பிராட்டி நம்மைப்பற்றி சிபார்சு செய்ய அதற்கு இரங்குகிறான். பக்தியாகிய உபாயமில்லாமல் வருத்தப்பட்டு, ரக்ஷிக்கவேண்டுமென்று பிரபத்திபண்ணுகிறவர்களுக்கு அவனும் பிராட்டியும் சேர்ந்தே உபாயமாய் இருக்கிறார்கள்.

குறிப்பு:— (1) இந்தப் பாட்டில் முதல் இரண்டு அடிகளாலே எம்பெருமானுக்கும் நமக்கும் இருக்கும் உறவும், அவனுடைய கருணையும், அவன் ஸ்வதந்திரனாயிருப்பதும் சொல்லப்படுகின்றன. இதினாலே அதிவாதம் பண்ணுகிறவர்களுக்கு ஒரு காரணம் ஏற்படுகிறது.

(2) பின் இரண்டு அடிகளாலே அதிவாதங்களுக்குப் பதில் சொல்லப்படுகிறது. 'வரிப்பவர்க்கே' என்பதினால் சரணாகதி பண்ணவேண்டுமென்றும், அதை வியாஜமாகக் கொண்டு எம்பெருமான் ரக்ஷிப்பன் என்றும் காட்டப்படுகிறது. இந்த வியாஜமில்லாவிட்டால் அவனுக்குப் பக்ஷபாதம் என்கிறகுற்றம் உண்டாகும்.

(3) 'திரு நாரணனே வன் சரண்' என்பதினாலே பிராட்டியோடு கூடிய எம்பெருமான் உபாயம் என்று காட்டப்படுகிறது. எம்பெருமான் மாத்திரம் உபாயமன்று.

(4) இப்படி உபாயமாய் இருப்பதுமன்றி பிராட்டி புருஷகாரமாயும் இருக்கிறாள். புருஷகாரமென்பது ஒருவன் ஒருவனுக்கு வேண்டியதைக்கொடுக்கும் சேதநன்முன்னால் போவதற்கு உபாயமாயிருக்கிற இன்னொரு சேதநன். பிராட்டி எம்

பெருமானிடத்தில் சிபார்சு செய்து பிரபத்தி செய்கிறவனை எம் பெருமான் முன்னாலே வரும்படிசெய்கிறாள். ஆகையால் அவள் புருஷகாரம்.

(5) 'வன்சரண்' என்பதின் கருத்து- பக்தியோகஸ்தாநத்திலிருந்து எம்பெருமானும் பிராட்டியும் அது செய்யும் வேலைகளைப் பிரபந்நனுக்குச் செய்து அவனை ரக்ஷிக்கிறார்கள்– என்று.

## 24. ஸாத்திய உபாய சோதநாதிகாரம்

இப்படி ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றி யுண்டாகும் அதிவாதங்களுக்குப் பதில் சொல்லி, இந்த அதிகாரத்தில் பக்தி பிரபத்தி என்கிற உபாயங்களைப் பற்றிச் சொல்லும் அதிவாதங்களுக்குப் பரிஹாரங்களை அருளிச்செய்கிறார்.

அந்த அதிவாதங்களாவன —

1. பிரபத்தியானது வேதத்தில் சொல்லப்பட்ட தர்மம். அதில் எல்லாருக்கும் அதிகாரம் இல்லை.

2. விச்வாஸமே பிரபத்தி—பிரார்த்தனையே பிரபத்தி— ஆகையாலே பரஸமர்ப்பணம் என்பது ஒன்று இல்லை.

3. (1) நாம் எம்பெருமானுக்குச் சேஷன் என்கிற ஞானமே போதும். ஆகையால் ஆத்மஸமர்ப்பணம் வேண்டியதில்லை. (2) 'சரணம் வ்ரஜ' என்பது விதியன்று. என்னை உபாயமாக அறி என்று அதன் பொருள். ஆகையால் ஒரு வாக்கியத்தால் உண்டாகும் ஜ்ஞானமே பிரபத்தி என்கிற உபாயம். (3) தன்னை ரக்ஷிக்கிற வியாபாரத்திலிருந்து தான் திரும்புவதே பிரபத்தி. (4) பிரபத்தியானது உபாயமாயிருந்தாலும், ஸஹகாரியாயிருந்தாலும், ஈச்வரனுடைய ஸ்வபாவத்திற்கு விரோதம். (5) பிரபத்தியை ஒருவன் தானே செய்வான்; ஆகையால் அதை விதிக்கவேண்டியதில்லை. விதிக்குப் பிரயோஜநமில்லை.

4. பக்தியாகிற உபாயம் ஸ்வரூபத்திற்குப் பொருந்தாது. இதை மூன்று விதமாக விகல்பித்து என்ன விரோதமென்று கேழ்க்கப்படுகிறது. (1) அது ஸ்வரூபத்தை நாசம் செய்கிறதா ? (2) ஆத்மஸ்வரூபத்துக்கு வியாபாரம் இல்லையா ? ஞானம்,செய்ய வேணுமென்கிற இச்சை, பிரயத்னம் ஆகிய கர்த்ருத்துவம் இல்லை என்றா ? (3) ஸ்வரூபத்திற்கு ஏதாவது கெடுதலைச் செய்கிறதா?

5. (1) பக்தியோகத்திற்கு வர்ணாசிரமதர்மங்கள் ஸஹகாரிகள் என்று சொல்லப்படுகின்றன. ஸ்வரூபத்தில் வர்ணமும் ஆச்ரமமும் இல்லை. அவைகளை எப்படிச் செய்யக்கூடும்? (2) உபாஸநத்திலும், அதின்அங்கங்களிலும் அஹங்காரம் கலந்திருக்கிறது. ஆகையால் அவைகளைச் செய்யக்கூடாது. (3) கர்மயோகம் முதலானவைகள் உடம்பாலும், இந்திரியங்களாலும் செய்யவேண்டியவைகள். அவைகள் கர்மமாகிய உபாதியால் வந்தவைகள், ஸ்வரூபத்தில் உபாதி இல்லை. ஆகையால் அதற்கு அவைகள் பொருந்தா. (4) பக்தியோகம் முதலானவைகள் தான் எம்பெருமானுக்குச் சேஷனாயிருப்பதற்கு அநுரூபமன்று. தான் பரதந்திரனாய் இருப்பதால் அவைகளைச் செய்யமுடியாது. (5) பிரபந்நன் பரமைகாந்தி, அதாவது எம்பெருமானைத்தவிர ஒருதேவதையையும் கனவிலும் நினைக்கமாட்டான். இந்திரன், அக்னி முதலான தேவதைகளின் பெயர்களையுடைய மந்திரங்களைச்சொல்லி அவன் எப்படி வர்ணதர்மங்களையும் ஆசிரமதர்மங்களையும் செய்கிறது. (6) பிரபத்தியில் ஒருவனுக்கு ருசிபிறப்பதற்காக பக்தி விதிக்கப்படுகிறது. அதை ஒருவன் செய்யவேண்டுமென்று கருத்து இல்லை. (7) பக்தியானது விதிக்கப்பட்டதேயாகிலும், அதை ஆசாரியர்கள் எடுத்துக்கொள்ளாததினாலே அது செய்யக்கூடாது. (8) கலியுகத்தில் பக்தியைச் செய்கிறவர்கள் துர்லபமாகையால் அது காலத்திற்குப் பொருந்தாது.

6. (1) அநுகூலனாய் இருப்பேன், பிரதிகூலனாய் இருப்பதை விட்டுவிடுவேன் என்பவைகள் பிரபத்திக்கு அங்கமன்று. (2) ஆஸ்திகனுக்கு சாஸ்திரத்தில் சொன்ன விஷயங்களில் விச்வாஸம் உண்டு. இதற்கு அதிகமாக மஹாவிச்வாஸமென்பது ஒன்று கிடையாது. (3) மஹாவிச்வாஸ விஷயத்தில் கேழ்விகள் (4) பக்தியும் பிரபத்தியும் புத்திபேதத்தாலே விருத்தமானபலன்களைக் கொடுக்குமோ? (5) பக்தியைத் தினம் செய்யவேண்டியது. பிரபத்தியையோ ஒரே தடவை. அவை இரண்டும் ஒரே பலனை எப்படிக் கொடுக்கும்? (6) பிரபத்தி பண்ணுகிறவர்களுக்கு உபாயம் ஒரேவிதமானது, பலனும் ஒன்று, அப்படியிருக்க ஒருவனுக்குபலன் உடனேயும்,மற்றொருவனுக்கு தாமதித்தும் எப்படி வரக்கூடும்? (7) எம்பெருமானை யாதானுமொருவன் பரர்க்கிறான்,

மற்றவர்கள் பார்க்கிறதில்லை. இது எப்படி? (8) நாம் இப்போதே பார்க்கக்கூடிய பலனுக்காகச் செய்யும் பிரபத்தி சில வேளையில் பலனைக் கொடுக்கவில்லையே, ஏன் ?

7. பிரபத்தியை ஒரே தடவை செய்வதாலே மோக்ஷம் கிடைக்கும்போது நாராயணனை எப்போதும் தியானம் செய்ய வேண்டியது என்கிற வசனத்திற்கு என்ன கதி ?

அதிகாரத்தின் அர்த்தங்களைப் பாட்டாலே அருளிச் செய்கிறார்.

**வரிக்கின் றனன்பரன் யாவரை யேன்னு மறையதனில்**
**விரிக்கின் றதுங்குறி யோன்றால் வினையரை யாதலினும்**
**உரைக்கின்ற நன்னெறி யோரும் படிகளி லோர்ந்துலகம்**
**தரிக்கின்ற தாரக னார்தக வாற்றரிக் கின்றனமே.** (31)

(ப-ரை)பரன் - எல்லாருக்கும் மேற்பட்ட எம்பெருமான், யாவரை - எவரை, வரிக்கின்றனன் - வரிக்கிறானோ என்று, மறையதனில் - வேதத்தில், விரிக்கின்றதும் - விஸ்தாரமாய்ச் சொல்லுகிறதுவும், வினையரை - கர்மங்களைச் செய்திருக்கிறவர்களை, குறியொன்றால் - ஒரு வியாஜத்தாலேதான், ஆதலில் - ஆகையாலே, நாம், உரைக்கின்ற - சாஸ்திரம் சொல்லுகிற, நல் நெறி - பக்தி பிரபத்தி என்கிற நல்ல உபாயங்களை, ஓரும்படிகளில் - சாஸ்திரம் சொல்லுகிறவிதமாகவே, ஓர்ந்து - அவைகள் உபாயங்கள் என்றும், அவைகளால் ஸந்தோஷப்படும் எம்பெருமானே முக்கியமான உபாயம் என்றும் தெளிந்து, உலகம் - உலகங்களை, தரிக்கின்ற - தூக்கிக்கொண்டும், தாரகனார் - ஜீவன்களை ஸம்ஸாரத்திலிருந்து வெளியே கொண்டுபோகும் எம்பெருமானுடைய, தகவால் - கருணையால், தரிக்கின்றனம் - பிழைத்திருக்கிறோம்.

(கருத்து) எம்பெருமான் எவனை வரிக்கிறானோ அவன்தான், அவனை அடையலாம் என்று வேதம் விஸ்தாரமாய்ச் சொல்லுகிறது. கர்மங்களைச்செய்து எம்பெருமானுடைய கோபத்திற்கு விஷயமாயிருக்கிற நம்மை வரிப்பது ஒரு வியாஜத்தாலேதான். அப்படியில்லாவிட்டால் எல்லாரையும் ரக்ஷிக்கும்படி நேரிடும். ஆகையால் சாஸ்திரம் விதிக்கிற பக்தி பிரபத்தி என்கிற உபாயங்களை அது சொல்லுகிற பிரகாரம் செய்தால், அவைகள் எம்பெருமானுடைய பிரஸாதத்தை உண்டுபண்ணுகின்றன,

நேரே உபாயமானது எம்பெருமான்தான் என்று தெளிந்து உலகத்தைத் தூக்கிக்கொண்டு ஸம்ஸாரத்திலிருந்து விடுவிக்கும் எம்பெருமானுடைய கருணையால் நாம் உஜ்ஜீவிக்கிறோம்.

---

## 25. பிரபாவ வியவஸ்தாதிகாரம்.

---

இப்படி இரண்டு அதிகாரங்களாலே உபாயவிஷயமான அதிவாதங்களைக் கண்டித்து, இந்த அதிகாரத்தில் பிரபத்திக்கு என்ன பெருமை இருக்கிறதோ, அதற்கு மேற்பட்டு அதுவிஷயமாய்ச் சொல்லும் அதிவாதங்களைக் கண்டிக்கிறார். அதிவாதங்களாவன:--

1. எம்பெருமானிடத்தில் பக்தியுள்ள எல்லாரும் ஒரேஜாதி.

2. பிரபந்நன் விஷயமான இரண்டு சுலோகங்கள்.

அந்த சுலோகங்களின் பொருள்- நாராயணன் ஒருவனையே நினைத்துக்கொண்டிருக்கிறவன் எந்த விருத்தியால் பிழைக்கிறானோ, அது எம்பெருமானுடைய ஆராதனம்; அவன் எதைச் சொல்லுகிறானோ, அது ஜபம்; அவன் எதைப் பார்க்கிறானோ, அது தியானம்; அவன் காலில் பட்ட ஜலம் ஒப்பில்லாத தீர்த்தம்; அவனுடைய எச்சில் மிகுந்த பரிசுத்தியைக் கொடுப்பது; அவன் எது சொல்லுகிறானோ, அது உயர்ந்த மந்திரம்; அவன் எதைத் தொடுகிறானோ, அது சுத்தமாகிறது.

3. (1) சரமச்லோகத்தில் "எல்லா தர்மங்களையும் விடு" என்று சொல்லுகிறபடியாலே பிரபந்நன் எல்லா தர்மங்களையும் விட்டுவிட வேண்டியது. நிவிருத்திரூபமான தர்மத்தை விட வேண்டுமென்கிற வசனத்தினால் செய்யக்கூடாதென்கிற காரியங்களையும் செய்யவேண்டியதென்று சொல்லப்படுகிறது. (2) பிரபந்நன் புத்திபூர்வமாக ஒரு பாபம் செய்தால் அது அவனிடம் ஒட்டாது.

(4) பாகவதனுடைய புத்திபூர்வமான பாபம் பொறுக்கப்படும். அதிகாரத்தின் அர்த்தத்தைப் பாட்டால் அருளிச்செய்கிறார்:-

தகவாற் றரிக்கின்ற தன்னடி யார்களைத் தன்றிறத்தில்
மிகவா தரஞ்செய்யு மெய்யருள் வித்தகன் மெய்யுரையின்
அகவா யறிந்தவ ராரண நீதி நெறிகுலைதல்
உகவா ரெனவெங்க டேசிக ருண்மை யுரைத்தனரே. (32

(ப-ரை) தகவால் - எம்பெருமானுடைய கருணையால், தரிக்கின்ற - பிழைத்திருக்கிற, தன் அடியார்களை-தன்னுடைய தாஸர்களை, தன் திறத்தில் - தன்னைப்போல் செய்வதில், மிக ஆதரம் செய்யும் - மிகுந்த பிரீதிபண்ணும், மெய் அருள் - பழுதில்லாத கருணையையுடைய, வித்தகன் - ஆச்சரியமான வேலைகளைச் செய்யும் எம்பெருமானுடைய, மெய் உரையின் - உண்மையான சொல்லாகிய சரமச்லோகத்தின், அகவாய் - உட்கருத்தை, அறிந்தவர் - அறிந்தவர்களான வியாஸர் முதலானவர்கள், ஆரணம் நீதி நெறி - உபநிஷத்துக்களில் சொல்லிய தர்மமார்க்கமானது, குலைதல் - கெட்டுப்போவதை, உகவார் - ஒப்புக்கொள்ளமாட்டார்கள், என - என்று, எங்கள் தேசிகர் - நம்முடைய ஆசாரியர்கள், உண்மை உரைத்தனர் - சரமச்லோகத்தின் உண்மையான அர்த்தத்தைச் சொல்லிக்கொடுத்தார்கள்.

(கருத்து) எம்பெருமானுடைய கருணை ஒருபோதும் வீணாகிறதில்லை. அவனுடைய உண்மையான சொல்லாகிற ஸ்ரீகீதையின் கடைசி ச்லோகத்தினுடைய உட்கருத்தை அறிந்த வியாஸர் முதலான பெரியோர்கள் வேதாந்தத்தில் சொல்லப்படுகிற தர்மமார்க்கமானது கெட்டுப்போவதை ஒப்புக்கொள்ளமாட்டார்கள் என்று அந்த ச்லோகத்தின் ஸரியான அர்த்தத்தை நம்முடைய ஆசாரியர்கள் நமக்கு உபதேசத்திருக்கிறார்கள். அந்த எம்பெருமான் எப்படியிருக்கிறான் என்றால்:-- அவனுடைய கருணையைக் கொண்டு பிழைத்திருக்கும் தன்னுடைய தாஸர்களைத் தன்னைப் போல் செய்து அவர்களிடத்தில் மிகவும் பிரீதி செய்கிறவன். ஆகையால், அவனுடைய வசநமானது உண்மையானதென்று நம்பலாம்.

குறிப்பு:-(1) ஸ்ரீகீதையின் கடைசி ச்லோகத்தின் உட்கருத்தை வியாஸர் முதலான பெரியோர்கள் நன்றாய் அறிந்தவர்கள். அவர்களுடைய மதத்திற்குக் கீழேசொன்ன அதிவாதங்கள் விருத்தங்களாகையால் அவைகளை ஒருவரும் ஒப்புக்கொள்ளக் கூடாது என்று கருத்து.

(2) அந்தப் பெரியோர்கள் சொன்னபடி உண்மையான அர்த்தத்தை நம்முடைய ஆசாரியர்கள் சொல்லிக்கொடுத்திருக்கிறபடியாலே நம்முடைய ஸம்பிரதாயமே ஸரியானது என்றும் கருத்து.

(3) எம்பெருமானுடைய கருணையினாலே பிழைத்திருப்பதாவது:- அந்தக் கருணையை நம்பி அவனிடத்தில் பிரபத்தி செய்வது.

(4) "தன்னைப் போல் செய்து" என்று உரையில் சொன்னதற்குத் தன்னைப்போல் அபஹதபாப்மத்வம் முதலான எட்டு குணங்களை யுடையவனாகச் செய்கிறது என்று பொருள். இப்படி அதிகம் பிரீதியை எம்பெருமான் செய்கிறான். இதற்கு வேறு விதமாகவும் பொருள் சொல்லலாம்— எம்பெருமான் தனக்கு எவ்வளவு மஹிமை இருக்கிறதோ, அதைக்காட்டிலும் அதிக மஹிமையுள்ளவர்களிடத்தில் போல் பிரபந்நர்களிடத்தில் மிகுந்த பிரீதி பண்ணுகிறான்.

(5) இப்படி எம்பெருமானுடைய ஸ்வபாவம் இருப்பதால் தன்னிடத்தில் பிரபத்தி பண்ணின அர்ஜுனனுக்கு உண்மையையே சொல்லவேண்டியவன், ஆகையால் ஸ்ரீ கீதை முழுவதையும் அதின் கடைசி சுலோகத்தையும் மெய் உரை என்று சொல்லலாம்.

---

## 26. பிரபாவ ரக்ஷாதிகாரம்.

இப்படி பிரபத்திக்குள்ள மஹிமைக்கு மேல் அதிக மஹிமையுள்ளதாகச் சொல்லும் அதிவாதங்களைக் கண்டித்து, அதன் பெருமையைக் குறைக்கிறவர்கள் சொல்லும் தூஷணங்களுக்குப் பரிஹாரத்தை இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிறார்.

அந்த தூஷணங்களாவன:—

(1) பிரபந்நனுக்கு எம்பெருமான் ஏன் துக்கத்தை உண்டுபண்ணுகிறான்? (1) துக்கம் கலப்பில்லாத ஸுகத்தை ஏன் கொடுக்கவில்லை? (2) பிரபத்தி பண்ணின காகாஸுரனுடைய ஒரு கண்ணை ஏன் சக்கிரவர்த்திதிருமகன் அழித்துவிட்டான். (3) பிரபத்தியானது ஒரு க்ஷணத்தில் செய்யப்படுகிறது, அது அளவில்லாத ஆநந்தமாகிய பலனை எப்படிக் கொடுக்கக்கூடும்? இவைகளுக்குப் பரிஹாரங்கள் சொல்லப்பட்டன.

(2) மேலே சொல்லப்பட்ட விஷயங்கள்— பாகவதர்கள் ஒருகால் பணத்தில் ஆசையுள்ளவர்களாயும், பஞ்சஸம்ஸ்காரங்களில்

ஏதேனும் ஒன்று இல்லாதவர்களாயும், கெட்டநடவடிக்கை உள்ள வர்களாகவும் இருக்கலாம். அவர்கள் விஷயத்தில் மரியாதைக் குறைவைச் செய்யக்கூடாது. நம்முடைய மதத்தின் உண்மையை உள்ளபடி அறிந்து அதை எப்போதும் நினைத்துக்கொண்டு கர்ம பந்தத்திலிருந்து எப்போது நாம் விடுபடுவோம் என்று பரபரப் புள்ளவர்களாய், எம்பெருமானிடத்தில் மனது படிந்து மோக்ஷோ பாயம்ஒன்றில் இரங்கினவர்கள் பாகவதர்கள்.

(3) பாகவதனுயில்லாமல் பாகவதன்போல் தன்னைக் காட்டு கிறவனை அவனுடைய உண்மையான தன்மையை நாம் அறிகிற வரையில் அவனிடத்தில் பிரீதி பண்ணவேண்டியது.

(4) எம்பெருமானிடத்தில் த்வேஷம் இல்லாதிருந்தால் மாத் திரம் அவனுடைய நாமங்களைக் கீர்த்தனம்செய்வது பாபத்தைப் போக்கும். த்வேஷமுடைய சிலர் மோக்ஷமடைந்தது அவர்களு டைய முன் செய்த புண்ணியத்தினுலே. அவர்கள் விசேஷ அதிகாரிகள்.

(5) எம்பெருமானுக்குப் பிரதிகூலனுய் இல்லாதிருந்தால் மாத்திரம் ஒருவனுக்குத் திவ்யதேசத்திலிருப்பது நல்லகதியைக் கொடுக்கும். இந்த இரண்டு விஷயங்களுக்கு நேரே இந்த அதிகா ரத்தில் ஸம்பந்தமில்லாவிட்டாலும் பிரஸங்கத்தினுலே அவை களின் நினைவு வந்தது. அவைகளை விடக்கூடாதென்று ஸ்ரீ தே சிகன் அருளிச்செய்கிருர்.

இரண்டாவது பிரிவில் சொன்ன ஸங்கதியைப் பாட்டாலே அருளிச்செய்கிருர்.

உண்மை யுரைக்கு மறைகளி லோங்கிய வுத்தமனுர்
வண்மை யளப்பரி தாதலின் வந்து கழல்பணிவார்
தண்மை கிடந்திடத் தரமள வென்ன வியப்பிலதாம்
உண்மை யுரைத்தன ரோரந் தவிர வுயர்ந்தனரே. (33)

(ப-ரை.) உண்மை உரைக்கும் - உண்மையான விஷயங்களையே சொல்லும், மறைகளில் - உபநிஷத்துக்களில், ஓங்கிய - விளங் குகிற, உத்தமனுர் - புருஷோத்தமன் என்று சொல்லப்பட்ட எம்பெருமானுடைய, வண்மை - பெருமையை, அளப்பு அரிது - இவ்வளவென்று எண்ணமுடியாது. ஆதலின் - ஆகையால், வந்து கழல் பணிவார் - அவனிடம் வந்து அவனுடைய திருவடிகளில்

நமஸ்காரம் பண்ணுகிறவர்களிடத்தில், அதாவது பிரபத்தி பண்ணுகிறவர்களிடத்தில், தண்மை - தாழ்ச்சியானது, கிடந்திட - இருந்தபோதிலும், தரம் - அவர்களுடைய பெருமை, அளவு என்ன - இவ்வளவென்று, வியப்பு இலதாம் - சொல்லமுடியாததான, உண்மை - உண்மையை, உயர்ந்தனர் - உயர்ந்த நம்முடைய ஆசாரியர்கள், ஓரம் தவிர - பக்ஷபாதமில்லாதபடி, உரைத்தனர் - உபதேசித்திருக்கிறார்கள்.

(கருத்து.) எம்பெருமானிடம் வந்து அவன் திருவடிகளில் பிரபத்தி பண்ணுகிறவர்களிடத்தில் ஏதாவது தாழ்ச்சி யிருக்கலாம். ஆனபோதிலும் அவர்களுடைய பெருமைக்கு இவ்வளவு அளவு என்று சொல்லமுடியாது. இந்தஉண்மையான விஷயத்தை உயர்ந்த நம்மாசாரியர்கள் பக்ஷபாதம் போகும்படி நமக்குச் சொல்லியிருக்கிறார்கள். எம்பெருமான் எப்படிப்பட்டவனென்றால் உண்மையான விஷயங்களையே சொல்லுகிற வேதத்தில் எல்லாருக்கும் மேற்பட்டவனாகச் சொல்லப்பட்டவன். அவனே புருஷோத்தமன். அவனுடைய பெருமையை இவ்வளவென்று அளவிடமுடியாது. ஆகையால் ஒரு க்ஷணத்தில் செய்கிற பிரபத்திக்கு அளவில்லாத ஆநந்தமாகிய பலனை எம்பெருமான் கொடுக்கலாம். எம்பெருமான் நமக்கு ஹிதமாகச் செய்வதை நம்மால் அறியமுடியாது. அதை அறியாமல் தூஷணம் செய்வது பிசகு.

குறிப்பு:- (1) தாழ்ச்சியாவது மேலே இரண்டாவது பிரிவில் சொன்னபடி பணத்தில் ஆசையுள்ளது முதலானவைகள். அவைகளுக்கு எம்பெருமான் எப்படியாவது பரிஹாரம் செய்து அவர்களின் குறைவை நீக்கிவிடுவான்.

(2) பாட்டில் "உயர்ந்தவர்" என்கிற சொல்லாலே வியாஸர் முதலானவர்களைக் காட்டிலும் நம்முடைய ஆசாரியர்கள் உயர்ந்தவர் என்று காட்டப்படுகிறது.

(3)ஓரம்- பக்ஷபாதம், அதாவது- இவன் குறைவில்லாத பாகவதன், இவன் குறைவுள்ள பாகவதன் என்று இவர்களைப் பிரித்து ஒருவனிடம் கௌரவமும் மற்றொருவனிடம் அலக்ஷியமும் பண்ணுவது. இதை நாம் செய்யக்கூடாதென்று அவர்களுடைய மஹிமையை நம் ஆசாரியர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

## 27. மூலமந்திராதிகாரம்.

இப்படி இருபத்திரண்டு அதிகாரங்களாலே மூன்று ரஹஸ்யங்கள் காட்டுகிற ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் என்கிற இவைகளை விரிவாய்ச் சொல்லி, மேல் நான்கு அதிகாரங்களாலே உபாயவிஷயத்தில் சொல்லும் அதிவாதங்களைக் கண்டித்து, மேல் மூன்று அதிகாரங்களாலே மூன்று ரஹஸ்யங்களுடைய அர்த்தத்தை விரிவாய் அருளிச்செய்கிறார். அவைகளில் மூல மந்திரத்தின் அர்த்தத்தை இந்த அதிகாரத்தில் அருளிச்செய்கிறார்.

அதில் சொல்லிய விஷயங்கள்:— (1) இந்த மந்திரத்தில் மூன்று சொற்களிருக்கின்றன. பிரணவம் என்று சொல்லப்பட்ட முதல் சொல் முழுவதற்கும் ரக்ஷகன் என்று அர்த்தம். அதின் எழுத்துக்களைப் பிரிக்கும்போது முதல் எழுத்திற்கு உலகத்தை உண்டுபண்ணி அதை எல்லாவிதத்தாலும் ரக்ஷிக்கும் எம்பெருமான் என்று பொருள். 'அ' என்கிற எழுத்திலிருந்து எல்லா எழுத்துக்களும் உண்டாவது போல், உலகம் முழுவதும் எம்பெருமானிடமிருந்து உண்டாகிறது. ஆகையால் அந்த எழுத்து அவனைச் சொல்லுகிறது. ரக்ஷிக்கிறது என்கிற பொருளுள்ள 'அவ' என்கிற தாதுவிலிருந்து அது உண்டாயிருக்கிறபடியால், அதற்கு ரக்ஷிக்கிறவன் என்று பொருள். இன்னாரை ரக்ஷிக்கிறது, இன்ன விதமாய் ரக்ஷிக்கிறது என்று சொல்லாமையால், எல்லாரையும் எல்லா விதத்தாலும் ரக்ஷிக்கிறவன் என்கிற அர்த்தம் கிடைக்கிறது. இதன் கடைசியில் நான்காவது வேற்றுமை உருபு இருந்து தொக்கியிருப்பதால், அந்த எழுத்துக்கு இப்படிப்பட்ட எம்பெருமானுக்காக என்று பொருள்.

(2) மூன்றாவது எழுத்திற்கு ஜீவன் என்றும், நான் என்றும் பொருள். மகாரம் வடமொழியில் ககரம் முதல் இருபத்தைந்தாவது எழுத்தாயிருக்கிறபடியாலும், ஜீவன் இருபத்தைந்தாவது தத்துவமாக இருக்கிறபடியாலும், மகாரம் ஜீவனைச் சொல்லுகிறது. மேலும் அளவைக்காட்டுகிற மஸ் என்கிற தாதுவிலிருந்தும் ஞாநத்தைக்காட்டும் 'மந' என்கிற தாதுவிலிருந்தும் இதுஉண்டாகிறது. ஆகையால் அதற்கு ஜீவனுடைய ஸ்வரூபம் அணுவென்றும், அவன் தானாய்த் தோன்றுகிறவனென்றும், ஜ்ஞாநமென்கிற

குணமுடையவனென்றும் காட்டப்படுகிறது. ஆகையால் உடம்பு, இந்திரியங்கள்,பிராணன் ஆகிய இவைகளைக் காட்டிலும் ஜீவன் வேறு. அவன் அணுவாயிருப்பதால் எங்கும் நிறைந்திருக்கிற எம்பெருமானைக் காட்டிலும் வேறு என்று ஏற்படுகிறது. மேலும் 'அஸ்மத்' என்கிற சொல்லிலிருந்து முன்னாலே இருக்கிற அஸ் என்பதையும், பின்னாலே இருக்கிற அத் என்பதையும் விட்டு விட்டால் ம என்கிற எழுத்து மீருகிறது. அப்போது. அதற்கு நான் என்று பொருள்.

(3) இரண்டாவது எழுத்தான 'உ' என்பதற்குப் பொருள் தேற்றம். அப்பொழுது உலகத்தை உண்டுபண்ணி ரக்ஷிக்கிற எம்பெருமானுக்காக நான் இருக்கிறேன், வேறு ஒருவனுக்காக இருக்கவில்லை என்று பொருள். 'உ'என்கிற எழுத்து பிராட்டியையும் சொல்லும். அப்போது இந்தச்சொல்லுக்கு எம்பெருமானுக்காகவும் பிராட்டிக்காகவும் நான் இருக்கிறேன் வேறு ஒருவனுக்காக இருக்கவில்லை என்று பொருள். இப்படி இருக்கிறவனைச் சேஷன் என்றும், சேஷன் எவனுக்காக இருக்கிறானோ, அவனைச் சேஷி என்றும் சொல்லுகிறது. எம்பெருமானும் பிராட்டியும் சேர்ந்து ஜீவனுக்குச் சேஷி அவர்கள் தனித்தனியாய் சேஷி அன்று.

(4) நம: என்கிற இரண்டாவது சொல்லுக்கு முழுவதற்கும் பிரபத்தி என்றும், அதன் பலனான சேஷியினுடைய வ்ருத்தி என்றும் பொருள். அந்தச் சொல்லின் எழுத்துக்களைப் பிரித்துப் பார்க்கும்போது, ந என்பதற்கு இல்லை என்றும், ம: என்பதற்கு எனக்கு (மம) என்றும் பொருள். ஆகவே இந்த சொல்லுக்கு எனக்கு இல்லை என்று பொருள். இல்லாதது இன்னதென்று சொல்லாவிட்டாலும், ஸ்வதந்திரனாயிருப்பது எனக்கு இல்லை என்றும், நான் எம்பெருமானுக்கு உட்பட்டவன் என்றும் பொருள். ஒரு வண்டியில் பூட்டின மாடு வண்டிக்காரனுக்கு உட்பட்டு இருப்பதுபோல், உடம்போடு சேர்க்கப்பட்டிருக்கிற ஜீவன் எம்பெருமானுக்கு உட்பட்டவன்.

(5) நாராயண என்கிற சொல் நார + அயன என்கிற இரண்டு சொற்கள் சேர்ந்த ஒரு சொல். நர என்பது நாசமில்லாதவன் என்கிற பொருளைச் சொல்லி, ஸ்வரூபத்தில் மாறுதலில்லாத எம்

பெருமானையும் ஜீவனையும் சொல்லுகிறது. அது எம்பெருமானைச் சொல்லும்போது நார என்பதற்கு எம்பெருமானிடமிருந்து உண்டான தத்துவங்கள் என்றும், நரனுடைய ஸொத்துக்கள் என்றும் பொருள். இந்த ஸொத்துக்களில் எம்பெருமானுடைய திருமேனியும், மேன்மையான குணங்களும், இரண்டு விபூதிகளும் அடங்கி இருக்கின்றன. ஜீவன்கள் எம்பெருமானுடைய விபூதியாகையால் அவர்கள் அவனுடைய ஸொத்து, இதனாலும் அவர்கள் எம்பெருமானுக்குச் சேஷபூதர்கள் என்று காட்டப்படுகிறது. நர என்கிற சொல் ஜீவனைச் சொல்லும்போது நார என்பதற்கு ஜீவர்களுடைய கூட்டம் என்று பொருள். இதனாலே ஜீவன்கள் அநேகம் பேர்கள் என்று காட்டப்படுகிறது.

(6) அயநம் என்கிற சொல்லுக்கு ஆதாரம் என்றும், ஒருவன் அடையவேண்டிய வஸ்துவென்றும், அதை அடைவதற்கு ஸாதநமென்றும் பொருள். நார என்பதற்கு எம்பெருமானிடமிருந்து உண்டாகும் தத்துவங்கள் என்றும் அவனுடைய ஸொத்துக்கள் என்றும்பொருளாகும்போது அயநம் என்பதற்குஆதாரமென்று பொருள். அப்போது எல்லா தத்துவங்களுக்கும் ஆதாரமானவன் என்று முழுச்சொல்லுக்கும் பொருள். நார என்பதற்கு ஜீவன்கள் கூட்டமென்று பொருளாகும்போது அயநம் என்கிற சொல்லுக்கு மற்ற இரண்டு பொருள்களும் வரும். அப்போது முழுச் சொல்லுக்கும் ஜீவன்கள் அடைய வேண்டிய புருஷார்த்தமென்றும், அதை அவர்களுக்குக் கொடுக்கும் உபாயமானவன் என்றும் பொருள். இதுவன்னியில் நாரங்கள் எவனுக்கு ஆதாரம், அதாவது:— இருப்பிடம் என்று பொருளாகி எம்பெருமான் எல்லாவற்றிலும் இருப்பதைச் சொல்லும். ஆகையினாலே உலகவழக்கப்படி அறிவில்லாதவைகளையும், அறிவுள்ள ஜீவன்களையும் சொல்லும் சொற்கள் எல்லாம் எம்பெருமானையே சொல்லுகின்றன.

(7) நாராயண என்கிற சொல்லுக்குக் கடைசியில் இருக்கும் நான்காம்வேற்றுமைஉருபுக்கு நாராயணனுக்காக என்று பொருள். அது முதல் சொல்லாலே கிடைக்கிறபடியால், சேஷனாயிருப்பதற்குப் பலனான கைங்கரியம் அதற்குப் பொருள் என்றுகொள்ள வேணும்.

(8) முதல் சொல்லில் தொக்கியிருக்கிற நான்காம் வேற்றுமை உருபாலும் நடுவில் இருக்கிற உ என்கிற எழுத்தாலும் ஜீவன் எம்பெருமானுக்குச் சேஷனுயிருப்பதும், இரண்டாவது சொல்லாலே அவனுக்கு உட்பட்டிருப்பதும், மூன்ருவது சொல்லில் நார என்கிற சொல்லாலே அவனுலே தூக்கப்படுகிறதுவும் சொல்லப்படுகிறபடியாலே ஜீவன் எம்பெருமானுக்குச் சரீரம் (உடம்பு) என்று காட்டப்படுகிறது. சரீரமென்பது ஒரு அறிவுள்ளவனுலே தூக்கப்பட்டு, அவனுல் ஏவப்பட்டு, அவனுக்காக இருப்பதான ஒரு திரவியம், இந்த லக்ஷணப்படி ஜீவன்களும் அறிவில்லாத வஸ்துக்களும் எப்பெருமானுக்குச் சரீரம். (உடம்பு) எம்பெருமான் அவைகளுக்கு ஆத்மா. இப்படி ஜீவனுடைய ஸ்வரூபம் சொல்லப்படுகிறது. நமஸ் என்கிற இரண்டாம் சொல்லால் பிரபத்தி என்கிற உபாயம் காட்டப்படுகிறது. அயநம் என்கிற சொல்லானது ஸித்தோபாயமான எம்பெருமானேக் காட்டுகிறது. நாராயண என்கிற சொல்லில் அயநம் என்பதாலும், அதன் கடைசியிலிருக்கிற நான்காம் வேற்றுமை உருபாலும் புருஷார்த்தமான எம்பெருமானும் அவனுடைய கைங்கரியமும் காட்டப்படுகிறது.

இந்த மூன்று சொற்களேயும் ஒரு வாக்கியமாகவும், இரண்டு வாக்கியங்களாகவும், மூன்று வாக்கியங்களாகவும் சேர்த்துப் பொருள் சொல்வதுண்டு. அவைகளாவன:—

(1) ஒரு வாக்கியமாகும்போது பிரணவத்திலுலே சொல்லப்பட்ட ஸ்வபாவத்தையுடைய நாராயணனுக்கு நம: என்று பொருள். நம: என்பதற்கு பிரபத்தி பொருளாகையால் பிரபத்தி என்கிற உபாயம் சொல்லப்படுகிறது.

(2) நம: - என்பதற்கு சேஷ விருத்தி பொருளாய், அது இங்கே வேண்டப்படுகிறது.

(3) இரண்டு வாக்கியமாகும்போது நான் (ம்), அ என்கிற எழுத்தாலே சொல்லப்பட்ட நாராயணனுக்காகவே இருக்கிறேன். நான் எனக்குச் சேஷன் அல்ல. வேறு ஒருவனுக்கும் சேஷன் அல்ல. இப்படி ஸ்வரூபம் சொல்லப்படுகிறது.

(4) ஆத்மாவாகிற ஹவிஸ்ஸானது (ம்), அகாரத்தால் சொல்லப்பட்ட நாராயணனுக்காகவே பரமாகவே(சுமையாகவே)கொடுச்

கப்படுகிறது. இந்த விஷயத்தில் எனக்குப் பரமில்லை; எனக்கு ஸ்வாதந்திரியமில்லை; அல்லது வேறு ஒருவனுக்கும் பரமன்று; எனக்குமன்று. இப்படியாகும்போது அங்கங்களோடு கூடிய பிரபத்தியாகிய உபாயம் சொல்லப்படுகிறது.

(5) நான் அகாரத்தாலே சொல்லப்பட்ட நாராயணனுக்காகவே இருக்கவேண்டும். நான் எனக்காக இருக்கவேண்டாம்—அதாவது நான் எம்பெருமானுக்காகவே இருக்கிறேன். அவனுக்கு வேலை செய்து அவனை ஸந்தோஷப்படுத்தவேணும்– என்னுடைய ஸந்தோஷத்திற்காக நான் இருக்கவேண்டியதில்லை. இதனாலே இஷ்டமில்லாதது விலகுவதும், இஷ்டமான கைங்கரியம் கிடைப்பதும் சொல்லப்படுகின்றன.

(6) மூன்று வாக்கியமாகும்போது, நான் எம்பெருமானுக்காகவே இருக்கிறேன்; எனக்காக இருக்கவில்லை; எம்பெருமானுடைய கைங்கரியம் எனக்கு வேண்டும். இதில் முதல் இரண்டு வாக்கியங்களாலே ஸ்வரூபமும், மூன்றுவது வாக்கியத்தாலே புருஷார்த்தமும் சொல்லப்படுகின்றன.

(7) நான் எம்பெருமானுக்காகவே இருக்கிறேன்; எனக்கு அவித்யை, கர்மம், வாஸனை, பிரகிருதி ஸம்பந்தம் இவைகள் போகவேண்டும்; எம்பெருமானுடைய கைங்கரியம் வேண்டும். இதில் முதல் வாக்கியத்தால் ஸ்வரூபமும், இரண்டாவது வாக்கியத்தால் அநிஷ்டம் போவதும், மூன்றுவது வாக்கியத்தால் இஷ்டம் வருவதும் சொல்லப்படுகின்றன.

(8) நான் எம்பெருமானுக்காகவே இருக்கிறேன்; எனக்கு அநிஷ்டம் போகவேண்டும்; இஷ்டமான கைங்கரியம் வரவேண்டியது. முதல் வாக்கியம் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. மற்ற இரண்டாலும் கோப்த்ருத்வம் சொல்லப்பட்டபோதிலும் அந்த வழியாய் உபாயம் சொல்லப்படுகிறது. கோப்த்ருத்வம் பக்தனுக்கும் பிரபந்நனுக்கும் பொதுவாயிருப்பதினால் பிரபத்தி பண்ணுகிறவனுக்கு அது பிரபத்தியாகிய உபாயத்தையே சொல்லுகிறது.

(9) நான் நாராயணனுடைய பரமாகக்கொடுக்கப்படுகிறேன்; எனக்கு அநிஷ்டம் போகவேண்டும்; இஷ்டம் வரவேண்டும். இதில் முதல் வாக்கியம் உபாயத்தையும், மற்ற இரண்டும் புருஷார்த்தத்தையும் சொல்லுகின்றன.

(10) நான் நாராயணனுக்காகவே இருக்கிறேன்; என்னை ரக்ஷிக்கிற பரம் என்னுடையதன்று; நாராயணனுடைய கைங்கரியம் வேண்டும். இதில் முதல் வாக்கியம் ஸ்வரூபத்தையும், இரண்டாவது உபாயத்தையும், மூன்றாவது புருஷார்த்தத்தையும் சொல்லுகின்றன.

கீழே சொன்ன பத்து யோஜனைகளில் கடைசி யோஜனையே ஸ்ரீ தேசிகனால் ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்த யோஜனையைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்:—

**உயர்ந்த நங்காவல னல்லார்க் குரிமை துறந்துயிராய்**
**மயர்ந்தமை தீர்ந்து மற்றோர் வழியின்றி யடைக்கலமாய்**
**பயந்தவந் நாரணன் பாதங்கள் சேர்ந்து பழவடியார்**
**நயந்த குற்றேவ லெல்லா நாடுநன் மனுவோதினமே.** (34)

(ப-ரை) உயர்ந்த நம் காவலன் அல்லார்க்கு - நம்முடைய ரக்ஷகனாகிய எம்பெருமானைக் காட்டிலும் வேறானவர்களுக்கு, உரிமை - சேஷமாயிருக்கிறோம் என்கிற எண்ணத்தை, துறந்து - விட்டு, உயிராய் - உடம்பு முதலானவைகளைக் காட்டிலும் வேறானவர்களென்று நம்மையறிந்து, மயர்ந்தமை தீர்ந்து-உடம்போடு ஆத்மாவைச் சேர்த்து உடம்பே ஆத்மா என்கிற எண்ணம் போய், மற்று ஓர் வழியின்றி - பக்தியாகிய வேறு உபாயத்தில் சக்தியில்லாமல் வருத்தப்பட்டு, அடைக்கலம் ஆய் - எம்பெருமானால் ரக்ஷிக்கவேண்டிய ஸொத்தாய் அவனிடம் கொடுக்கப்பட்டு, பயந்த - உலகத்தையுண்டுபண்ணின, அ நாரணன் - அந்த நாராயணனுடைய, பாதங்கள் - திருவடிகளை, சேர்ந்து, பழ அடியார் - பழமையான நித்தியஸூரிகள், நயந்த-ஆசைப்பட்டுச் செய்கிற, குற்றேவல் எல்லாம் - கைங்கரியங்களையெல்லாம்,நாடும்-பிரார்த்திப்பதைச் சொல்லுகிற, நல் மனு - நல்ல மந்திரத்தை, ஓதினமே . ஆசாரியர்களிடத்தில் தெரிந்துகொண்டோம்.

(கருத்து)எம்பெருமான் உலகத்தை உண்டுபண்ணுகிறவனாகையாலே ஒப்பில்லாமல் உயர்ந்த நம்முடைய ரக்ஷகன்; அவனைத்தவிர மற்றவர்களுக்குச்சேஷமாயிருக்கிற உறவைப்போக்கி உடம்புமுதலானவைகளைக்காட்டிலும் வேறான ஆத்மாவாய், உடம்போடு ஆத்மாவைச்சேர்த்துஉடம்பே ஆத்மாஎன்கிற எண்ணம் போய், பக்தியாகியஉபாயத்தில் சக்தியில்லாமல் வருத்தப்பட்டு,ரக்ஷிக்கும்பாரம்

எம்பெருமானுடையதாய்க் கொடுக்கப்பட்டு, உலகத்தை உண்டு பண்ணினவனான நாராயணனுடைய திருவடியை உபாயமாகப் பற்றி, வைகுந்தத்திலிருக்கும் நித்தியஸூரிகள் பிரீதியுடனே செய்யும் எல்லாவிதங்களான கைங்கரியங்களைப் பிரார்த்திக்கும் விதத்தைச்சொல்லுகிற நல்ல மந்திரத்தை ஆசாரியர்களிடம் நாம் கேட்டோம்.

குறிப்பு:- (1) 'உயர்ந்த, காவலன்' என்கிற இரண்டு சொற்களால் மந்திரத்தின் முதல் சொல்லின் முதல் எழுத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது.

(2) 'அல்லார்க்கு உரிமை துறந்து' என்பதற்கு எம்பெருமானுக்கு அல்லாமல் நமக்கே சேஷம் என்றும், மற்றவர்களுக்குச் சேஷம் என்றும் எண்ணின தப்பெண்ணம் போய் என்று பொருள். எம்பெருமானுக்குச்சேஷம் என்பதினால் முதல்எழுத்தின் மேலே இருந்த நான்காம் வேற்றுமையின் அர்த்தமும், வேறு ஒருவருக்கும் இல்லை என்பதினால் இரண்டாவது எழுத்தின் பொருளும் சொல்லப்படுகின்றன. இவைகளாலே பிரணவம் என்கிற முதல் சொல்லின் பொருள் காட்டப்படுகிறது.

(3) உயிராய் என்பதினாலே 'ம'என்கிற எழுத்தின் பொருள் சொல்லப்படுகிறது. கீழே சொன்னபடி 'ம' என்கிற எழுத்துக்கு ஜீவனுடைய ஸ்வரூபம் என்றும், அது ஸ்வயம்பிரகாசமென்றும், அவன் ஜ்ஞாநமாகிய குணமுடையவன் என்றும் காட்டுகிறபடியால் அவன் உடம்பு முதலானவைகளைக் காட்டிலும் வேறு என்றும், அவன் ஆத்மாவென்றும் காட்டப்படுகிறது. உயிர் — ஆத்மா.

(4) 'மயர்ந்தமை' என்பது அஜ்ஞாநம்; அது உடம்பை ஆத்மாவாகவும், உடம்பைச் சேர்ந்தவர்களை ஆத்மாவைச் சேர்ந்தவர்களாகவும் எண்ணின அஹங்கார மமகாரங்கள். ஆத்மாவினுடைய உண்மையான ஸ்வரூபம் அறியப்பட்டபடியால் அவைகள் போயிற்று என்று கருத்து.

(5) ஓர் வழியின்றி என்பதினால் பக்தியோகம் செய்யும் திறமையில்லாமையால் அந்த உபாயம் இல்லை என்று சொல்லி, ஆகிஞ்சந்யம் என்கிற அதிகாரம் சொல்லப்பட்டது. இது இரண்டாவது சொல்லின் பொருள்.

(6) அடைக்கலமாய் என்பதினால் ரக்ஷிக்கிற பரமானது எம்பெருமானிடத்தில் கொடுக்கப்பட்டது என்று சொல்லப்படுகிறபடியால், பிரபத்தியாகிய ஸாத்திய உபாயம் சொல்லப்படுகிறது. இதுவும் இரண்டாவது சொல்லின் பொருள்.

(7) பயந்தவன் என்கிற சொல்லாலே நரனிடத்தில் உண்டானவைகள் என்று பொருளான நார என்கிற சொல்லின் அர்த்தம் சொல்லப்படுகிறது.

(8) 'பாதங்கள் சேர்ந்து' என்கிற சொல்லினால் எம்பெருமானுடைய திருவடிகளை உபாயமாகப்பற்றி என்று பொருளைச் சொல்லி அயனம் என்கிற சொல்லாலே சொல்லப்பட்ட ஸித்தோபாயம் சொல்லப்படுகிறது.

(9) 'குற்றேவலெல்லாம்' என்பதினாலே நித்தியஸூரிகள் செய்கிற எல்லாவிதமான கைங்கரியங்கள் சொல்லப்படுகின்றன. இது மூன்றாவது சொல்லின் மேலேயிருக்கும் நான்காம் வேற்றுமையின் பொருள்.

(10) இப்படி ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் ஆகிய மூன்றும் விரிவாய்ச் சொல்லப்படுகின்றன.

---

## 28. த்வயாதிகாரம்.

---

இந்த அதிகாரத்தில் த்வயம் என்கிற ரஹஸ்யத்தின் அர்த்தம் சொல்லப்படுகிறது.

இதில் சொல்லிய விஷயங்கள்— (1) இதுபிரபத்தி செய்யும்போது சொல்லப்படுகிற மந்திரம். அதில் ஆறு சொற்களிருக்கின்றன. அவைகளில் முதல் சொல்லானது மூன்று சொற்கள் சேர்ந்தது. அவைகளைப் பிரித்து இந்த மந்திரத்தில் எட்டு சொற்கள் இருக்கின்றன என்று சொல்லுகிறதும் உண்டு. அப்போது சரணௌ என்கிற சொல்லுக்கு முன்னாலே (தவ) உன்னுடைய என்கிற சொல்லைச் சேர்க்கவேண்டியது. அப்போது ஸ்ரீமானான நாராயணனே! உன்னுடைய திருவடிகளை என்று பொருள்.

(2) ஸ்ரீமத் என்கிற சொல்லுக்கு ஸ்ரீயை (பிராட்டியை) உடையவனான என்று பொருள். ஸ்ரீ என்கிற சொல்லானது

நாலு தாதுக்களிலிருந்து ஏற்பட்டது. (1) ச்ரி தாது ஆகும் போது, நல்லகதி கிடைக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறவர்களால்அடையப்படுகிருள்என்றும்,அவர்களுக்காகஎம்பெருமானைத் தான் அடைகிருள்என்றும் பொருள்.(2)ச்ரு(ஶ்ரு) தாதுவாகும் போது ஸம்ஸாரத்தில் வருத்தப்பட்டவர்களுடைய வருத்தத்தைக் காட்டும் குறலைத் தான் கேட்டு, அதை எம்பெருமானைக் கேட்கும்படி செய்கிருள் என்றும், பிரபத்தி பண்ணினவனை ரக்ஷிப்பேன் என்று எம்பெருமான் சொன்ன வார்த்தையைத் தான் கேட்டு ஸமயம் வந்தபோது அதை எம்பெருமானுடைய நினைவிற்கு கொண்டுவருகிருள் என்றும் பொருள். இப்படிப் பிராட்டி புருஷகாரமாய் இருப்பது இந்த மந்திரத்தில் சொல்லப் பட்டது. புருஷகாரம் என்கிற சொல்லின் பொருளை 68-ஆம் பக்கத்தில் பார்க்க. (3) ச்ரு(ஶ்ரு)தாதுவாகும்போது பிரபத்தி செய்கிறவனுக்கு விரோதியான கர்மங்களையும் அதன் பலனை பிரகிருதி ஸம்பந்தத்தையும் போக்குகிருள் என்று பொருள். (4) ஶ்ரீ தாதுவாகும்போது தன்னை அடைந்தவர்களுக்கு கைங்கரியம் செய்யும்படியான நல்ல குணங்களை உண்டுபண்ணுகிருள் என்று பொருள். இதினுலே எம்பெருமானுடன் கூட இருந்து ஒருவன் செய்கிற பிரபத்தியை ஒப்புக்கொண்டு மோக்ஷத்தைக் கொடுக்கிருள் என்கிற ஆகாரம் சொல்லப்படுகிறது.

(3) ஶ்ரீமத் என்கிற சொல்லில் 'மத்' என்கிற விகுதியானது எப்போதும் சேர்ந்திருப்பதைச்சொல்லுகிறது. பிரபத்தி பண்ணுகிறவர்கள் எம்பெருமானிடம் வரும்போதும், அவர்கள் பிறகு கைங்கரியம் செய்யும்போதும் தான் கூடவே இருக்க வேண்டுமென்று அவள் ஒருபோதும் அவனைவிட்டுவிலகுகிறதில்லை.

(4) நாராயண என்கிற சொல்லின் பொருள்கள் கீழ் அதிகாரத்தில் சொல்லப்பட்டன. அவைகளில் நாரம் என்கிற சொல்லால் சொல்லப்பட்ட குணங்களில், உபாயத்திற்கு வேண்டிய பன்னிரண்டு குணங்கள் பிரபத்தி பண்ணும்போது நினைக்க வேண்டியவைகளில் முக்கியங்கள். அவைகளாவன— (1) வாத்ஸல்யம்:— தன்னை அடைந்தவர்களின் குற்றங்களைப் பாராமல் அவர்களை ஏற்றுக்கொள்ளும்படி செய்யும் இரக்கம். இதினுலே பிரபத்தி செய்கிறவன் தன் குற்றங்களை நினைத்துக்கொண்டு

ஓடிப்போகாமல் இருப்பது ஏற்படும். (2) ஸ்வாமித்வம்-தன்னை ஸொத்தாக உடையவனுயிருப்பது. இதனுலே தன்னுடைய லாபமாக எம்பெருமான் ரக்ஷிப்பன் என்று ஏற்படும். (3) ஸௌசீல்யம்— எம்பெருமான் மிகவும் உயர்ந்தவனுயிருந்தபோதிலும் மிகவும் தாழ்ந்தவர்களோடு இடைவிடாமல் சேர்ந்திருக்கும் ஸ்வபாவம். இதனுல் அவனுடைய பெருமையைப் பார்த்து ஓடிப் போகாமல், வண்டி ஓட்டுவது முதலானதைத் தான் வேண்டினுல் அவன் செய்வன் என்று நம்பிக்கை ஏற்படும். (4) ஸௌலப்யம்-மிகவும் உயர்ந்தவர்களும்கூட கிட்டமுடியாத எம்பெருமான் எல்லாரும்பார்க்கும்படியாய் வருகை. இதனுலே நாம் அவனை எங்கே பார்க்கப்போகிறோம் என்று ஆசையை விட்டு இருப்பது நீங்கும். (5) ஸர்வஜ்ஞத்வம்— எல்லாம் அறிந்தவனுயிருக்கை. இதினுலே தன்னை அடைந்தவர்களுக்குக் கொடுக்கவேண்டிய நன்மைகளிலும் போக்கவேண்டிய விரோதிகளிலும் அவனுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. (6) ஸர்வசக்தித்வம்— எதையும் செய்யும்திறமை. இதினுலே ஸம்ஸாரிகளான நம்மைத்தான் நினைத்தபோது நித்யஸூரிகளுடன் சேர்ப்பன் என்ற நம்பிக்கை ஏற்படும். (7) ஸத்யஸங்கல்பத்வம்— அவன் நினைத்ததை அவனுலும் விலக்கமுடியாதிருக்கும் ஸ்வபாவம். இதனுலே 'எல்லா பாபங்களிலிருந்து உன்னை விடுவிப்பேன்' என்று எம்பெருமான் சொன்ன வார்த்தையானது பொய் ஆகாது என்கிற நம்பிக்கை உண்டாகும். (8) பரமகாருணிகத்வம்— மிகுந்த கருணை உள்ளவனுயிருக்கை. இதனுல் மிகவும் குற்றமுள்ளவர்களைக் கூட ஒரு வியாஜத்தாலே எம்பெருமான் ரக்ஷிப்பன் என்கிற நம்பிக்கை ஏற்படும். (9) கிருதஜ்ஞத்வம்— செய்ததை மறந்து போகாதிருப்பது. இதனுலே நம்மை எம்பெருமான் ஒருபோதும் கைவிடமாட்டான் என்கிற நம்பிக்கை ஏற்படும். (10) ஸ்திரத்வம்— தன்னை அடைந்தவர்களை ரக்ஷிப்பதில் நிலையாய் இருப்பது. இதனுலே அவனை எவர்கள் விலக்கினுலும் நம்மை விடமாட்டான் என்கிற நம்பிக்கை ஏற்படும். (11) பரிபூர்ணத்வம்— எல்லாம் நிறைந்திருப்பது. இதனுலே நாம் எம்பெருமானுக்கு ஸமர்ப்பிப்பதில் உயர்வு தாழ்ச்சி பார்க்கமாட்டான், நம்முடைய எண்ணத்தையே பார்ப்பன் என்கிற நம்பிக்கை ஏற்படும். (12) பரமோதாரத்வம்— நாம் செய்யும் பிரபத்தியின் சிறுமையையும்,

தான் கொடுக்கும் பலனின் பெருமையையும், அதைப் பெறுகிற நம்முடைய தாழ்மையையும் பார்க்கமாட்டான். கேட்டதைக் கொடுப்பன் ; தன்னையும் கொடுப்பன். இவ்வளவு செய்தபோதிலும் தான் செய்தது போதாது என்று எண்ணும் ஸ்வபாவம். இதனாலே தன்னையும், தன்னைச் சேர்ந்தவர்களையும் ரக்ஷிக்க வேண்டுமென்று எம்பெருமானைக் கேட்கலாம் என்ற எண்ணம் ஏற்படும்.

(5) சரணௌ என்கிற சொல்லிற்கு இரண்டு திருவடிகளை என்று பொருள். இதனாலே எம்பெருமானுடைய உயர்ந்த திருமேனியானது சொல்லப்பட்டது. பிரபத்தி பண்ணும்போது அதை நினைக்கவேண்டியதுஎன்பது காட்டப்படுகிறது. இது சுபமாயும் ஆச்ரயமாயும் இருக்கும். சுபம் என்பது பாபத்தைப் போக்கும் தன்மை. ஆச்ரயம் என்பது மனதினால் பிடிக்கும்படியாய் இருப்பது. பக்த ஜீவனிடத்தில் முதலில்சொன்ன சுபத்வம் இல்லை. எம்பெருமானுடைய ஸ்வரூபத்தில் இரண்டாவதான ஆச்ரயத்வம் இல்லை. முக்த ஜீவனிடத்தில் இரண்டுமில்லை. ஆகையால் எம்பெருமானுடைய திருமேனியே சுபமாயும் ஆச்ரயமாயிருக்கிறது. இதைத்தான் தியானம் செய்யவேண்டியது. திருமேனியில் திருவடிகளைச் சொன்னதின் கருத்து—அவைகள் மனதாலே லகுவாய் பிடிக்கக்கூடியவைகள்; வேலைக்காரனாயிருக்கிறவனுக்கு மிகவும் தகுந்தவைகள் ; மிகுந்த கருணையை உண்டாக்கும்படியானவைகள் ; மிகவும் இனிமையாய் இருக்கிறவைகள் என்று.

(6) சரணம் என்கிற சொல்லுக்கு உபாயம் என்று பொருள்; சரணம் ப்ரபத்யே என்பதற்கு உன்னை உபாயமாகப் பற்றுகிறேன் என்று பொருள். அதாவது என்னை ரக்ஷிக்கிற சுமையை என் தலையில் வைக்காதே. தேவரீரே பக்திஸ்தானத்தில் நின்று அது செய்யும் எல்லா வேலைகளையும் செய்து என்னை ரக்ஷிக்கவேண்டும் என்று பொருள்.

(7) இந்த மந்திரத்தில் அங்கங்கள் இருக்கிற இடங்கள்—நாராயண சப்தத்தில் சொல்லப்பட்ட ஸம்பந்தத்தாலே அநுகூலனாய் இருப்பேன் என்கிற எண்ணமும், பிரதிகூலமாயிருப்பதை விடுவதும்; ப்ரபத்யே என்கிற சொல்லில் கடைசியில் இருக்கும்

விகுதியினாலே அதை சொல்லும்போது காட்டப்படும் அழுகை யினாலே வேறு கதியில்லாமல் வருத்தப்படுவதாகிய கார்பண்ய மும்; அந்தச் சொல்லில் முன்னாலே இருக்கிற ப்ர என்கிற உப ஸர்க்கத்தாலே மஹாவிச்வாஸமும் காட்டப்படுகின்றன. பக்தி ஸ்தாநத்திலேயிருந்து ரக்ஷிக்கவேண்டுமென்று சொல்லுவதினால் ரக்ஷிக்கிற சுமையை எம்பெருமானிடம் கொடுப்பதாகிய பிரபத்தி சொல்லப்படுகிறது. இதில் ரக்ஷிக்கவேணுமென்கிற பிரார்த்த னையும் அடங்கியிருக்கிறது.

(8) பின்பாதியில் ஸ்ரீமத் என்கிற சொல்லையும், நாராயண என்கிற சொல்லையும் மறுபடியும் சொல்லுவது—பிரபந்நன் செய் யப்போகிற கைங்கரியங்கள் இருவர்களுக்கும் செய்யப்படவேண் டும் என்பதையும், எம்பெருமான் ஸ்வாமியாய் இருப்பதையும், அவன் எல்லா மேன்மையான குணங்களோடும், இரண்டு விபூதி களோடும் கூடி இருப்பதையும், அவன் மிகுந்த ஆநந்தத்தைக் கொடுக்கிறவன் என்பதையும் காட்டுவதற்காக.

(9) நாராயண சப்தத்தின்மேல் இருக்கிற நான்காம் வேற் றுமைக்கு அவனுக்காக இருக்கிறேன் என்று பொருள். இதி னாலே அவனைப் பரிபூர்ணமாக அநுபவித்து எல்லாவிதமான கைங்கரியங்களைச் செய்வது பிரயோஜநம் என்பது காட்டப்படு கிறது. நான்காம் வேற்றுமைக்கு மேலே 'பவேயம்' என்ற சொல்லைச் சேர்க்கவேண்டும். அதன் பொருள் ஸ்ரீமானான நாரா யணனுக்காக நான் இருக்கவேண்டுமென்று.

(10) நமஸ் என்கிறதற்கு எனக்கு ஒன்றும் இருக்கவேண் டாம் என்று பொருள். அதாவது ஒரு வேலையைச் செய்யும்போ தும், அதன் பலனை அநுபவிக்கும்போதும் நான் செய்கிறேன்; நான் அநுபவிக்கிறேன் என்கிற எண்ணமும், எனக்காகச் செய் கிறேன், எனக்காக அநுபவிக்கிறேன் என்கிற எண்ணமும் போக வேணுமென்று கருத்து. இந்த வேலையை எம்பெருமான் செய் கிறான். அவன் ஸந்தோஷத்திற்காக நான் அநுபவிக்கிறேன். என் ஸந்தோஷத்திற்காக இல்லை என்று இந்தச் சொல்லாலே பிரார்த்திக்கப்படுகிறது.

(11) இந்த மந்திர விஷயத்தில் சொல்லப்படும் அதிவாதங் கள்— (1) பிராட்டி எம்பெருமானுடன் கூடவே பிரியாமல்

இருக்கிறபடியால், ஸ்ரீமான் என்று 'மதுப்' என்கிற விகுதியை ஸ்ரீ என்கிற சொல்லுடன் சேர்த்து சொல்லக்கூடாது. (2) எம்பெருமான் எதையும் செய்ய சக்தியுள்ளவனுகையால் ஸ்ரீஸம்பந்தம் எதற்காக? ஸ்ரீஸம்பந்தம் வேண்டுமானுல் அவன் "ஸர்வசக்தன்" என்பது போய்விடுமே? (3)சரணௌ என்கிற த்வி வசனத்தாலே ஸ்ரீமத் என்கிற சொல் உபலக்ஷணம் என்று ஏற்படாதா? உபலக்ஷணம் என்பது ஒரு வஸ்துவினிடத்தில் இல்லாமல் அதைக் காட்டுவதற்கு மாத்திரம் உபயோகப்படுவது.

(12) இந்த மந்திரத்தில் இரண்டு பாதிகளுக்கு வேறுவிதமாயும் பொருள் சொல்லலாம். முன்பாதி ஐந்து அங்கத்தைச் சொல்லுகிறது. பின்பாதி ஆத்மஸமர்ப்பணத்தைச் சொல்லுகிறது. அப்போது அதற்கு ஸ்ரீமானுன நாராயணனுக்கு நான் கொடுக்கப்படுகிறேன் என்று பொருள். நான் என்கிற இந்த வஸ்து அவனது. எனக்கு அதில் ஸம்பந்தமில்லை. இதனுலே அதை ரக்ஷிக்கும் சுமையும், ரக்ஷணத்தின் பலனும் அவனிடம் கொடுக்கப்பட்டதாகவே ஏற்படும். பின்பாதியில் பிரபத்தி சொல்லப்படுவதினுல் அதின்பலனுன கைங்கரியமும் ஸித்திக்கும்.

(13) இந்த மந்திரத்தினுடைய திரண்ட பொருள்—எல்லாருக்கும் ஸ்வாமியாய், எல்லாவிதத்தாலும் மிகவும் இன்பமாய், பிராட்டியோடுகூட எப்போதும் இருக்கிற நாராயணன் திருவடிகளில் என்னுடைய ஸ்வரூபத்திற்குத்தகுந்த எல்லா கைங்கரியங்களையும் நான் செய்யவேண்டும்; அதற்கு விரோதியானவைகள் எல்லாம் போய், அந்த கைங்கரியங்களைப் பூராவாகப் பெறவேண்டியதற்காக அகிஞ்சனுயிருக்கிற நான் என்னை ரக்ஷித்துக்கொள்கிற விஷயத்தில் என்னுடைய ஸம்பந்தமில்லாதபடியாக ஸ்ரீமானுன நாராயணன் திருவடிகளில் ஐந்து அங்கங்களோடு கூடிய ஆத்மரக்ஷாபரத்தை நான் ஸமர்ப்பிக்கிறேன்—என்று.

இந்த அர்த்தத்தைப் பாட்டாலே அருளிச்செய்கிருர்.

**ஓது மிரண்டை யிசைந்தரு ளாலுத வுந்திருமால்**
**பாத மிரண்டுஞ் சரணெனப் பற்றி நம் பங்கயத்தாள்**
**நாதனை நண்ணி நலந்திகழ் நாட்டி லடிமையெல்லாம்**
**கோதி லுணர்த்தி யுடன்கொள்ளு மாறு குறித்தனமே. (35)**

(ப-ரை) ஓதும் - கடச்ருதியென்கிற வேதத்தில் தனித்தனியாகச் சொல்லப்படும், இரண்டை - இரண்டு வாக்கியங்களை, இசைந்து - சேர்த்து, அருளால் - கருணையாலே, உதவும்-உதவி செய்கிற, திருமால் - பிராட்டியோடு சேர்ந்திருக்கிற எம்பெருமானுடைய, பாதம் இரண்டும் - இரண்டு திருவடிகளையும், சரண் என - உபாயமாக, பற்றி,நம் பங்கயத்தாள் நாதனை - நம்முடைய தாமரையிலிருக்கிற பிராட்டியின் கணவனை, நண்ணி - கிட்டி, நலம் திகழ் - ஆநந்தம் விளங்கும்படியான, நாட்டில் - வைகுந்தமென்கிற தேசத்தில், அடிமை எல்லாம் - கைங்கரியங்களையெல்லாம், கோது இல் - குற்றமில்லாத, உணர்த்தியுடன் - எண்ணத்துடன், கொள்ளுமாறு - நாம் அடையும் வழியை, குறித்தனம் - தெரிந்துகொண்டோம்.

(கருத்து) வேதத்தில் இரண்டு வாக்யங்களாகத் தனித்தனியாகச் சொல்லப்படும் இந்த மந்திரத்தை நாம் ஆசாரியர்களிடத்தில் தெரிந்துகொண்டு "இதை ஒரு தரம் சொல்லு, நான் ரக்ஷிக்கிறேன்" என்று கருணையினாலே சொல்லுகிற, பிராட்டியோடு சேர்ந்திருக்கிற எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமாகப் பற்றி, பரமபதத்தில் போய்ச் சேர்ந்து, ஆநந்தம் மிகுதியாயிருக்கும் அந்த இடத்தில் அவர்களுக்கு எல்லாவிதங்களான கைங்கரியங்களையும் குற்றமில்லாத நினைவுடன் செய்யும் விதத்தை இந்த மந்திரத்தில் இருக்கிற சொற்களில் ஒன்றின் பின்ஒன்றாக நினைக்கும்படியான பாக்யத்தை நாம் அடைந்தோம்.

குறிப்பு:— (1) கடச்ருதியில் இந்த மந்திரத்தின் முன் பாதியை ஒரு இடத்திலும், பின் பாதியை வேறு இடத்திலும் சொல்லியிருக்கிறது. இரண்டையும் சேர்த்து நாம் பிரபத்தி பண்ணும்போது சொல்லவேண்டியது என்று சொல்லியிருக்கிறது.

(2) உரையில் "தெரிந்துகொண்டு" என்கிற சொல்லை கடைசியில் இருக்கும் "இந்த மந்திரத்தில்...அடைந்தோம்" என்பதுடன் சேர்க்கவேண்டியது.

(3) திருமால்— பிராட்டியிடம் எம்பெருமான், ஆசையுள்ளவன் ஆகையினால் அவள் பண்ணும் சிபார்சை அவன் தட்டமாட்டான் என்று கருத்து.

(4) 'பாதம் இரண்டும் சரணெனப் பற்றி' என்பது மந்திரத்தின் முன்பாதியின் பொருள்.

(5) கோது—குற்றம், அதாவது– நான் செய்கிறேன், நான் அனுபவிக்கிறேன்; எனக்காகச் செய்கிறேன்; எனக்காக அநுபவிக்கிறேன் என்கிற எண்ணம். இது நமஸ்ஸின் பொருள்.

(6) 'அடிமை எல்லாம் ... கொள்ளுமாறு' என்பது மந்திரத்தின் பின்பாதியின் பொருள்.

---

## 29. சரம ச்லோகாதிகாரம்.

---

இந்த அதிகாரத்தில் சரமச்லோகத்தின் பொருள் சொல்லப்படுகிறது. கிருஷ்ணனாக அவதாரம் செய்த எம்பெருமானுடைய உபதேசத்தில் (ஸ்ரீ கீதையில்) இது கடைசி ச்லோகம்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்கள்:— (1) இந்த ச்லோகத்தின் முதல் பாதத்திற்குப் பொருள்-எல்லா தர்மங்களையும் நன்றாக விட்டு இருக்கிற நீ-என்று. தர்மம் என்கிற சொல்லுக்கு ஒரு பலனுக்கு உபாயமாக வேதத்தினால் சொல்லப்பட்ட கர்மம் என்று பொருள். இங்கே அது மோக்ஷத்திற்கு உபாயமாகச் சொல்லப்பட்ட பிரும்மோபாஸநம். இதை உபநிஷத்துக்கள் வெவ்வேறு விதமாய்ச் சொல்லுகிறபடியால் அவைகளை இங்கே தர்மங்கள் என்று சொல்லுகிறது. எல்லாம் என்கிற சொல்லாலே அதற்கு உதவி செய்கிற கர்மயோகம் முதலானவைகள் சொல்லப்படுகின்றன.

(2) இவைகளைச் செய்ய ஸாமர்த்தியமில்லாமல் விட்டு இருக்கிறவனுக்கு பிரபத்தியானது விதிக்கப்படுகிறது. நன்றாய் விடுகையாவது— இவைகளைச் செய்யமுடியாமல் போனபோதிலும் சக்தி உள்ளவரையில் அவைகளைச் செய்கிறோம் என்றும், அதுவும் முடியாவிட்டால் அநுகல்பங்களைச் செய்வோம், அதுவும் முடியாவிட்டால் உபாயத்திற்கு உபாயமாகிறவைகளைச் செய்கிறோம் என்றும் எண்ணும்படி செய்கிற துராசையை விடுவது. ஸ்நாநம் என்றால் ஜலத்தில் முழுகி ஸ்நானம் செய்வது. அதைச் செய்யமுடியாதவனுக்கு மந்திரஸ்நானம் முதலானவைகள் சொல்லப்படுகின்றன. இவைகளை ஸ்நானத்திற்கு அநுகல்பம் என்று

சொல்லுகிறது. அதுபோல் அநுகல்பங்களையாவது செய்வோம் என்கிற ஆசையை விடுவது.

(3) இதினாலே பிரபத்திக்கு அதி காரம் சொல்லப்படுகிறது. 'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே இந்த அதிகாரம் பூர்ணமாயிருக்கிறதென்று காட்டப்படுகிறது.

(4) சிலர் 'பரித்யஜ்ய' என்கிற சொல்லுக்கு விட்டுவிடு என்று பொருள்கொண்டு, அதை விதியாய்ச்சொல்லுகிறார்கள். இப்படிச் சொல்லும்போது எல்லா தர்மங்களும் எனக்கு யோக்கியதை இல்லை என்று என்னை விட்டுவிட்டன என்று நினை என்று பொருளாகும். அப்போது கார்ப்பண்யம் என்கிற அங்கம் சொல்லப்படுகிறது.

(5) வேறுவிதமாயும் விதிபக்ஷத்திற்குப் பொருள் சொல்லலாம். அதாவது—பிரபத்திக்கு அங்கமாக ஒரு தர்மத்தையும் செய்யவேண்டாம்—என்று. இதனாலே பிரபத்தியினுடைய நைரபேக்ஷ்யம் சொல்லப்படுகிறது. பரி என்கிற உபஸர்க்கத்தாலே எல்லா தர்மங்களுக்கும் பொதுவான ஆசமநம் முதலானவைகளும் அங்கமாக வேண்டாமென்று காட்டப்படுகிறது,

(6) இந்த விஷயத்தில் சிலர் சொல்லும் துர்வாதங்களாவன- (1) தர்மம் என்கிற சொல்லுக்கு கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் என்று பொருள்; அவைகளை விடுகையாவது; அவைகளைச் செய்யாமலிருப்பது, இப்படி விடுவது பிரபத்திக்கு அங்கம். (2) எவன் இவைகளைச் செய்யச் சக்தியுள்ளவனோ அவனை விடும்படியாகச் சொல்லுகிறது. அவைகளைச் செய்யமுடியாதவனுக்கு முடியாமல் இருக்கிற நீ என்று அர்த்தம். (3) இவைகளைச் செய்ய சக்தியிருக்கிறவனைக்குறித்து இவைகள் கடுமையானவைகள், அவைகளை விட்டுவிடு லகுவான பிரபத்தியைச் செய், என்று சொல்லுகிறது" என்று பொருள். (4) லகுவான பிரபத்தியைச் செய்யும்படி. ஒருவனைத்தூண்ட குருவான பக்தியோகத்தை சாஸ்திரம் விதிக்கிறது, அதை ஒருவன் செய்யவேண்டுமென்று சாஸ்திரத்தின் கருத்து அன்று. (5) ஜ்ஞாநமோ விச்வாஸமோ பூர்ணமாயுள்ளவன் பிரபத்தியைச் செய்யவேண்டியவன். அவைகள் குறைந்தவன் பக்தியோகம் செய்யத் தகுந்தவன். (6) பிரபத்தி செய்யத் தகுந்தவன் பக்தியோகத்தை எம்பெருமானுடைய கைங்கரியம் என்று செய்யவேண்டியது.

7. இதுவரையில் தர்மம் என்கிற சொல்லுக்கு கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் என்று பொருள் கொண்டு, அவைகளை விடவேண்டுமென்கிற துர்வாதங்கள் சொல்லப்பட்டன. இப்போது அந்த தர்மம் என்கிற சொல்லுக்கு தன்னுடைய ஜாதிக்குப் பொருந்தினவையாகவும், தன்னால் செய்யமுடிந்தவையாகவுமிருக்கிற தர்மங்கள் என்று பொருள். அவைகளை ஒருவன் விடவேண்டியது. அப்படி விடுவது பிரபத்திக்கு அங்கம். இப்படி விடுவதை ஒருவன் உயிரோடு இருக்கிறவரையில் செய்யவேண்டியதா? அல்லது பிரபத்தி செய்கிற காலத்தில் மட்டும் செய்யவேண்டியதா? என்று கேட்டு தூஷணம் சொல்லப்படுகிறது.

(8) ச்லோகத்தில் இரண்டாவது பாதத்திற்கு பொருள்—என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று—என்று. 'என்னை' என்கிற சொல்லானது அர்ஜுநனுக்கு முன்னாலே இருந்த எம்பெருமானைச் சொல்லுகிறபடியால், திவ்விய மங்கள விக்ரஹத்தையும் பரத்வம், ஸௌலப்யம் இவை இரண்டிற்கு வேண்டிய குணங்களையும் அநுஸந்தாநம் செய்யவேண்டியது என்று காட்டுகிறது.

(9) என்னை ஒருவனை என்பதற்கு அநேகவிதமாகப் பொருள் கொள்ளலாம். அவைகளை நாற்பத்தெட்டாவது பாட்டின் உரையில் பார்க்கவும்.

(10) உபாயமாகப்பற்று என்கிற இடத்தில் பற்று(வ்ரஜ)என்கிற சொல்லாலே எல்லா அங்கங்களோடு கூடிய பிரபத்தி சொல்லப்படுகிறது. இதை ஒரே தடவை செய்யவேண்டியது. இதை அர்ஜுநனுக்கு உபதேசித்தபோதிலும் இந்த விதிக்கு எல்லாரும் விஷயம். இந்த விஷயத்தில் சிலர் சொல்லும் துர்வாதங்கள்— (1) ஜீவன் மிகவும் பரதந்திரனாகையாலே இந்த விதியை விதிக்கக்கூடாது. (2) ஜீவனுக்கு கர்த்ருத்வம் ஒருவழியாலும் கிடையாது. (3) ஈச்வரனுக்கு அதீநமான கர்த்ருத்வம்—ஜ்ஞாத்ருத்வமாத்ரம்.

(11) ச்லோகத்தின் பின்பாதிக்குப் பொருள்—நான் உன்னை எல்லா பாபங்களிலுமிருந்து விடுவிப்பேன்; துக்கப்படாதே—என்று. பாபம் என்கிற சொல்லுக்கு அநிஷ்டமானதை உண்டு பண்ணுவதாகச்சாஸ்திரம் சொல்லும் செய்கை, மோக்ஷம்வேண்டு

மென்பவனுக்கு புண்ணியமும் அநிஷ்டமானதைச் செய்வதால், அது பாபம் என்கிற சொல்லில் அடங்கியிருக்கிறது. 'பாபேப்ய:' என்கிற பன்மைச் சொல்லாலே பாபங்களினுடைய கணக்கில்லாமை சொல்லப்படுகிறது. எல்லா பாபங்களிலும் இருந்து என்கிறதில் எல்லாம் என்ற சொல்லாலே அவித்யையும், கெட்ட விஷயங்களில் வாஸனையும், ருசியும், ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமிருக்கிற பிரகிருதி ஸம்பந்தமும் சொல்லப்படுகின்றன. எல்லா பாபங்களிலுமிருந்து என்று சொன்னபோதிலும், புத்திபூர்வமாக ஒருவன் பிரபத்திக்குப் பின்னாலே செய்யும் பாபங்கள் அவைகளிலிருந்து விலக்கப்படுகின்றன. பலனைக்கொடுக்க ஆரம்பித்தபாபங்களையும் அதில் சேர்த்துக்கொள்ளவேண்டியது. அவைகளில் பிரபத்தி செய்கிறவன் எவ்வளவு ஒப்புக்கொள்கிறானோ அவைகள் தவிர மற்றவைகள் கழிந்துபோகும்.

(12) பாபங்களிலிருந்து விடுவிக்கையாவது எம்பெருமான் நிக்ரஹம் செய்யவேண்டுமென்கிற ஸங்கல்பத்தைவிடுவது. இப்படி எல்லா பாபங்களிலுமிருந்து பிரபந்நன் விடுபட்டால் அவனுக்கு எம்பெருமானுடைய பரிபூர்ணமான அநுபவம் தானாகவேகிடைக்கும். அதற்காக அர்ச்சிஸ் முதலாக உடைய தேவயாநம் வழியாய் போய் வைகுந்தம் என்கிற திருநாட்டுக்குப் போகவேண்டியது.

(13) நீ துக்கப்படாதே என்று ச்லோகம் சொல்லுகிறபடியால், மோக்ஷத்திற்கு ஏற்பட்ட பக்தியாகிய உபாயத்தைச் செய்ய முடியவில்லையே என்று ஒருவன் அழவேண்டுமென்று காட்டப்படுகிறது. இப்படி அழாவிட்டால் அதிகாரமில்லாததினால், பிரபத்தி நிறைவேறுகிறதில்லை. சிஷியனுக்காகப் பிரபத்தி செய்யும் ஆசாரியனும் சிஷியனைக் காப்பாற்றுவதற்கு ஏற்பட்ட வழி எனக்கு இல்லையே என்று அழவேணுமென்றும் காட்டப்படுகிறது.

சரமச்லோகத்தின் பொருளைப் பாட்டாலே அருளிச் செய்கிறார்.

**குறிப்புடன் மேவுந் தருமங்க ளின்றியக் கோவலனார்**<br>
**வெறித்துள வக்கழல் மெய்யர ணென்று விரைந்தடைந்து**<br>
**பிரித்த வினைத்திரள் பின்தொட ராவகை யப்பெரியோர்**<br>
**மறுப்புடை மன்னருள் வாசகத் தான்மரு ளற்றனமே. (36)**

(ப-ரை) குறிப்புடன் - ஜாக்கிரதையுடன், மேவும் - செய்ய வேண்டிய, தருமங்கள் இன்றி - கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் ஆகிய தர்மங்களில்லாமல், அ கோவலனார் - கோபாலனாக அவதரித்த அந்த எம்பெருமானுடைய, வெறி - வாஸனையுடைய, துளவம் - துளஸியையுடைய, கழல் - திருவடிகளை, மெய் அரண் - உண்மையான உபாயம் - என்று, விரைந்து - சீக்கிரமாய் அதாவது நம்பிக்கையுடன், அடைந்து, பிரித்த-பிரபத்தி பண்ணின காலத்தில் நம்மைவிட்டு பிரித்துவைத்த, வினை திரள் - கர்மங்களுடைய கூட்டங்கள், பின்துடராவகை - நமக்குப் பின்னால் வாராதபடி, அ பெரியோர் - எல்லோரைக் காட்டிலும் மேற்பட்டவனாகச்சொல்லப்பட்ட அந்த எம்பெருமானுடைய, மறிப்பு உடை - நம்மை வளைத்துக்கொள்ளுகிற. மன் அருள் வாசகத்தால் - திடமான கருணையினாலுண்டான ச்லோகத்தால், மருள் - அஜ்ஞானத்தை, அற்றனம் - போக்கினோம்.

(கருத்து) எங்கே குற்றங்கள் நேரிடுமோ என்று பயந்து ஜாக்கிரதையாய் செய்யவேண்டிய கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம் ஆகிய தர்மங்கள் இல்லாமல், கோபாலனாக அவதாரம் செய்த எம்பெருமானுடைய திருவடிகளை உண்மையான உபாயமாக நாம் நம்பி அடைந்திருக்கிறோம். இப்படி அடையும்போதே நம்மைவிட்டுப் பிரித்துவைத்த கர்மங்களுடைய கூட்டங்கள் நம்மைப் பின்னாலே துடராதபடி அஜ்ஞானத்தை விட்டு விட்டோம். எதினாலேயென்றால் வேதாந்தங்களில் எல்லாரைக் காட்டிலும் மேற்பட்டவனாகச் சொல்லப்பட்ட அந்த எம்பெருமானுடைய உண்மையான கருணையே சரமச்லோக ரூபமாக வழிந்து வந்ததுபோல்இருக்கிறது அந்த ச்லோகத்தினால் உண்டாயிருக்கிற நம்பிக்கையினாலே. இந்த ச்லோகத்தை நன்றாகத் தெரிந்த எவனும் அதை நம்பி அதற்குட்படுவன்.

குறிப்பு:— மெய் அருள் வாசகம் என்று சொன்னதினால் அர்ஜுனனை ஏமாற்றுவதற்காக இதுசொல்லப்பட்டதன்று என்று காட்டப்படுகிறது.

---

## 30. ஆசாரிய கிருத்யாதிகாரம்.

இனி பாக்கி மூன்று அதிகாரங்களினாலே ஆசாரியன் செய்ய வேண்டிய வேலையையும், சிஷ்யன் செய்யவேண்டிய வேலையையும் சொல்லி கிரந்தத்தை முடிக்கிறார்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்களைப் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

**மருளற்ற தேசிகர் வானுகப் பாலிந்த வையமெல்லாம்**
**இருளற் றிறையவ னிணையடி பூண்டிட வெண்ணுதலால்**
**தெருளுற்ற செந்தொழில் செல்வம் பெருகிச் சிறந்தவர்பால்**
**அருளுற்ற சிந்தையி னாலழி யாவிளக் கேற்றினரே. (37)**

(ப-ரை) மருள் அற்ற - அஜ்ஞானமில்லாத, தேசிகர் - ஆசாரியர்கள், வான் உகப்பால் - பரமபதத்தில் ஆசையால், இந்த வையம் எல்லாம் - இந்த பூமியிலுள்ள ஜனங்களெல்லாம், இருள் அற்று - அஜ்ஞானமில்லாமல், இறையவன் இணையடி - எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளை, பூண்டிட - அடைந்து பிரபத்தி செய்து பிழைக்கவேண்டுமென்று, எண்ணுதலால் - எண்ணுகிறபடியால், தெருள் உற்ற - நல்ல ஜ்ஞானத்தோடு கூடிய, செந்தொழில் - நல்ல கைங்கரியமாகிய, செல்வம் - ஸம்பத்து, பெருகி - நிறைந்து, சிறந்தவர்பால் - நல்ல குணங்களையுடையவர்களென்று பிரஸித்தர்களான சிஷ்யர்களிடத்தில், அருள் உற்ற சிந்தையினால் - கருணையோடு கூடிய எண்ணத்தினாலே, அழியா - அழியாமலிருக்கிற, விளக்கு - ஸம்பிரதாயமாகிற விளக்கை, ஏற்றினர் - கொடுத்திருக்கிறார்கள்.

(கருத்து) ஆசாரியர்களுக்கு நித்தியவிபூதிக்குப் போக வேண்டுமென்கிற ஆசை உண்டாகும்போது, தகுந்த சிஷ்யனிடத்தில் ஸம்பிரதாயமான அழியாத விளக்கை ஏற்றிவைத்து அவர்கள் போகிறார்கள். எதற்காக இதைச் செய்கிறார்களென்றால், இந்த பூலோகத்தில் கர்மத்தினால் கட்டுப்பட்டவர்கள் எல்லாரும் அஜ்ஞானம் போய் எம்பெருமானுடைய திருவடிகளை மோக்ஷத்திற்கு உபாயமாகப் பற்றவேண்டுமென்கிற எண்ணத்தினால். சிஷ்யனை அவர்கள் நன்றாகப் பரீக்ஷித்து அவன், தன்னையும் எம்பெருமானையும் பற்றி உள்ளபடி அறிந்திருக்கிறான் என்றும்,

அவன் எல்லாவேலைகளையும் எம்பெருமானுடைய கைங்கரியமாகச் செய்கிருன் என்றும் தெரிந்து, இந்த ஸம்பத்தானது நிறைந்திருக்கிற அந்த சிஷ்யனிடத்தில் ஸம்பிரதாயத்தைக் கொடுக்கிருர்கள். இதுவும் கருணையோடு கூடிய எண்ணத்தால் செய்யப்படுகிறது. அந்த ஆசாரியர்கள் தாங்கள் இங்கே இருந்தகாலத்தில் ஸம்பிரதாயத்தைக் கண்டவர்களுக்கு வெளியிடாமல் காப்பாற்றி வந்தார்கள். கடைசிகாலத்தில் அப்படியே போய்விட்டால் உலகம் கெட்டுப்போகுமென்று நினைத்துத் தகுந்த சிஷ்யனைக் கண்டுபிடித்து அவனிடம் கொடுத்துவிட்டுப் போகிருர்கள்.

## 31. சிஷ்யகிருத்யாதிகாரம்.

இந்த அதிகாரத்தில் சொல்லிய விஷயங்களைப் பாட்டாலே அருளிச்செய்கிருர்.

ஏற்றி மனத்தெழின் ஞான விளக்கை யிருளனைத்தும்
மாற்றின வர்க்கொரு கைம்மாறு மாயனுங் காணகில்லான்
போற்றி யுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ்
சாற்றி வளர்ப்பதுஞ் சற்றல்ல வோமுன்னம் பெற்றதற்கே. (38)

(ப-ரை) மனத்து - மனதில், எழில் - நன்ருய்ப் பிரகாசிக்கிற, ஞானவிளக்கை - ஞானமாகிய விளக்கை, ஏற்றி, இருள் அனைத்தும்-அஜ்ஞானமெல்லாவற்றையும், மாற்றினவர்க்கு-போக்கினவருக்கு, ஒரு கைமாறு - ஒரு பதில் உபகாரம், மாயனும் - ஆச்சரியமான வேலைகளைச் செய்யும் எம்பெருமானும், காண இல்லான் - காணமுடியாதவன், போற்றி - ஸ்தோத்திரம்செய்து, உகப்பதும் - ஸந்தோஷப்படுவதும், புந்தியில் - புத்தியில், கொள்ளுவதும் - நினைப்பதும், பொங்குபுகழ் - வளர்கின்ற நல்ல குணங்களை, சாற்றி - சொல்லி, வளர்ப்பதும் - எல்லாருக்கும் தெரியும்படி சொல்லுவதும், முன்னம் - முன்னுலே, பெற்றதற்கு - அவரிடமிருந்து பெற்ற உபகாரத்திற்கு, சற்று அல்லவோ - ஸ்வல்பமல்லவோ.

(கருத்து) ஆசாரியர்கள் சிஷ்யனுடைய மனதில் ஜ்ஞாநமாகிய விளக்கை ஏற்றி, அவனுடைய எல்லாவிதங்களான அஜ்ஞானங்களை மாற்றுகிருர்கள். அவர்கள் செய்த உபகாரத்திற்கு எம்

பெருமானும் பதில் உபகாரத்தைக் காணமுடியாதவன். ஆனல் சிஷ்யன் ஒன்றும் செய்யவேண்டாமோ என்ருல்; ஆசாரியனை ஸ்தோத்திரம் செய்து ஸந்தோஷப்படவேண்டியது, இது வாயால் செய்யும் வேலை. அவர்கள் செய்த உபகாரத்தை எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கவேண்டியது; இது மனஸாலே செய்யும் வேலை. ஆசாரியர்களுடைய நல்ல குணங்களை எல்லாருக்கும் தெரியும்படியாய்ச் சொல்லவேண்டியது; இப்படிச் செய்கிறேம் என்று கர்வப்படக்கூடாது. சிஷ்யன் முன்னாலே ஆசாரியர்களிடம் தான் அடைந்த உபகாரத்தை நினைக்கும்போது இவைகளெல்லாம் மிகவும் அல்பமானவைகள் என்று தோன்றும்.

குறிப்பு:— ஜ்ஞாந விளக்கு—விளக்கானது எப்படி இருட்டைப் போக்குமோ அப்படி ஜ்ஞாநமானது அஜ்ஞாநத்தைப் போக்குகிறது. இங்கே ஜ்ஞாநமென்பது ஜீவனுன தன்னையும் எம்பெருமானையும் உள்ளபடி அறிவது. அஜ்ஞாநமென்பது ஜ்ஞாநமில்லாமையும், ஒரு வஸ்துவின் குணத்தை வேருெரு வஸ்துவின் குணமாக எண்ணுவதும், ஒரு வஸ்துவை வேறு வஸ்துவாக எண்ணுவதும். வெண்மையான சங்கைப் பார்த்து இது மஞ்சளானதென்று எண்ணுவது இரண்டாவது அஜ்ஞாநம். கயிற்றைப் பார்த்துப் பாம்பாக எண்ணுவது மூன்ருவது அஜ்ஞாநம்.

கடைசி அதிகாரத்தின் பாட்டுக்கள்

முன்பெற்ற ஞானமு மோகந் துறக்கலு மூன்றுரையில்
தன்பற்ற தன்மையுந் தாழ்ந்தவர்க் கீயுந் தனித்தகவும்
மன்பற்றி நின்ற வகையுரைக் கின்ற மறையவர்பால்
சின்பற்றி யென்பயன் சீரறி வோர்க்கிவை செப்பினமே. (39)

(ப-ரை) முன்பெற்ற - பிறந்த காலத்தில் எம்பெருமானுடைய கடாக்ஷத்தைப் பெற்று அதுமுதல் ஆசாரியர்களிடமிருந்து அடைந்த, ஞானமும், மோகம் துறக்கலும் - துர்வாதங்களாலுண்டாகும் கலக்கத்தை விடுவதும், மூன்று உரையில் - மூன்று ரஹஸ்யங்களில், தன்பு அற்ற - தன்னுடைய இளப்பம் போன, தன்மையும் - ஸ்வபாவமும், தாழ்ந்தவர்க்கு - அகிஞ்சநரான நமக்கு, ஈயும் - கொடுக்கும், தனி தகவும் - ஒப்பில்லாத கருணையும், மன் -

மன்னவரான அதாவது எல்லாருக்கும் மேற்பட்ட ராஜாவான எம்பெருமானை, பற்றி - உபாயமாக அடைந்து, நின்றவகை - இருக்கும் நிலையை. உரைக்கின்ற - சொல்லுகிற, மறையவர்பால் - வேதமறிந்த ஆசாரியர்களிடத்தில், சின் - அல்பமானவைகளை, பற்றி - கேட்டுத் தெரிந்துகொண்டு, என் பயன் - என்ன பிரயோஜநம், சீர் - நல்ல விஷயங்களை, அறிவோர்க்கு - அறிகிறவர்களுக்கு, இவை - இந்த கிரந்தத்தில் சொன்ன விஷயங்களை, செப்பினம் - சொன்னோம்.

(கருத்து) முன்னாலே ஆசாரியனிடம் போய் ஒருவன், அடைகிற ஜ்ஞானத்தையும் அதாவது தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்கிற இவைகளை அறிகையும், துர்வாதிகள் சொல்லுகிற துர்வாதங்களால் உண்டாகும் கலக்கத்தை விடுகையும், தான் ஒருவனுக்கு உட்படாதவன், தனக்காகவே இருக்கிறவன் என்கிற கெட்ட எண்ணங்கள்போய் தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை அறிகையும், பக்தியோகம் செய்ய சக்தியில்லாமல் வருத்தப்படுகிற நமக்கு அந்த பக்தியோகஸ்தாநத்தில் இருக்கும்படி தன்னைக் கொடுக்கும் எம்பெருமானுடைய ஒப்பற்ற கருணையும், ஸர்வேச்வரனை எம்பெருமானையே மோக்ஷத்திற்கு உபாயமாகப்பற்றியிருக்கும் வகையும்— இந்த நல்ல விஷயங்களை மூன்று ரஹஸ்யங்களாலே அறிகிறவர்களுக்கு இவைகளைச் சொன்னோம். நல்ல விஷயங்களைச் சொல்லிக்கொடுக்கிற வேதமறிந்த ஆசாரியர்களிடத்தில் அல்பமான தர்மம், அர்த்தம், காமம் என்கிற விஷயங்களைக் கேட்பதினால் என்ன பிரயோஜநம் ?

குறிப்பு:— (1) 'முன்பெற்ற ஞானமும்' என்பதினால் முதல் இருபத்திரண்டு அதிகாரங்களின் அர்த்தம் சொல்லப்படுகிறது. 'மோகம் துறக்கலும்' என்பதினால் அதற்குமேல் நான்கு அதிகாரங்களாகிய ஸ்திரீகரணபாகத்தின் அர்த்தம் சொல்லப்படுகிறது. 'தன்பற்ற தன்மையும்' என்பதினால் மூலமந்திர அதிகாரத்தின் அர்த்தமும், 'தாழ்ந்தவர்க்கியும் தனித்தகவும்' என்பதினால் த்வயாதிகாரத்தின் அர்த்தமும், 'மன்பற்றி நின்றவகை' என்பதினால் சரமச்லோகாதிகாரத்தின் அர்த்தமும் காட்டப்பட்டன.

(2) இவைகளைத் தெரிந்துகொள்வதற்கு அதிகாரிகள் இது நல்லது இது கெட்டது என்று அறியும்படியான சக்தியுள்ளவர்

கள். அவர்களுக்காக இந்த விஷயங்கள் சொல்லப்பட்டன. தர்மம், அர்த்தம், காமம் இவைகளை ஆசைப்படுகிறவர்கள் இவைகளுக்கு அதிகாரிகள் அல்ல.

சேப்பச் சேவிக்கமு தேன்னத் திகழுஞ் செழுங்குணத்துத்
தப்பற்ற வர்க்குத் தாமே யுகந்து தருந்தகவால்
ஒப்பற்ற நான்மறை யுள்ளக் கருத்தி லுறைத்துரைத்த
முப்பத் திரண்டிவை முத்தமிழ் சேர்ந்த மொழித்திருவே.(40)

(ப-ரை) செப்ப - சொல்லும்போதே, செவிக்கு - காதுக்கு, அமுது என்ன - அமிருதம்போல, திகழும் - விளங்கும், செழுங் குணத்து-நல்ல குணங்களையுடையவைகளும், தப்பு அற்றவர்க்கு - குற்றமில்லாதவர்களுக்கு, தாமே உகந்து - தாங்களே ஸந்தோஷப்பட்டு, தரும் - தம்முடைய ஸ்வபாவங்களைக் கொடுக்கும், தகவால் - கருணையினால், ஒப்பு அற்ற - ஒப்பில்லாத, நால்மறை- நான்கு வேதங்களும், உள்ளம் கருத்தில் - உள்ளே இருக்கிற கருத்தில், உறைத்து - பரிசயம் செய்து, உரைத்த - என்னால் சொல்லப்பட்டவைகளுமான, முத்தமிழ் சேர்ந்த - மூன்றுவிதங்களான தமிழ் இலக்ஷணங்களுடன் சேர்ந்தவைகளுமான, இவை முப்பத்திரண்டு - இந்த முப்பத்திரண்டு பாட்டுக்களும், மொழி - சொற்களாகிய இந்த கிரந்தத்திற்கு, திரு - அழகைக் கொடுக்கின்றவைகளாக இருக்கின்றன.

(கருத்து)இப்படி முப்பத்திரண்டுஅதிகாரங்களின் கடைசிப் பாட்டுக்கள், அர்த்தத்தைக் கவனிக்காமல் சொல்லும்போதே காதுக்கு அமிருதம்போல் விளங்கும். ஆசாரியர்கள் சமம் தமம் முதலான நல்ல குணங்களை உடையவர்களாயும், கோபம்முதலான கெட்ட குணமற்றவர்களாயுமிருக்கிறநல்ல சிஷ்யர்களுக்குத்தாமே ஸந்தோஷப்பட்டு ஒப்பற்ற நான்கு வேதங்களுடைய கருத்தானது தோன்றும்படி கருணையால் உபதேசம் செய்வார்கள். இவ்விதமான உபதேசத்தைப் பெற்று வெகுகாலம் அதை நினைத்து நினைத்து இந்த முப்பத்திரண்டு பாட்டுக்களை எழுதியிருக்கிறேன். அவைகளில் சொல் அழகும், பொருள் அழகும், கானத்தின் அழகும் சேர்ந்திருக்கின்றன. இவைகள் இந்த ரஹஸ்யத்ரயஸாரமென்கிற கிரந்தத்துக்கு மணியையும் பவழத்தையும் சேர்த்தது போல் ஒரு அழகை உண்டுபண்ணுகின்றன.

---

இந்தப் பாட்டுகளுக்குமேல் 11 பாட்டுக்கள் சில அதிகாரங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் தத்துவத்திரய சிந்தநாதிகாரத்தில் சேர்க்கப்பட்டிருக்கிற பாட்டு, இருபத்தைந்து தத்துவங்களையும் எம்பெருமான் தன் திருமேனியில் நகைகளாகவும் ஆயுதங்களாகவும் வைத்துக்கொண்டிருக்கிறான் என்று சொல்லுகிறது. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களையுடைய பிரகிருதியிலிருந்து இருபத்துமூன்று தத்துவங்கள் உண்டாகிறபடியால், அதற்கு மூலப்பிரகிருதி என்று பெயர். அதினுடைய ஸ்வரூபத்திற்கு நாசம் கிடையாது. ஆனால் அது எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கும், அதிலிருந்து மஹத் உண்டாகிறது; மஹத்திலிருந்து அஹங்காரம். ஸத்துவகுணம் மேலிட்டிருக்கும் அஹங்காரத்திலிருந்து மனதும் பத்து இந்திரியங்களும் உண்டாகின்றன; தமஸ் என்கிற குணம் மேலிட்டிருக்கும் அஹங்காரத்திலிருந்து ஐந்து தந்மாத்திரங்களும் ஐந்து பூதங்களும் உண்டாகின்றன. ஆக இருபத்துமூன்று தத்துவங்கள் பிரகிருதியிலிருந்து உண்டாகின்றன, பிரகிருதியையும் சேர்த்து தத்துவங்கள் இருபத்து நான்கு. ஜீவன் இருபத்தைந்தாவது.

புருடன் மணிவரமாகப் பொன்று மூலப்
　　பிரகிருதி மறுவாக மான்றண் டாகத்
தெருண்மருள்வாண் மறைவாக வாங்கா ரங்கள்
　　சார்ங்கஞ்சங் காகமனந் திகிரி யாக
இருடீகங்க ளீரைந்துஞ் சரங்க ளாக
　　விருபூத மாலைவன மாலை யாக
கருடனுரு வாமறையின் பொருளாங் கண்ணன்
　　கரிகிரிமே னின்றனைத்துங் காக்கின் றானே. (41)



(ப-ரை) புருடன் - ஜீவன், மணிவரம் ஆக - கௌஸ்துபம் என்னும் சிலாக்கியமான மணியாகவும், பொன்று மூல பிரகிருதி- ஸ்வரூபத்தில் நாசமில்லாத மூலப்பிரகிருதியானது, ஸ்ரீவத்ஸமென்னும் மருவாகவும், மான் - மஹத், தண்டு ஆக - கதையாகவும், தெருள் மருள் - ஜ்ஞாநமும், அஜ்ஞாநமும், வாள் மறைவு ஆக - கத்தியாகவும் அதின் உறையாகவும், ஆங்காரங்கள் - அஹங்காரங்கள், சார்ங்கம் - தாமஸாஹங்காரம் சார்ங்கமாகவும், சங்கு

ஆக - ஸாத்துவிகாஹங்காரம் சங்கமாகவும், மனம் - மனது, திகிரியாக - சக்கிரமாகவும்,, இருடீகங்கள் - இந்திரியங்கள், ஈர் ஐந்தும் - பத்தும், சரங்கள் ஆக - பாணங்களாகவும், இருபூதமாலை-தன் மாத்திரைகள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும், வனமாலையாக் - வநமாலையாகவும், இப்படி இவைகளை நகைகளாகவும் ஆயுதங்களாகவும் வைத்துக்கொண்டு, கருடன் உருவாம் - கருடனுடைய ரூபமான, மறையின் - வேதத்தினுடைய, பொருள் ஆம் - பொருளாக இருக்கிற கண்ணன், கரிகிரிமேல் - ஹஸ்திகிரியின் மேலே, நின்று - இருந்து, அனைத்தும் - எல்லாவற்றையும், காக்கின்றான் - ரக்ஷிக்கிறான்.

குறிப்பு:— தத்துவங்களைச் சொன்னது அவைகளினுடைய அபிமானிதேவதைகளைச் சொன்னபடி.

---

ஸ்தாநவிசேஷாதிகாரத்தில் எம்பெருமானை அர்ச்சையாக எழுந்தருளப்பண்ணி பூஜை செய்யும் கோயில் இருக்கிற இடத்தில் பிரபந்நன் இருக்கவேண்டியது என்று சொல்லப்பட்டது. அந்த இடங்களில், கோயில், திருமலை, பெருமாள்கோயில் என்று மூன்று பேர்பெற்றவைகள். அவைகளைப் பற்றி ஒவ்வொன்றுக்கும் ஒரு பாட்டை அருளிச்செய்கிறார்.

கோயிலைப் பற்றின பாட்டு.

**ஆராத வருளமுதம் பொதிந்த கோயில்**
அம்புயத்தோ னயோத்திமன்னர்க் களித்த கோயில்
**தோராத தனிவீரன் றொழுத கோயில்**
**துணையான** வீடணற்குத் துணையாங் கோயில்
**சேராத பயனெல்லாஞ் சேர்க்குங் கோயில்**
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்
**தீராத வினையனைத்துந் தீர்க்குங் கோயில்**
திருவரங்க மெனத் திகழுங் கோயிறானே. (42)

(ப-ரை) திரு அரங்கம் என - ஸ்ரீரங்கம் என்று, திகழும் - விளங்கும் கோயில்தானே, ஆராத - எவ்வளவு அநுபவித்தாலும் திருப்தி வராத, அருள் அமுதம் பொதிந்த - கருணையாகிய அமிருதம் நிறைந்த, கோயில், அம்புயத்தோன் - தாமரையிலிருக்கும் பிரம்மாவானவர், அயோத்திமன்னர்க்கு - அயோத்தியின் ராஜா

வான இக்ஷ்வாகுவுக்கு, அளித்த - கொடுத்த, கோயில், தோராத-ஒருபோதும் தோல்வியடையாத, தனிவீரன் - ஒப்பற்ற வீரனான சக்கிரவர்த்தி திருமகன், தொழுத - பூஜை செய்த, கோயில், துணையான-ராவணனோடு சண்டைபோடும்போது தனக்கு ஸஹாயமாக இருந்த, வீடணற்கு - விபீஷணனுக்கு, துணையாம் - ரக்ஷகமான கோயில், சேராத - வேறு எவனாலும் சேர்க்கமுடியாத, பயன் எல்லாம் - தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷமென்கிற எல்லா பலன்களையும், சேர்க்கும், கோயில், செழுமறையின் - சிலாக்கியமான வேதத்தினுடைய, முதல் எழுத்து - பிரணவம் என்கிற முதல் எழுத்து, சேர்ந்த கோயில், தீராத வினை அனைத்தும் - வேறு உபாயத்தினால் போக்கமுடியாத பிராரப்தம் முதலான பாபங்களையும், தீர்க்கும் கோயில்.

குறிப்பு:— (1) ஸ்ரீரங்கமென்கிற கோயிலானது திருப்தி வராத கருணையாகிய அமிருதம் நிறைந்த கோயில்; ஸ்ரீரங்கநாதனுடைய கருணையே அந்த ரூபமாக வந்திருக்கிறது என்று கருத்து. எதற்காகவென்றால் ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயினால் கொளுத்தப்பட்டு வருத்தப்படுகிறவர்களைப்பிழைப்பு மூட்டுவதற்காக. ஆகையால் அவனை அமுதம் என்று பாட்டு சொல்கிறது.

(2) முதலெழுத்துச் சேர்ந்த—பிரணவமானது சேஷியான எம்பெருமானைக்காட்டுகிறதுபோல்,இந்தக்கோயிலானது அவனைக் காட்டுகிறதென்றும், அந்தக் கோயிலுடைய ஆகாரமானது பிரணவத்தின் ஆகாரம்போலிருக்கிறதென்றும் கருத்து.

---

திருமலையைப் பற்றிய பாட்டு.

**கண்ணனடி யிணையெமக்குக் காட்டும் வெற்புக்**
**கடுவினைய ரிருவினையுங் கடியும் வெற்புத்**
**திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்புத்**
**தெளிந்தபெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்புப்**
**புண்ணியத்தின் புகலிதென்னப் புகழும் வெற்புப்**
**பொன்னுலகிற் போகமெல்லாம் புணர்க்கும் வெற்பு**
**விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு**
**வேங்கடவெற் பெனவிளங்கும் வேத வெற்பே.** (43)

(ப-ரை) வேங்கடவெற்பு என - திருவேங்கடமலையென்று விளங்குகிற, வேதவெற்பு - வேதத்தில் சொல்லப்பட்ட மலையா

னது, கண்ணன் அடியிணை - கிருஷ்ணாவதாரம் செய்த எம்பெருமானுடைய ஒன்றுக்கொன்று ஒப்பான இரண்டு திருவடிகளை, எமக்கு - மிகவும் தாழ்ந்தவர்களான நமக்கு, காட்டும் வெற்பு, கடுவினையர் - கொடுமையான பாபங்களையுடையவர்களுடைய, இருவினையும் - புண்ணியம் பாபம் என்கிற இரண்டுவித கர்மங்களையும், கடியும் - போக்கும்படியான, வெற்பு, திண்ணம் - உண்மையாகவே, வீடு இது என்ன - இது வைகுந்தமென்று சொல்லும்படி, திகழும் - விளங்கும், வெற்பு, தெளிந்த - தெளிவான, பெரும் தீர்த்தங்கள் - ஆகாசகங்கை பாபநாசம் முதலான பெரிய தீர்த்தங்கள், செறிந்த - நிறைந்த, வெற்பு, புண்ணியத்தின்புகல் இது என்ன - புண்ணியங்களுக்கு இது இருப்பிடமென்று சொல்லும்படி, புகழும் - கொண்டாடும்படியான வெற்பு, பொன் உலகில் - அழகிய வைகுந்தத்தில் இருக்கும், போகமெல்லாம் - எல்லா போகங்களையும், புணர்க்கும் - ஒருவனிடம் சேர்க்கும், வெற்பு, விண்ணவரும் - நித்தியஸூரிகளும், மண்ணவரும் - பூமியிலுள்ளவர்களும், விரும்பும் - ஆசைப்படும், வெற்பு.

குறிப்பு:— முதலடிக்கு வேறு விதமாயும் பொருள் சொல்லலாம்— ஸ்ரீநிவாஸன் வலது திருக்கையால் தன் திருவடிகளைக் காட்டி இவைகளை நீங்கள் அடையுங்கள் என்று காட்டுகிற மலை என்று.

---

பெருமாள் கோயிலைப் பற்றின பாட்டு.

உத்தம வமர்த்தல மமைத்தோ
 ரெழிற்றனு வுயர்த்த கணையால்
அத்திர வரக்கன்முடி பத்துமொரு
 கொத்தென வுதிர்த்த திறலோன்
மத்துறு மிகுத்ததயிர் மொய்த்தவெணை
 வைத்ததுணு மத்த னிடமா
மத்திகிரி பத்தர்வினை தொத்தற
 வறுக்குமணி யத்தி கிரியே. (44)

(ப-ரை) உத்தமம் அமர்த்தலம் - எம்பெருமான் சக்கிரவர்த்தி திருமகனாய் அவதரித்த காலத்திலிருந்த ஒப்பற்ற போர்க்களத்தில், அமைத்தது - இருந்ததான, ஓர் - ஒப்பற்ற, எழில்

தனு - அழகான வில்லாலே, உயர்த்த - விடப்பட்ட, கணையால்-பாணத்தால், அத்திரம் அரக்கன் - அஸ்திரங்களையுடைய ராக்ஷஸனை ராவணனுடைய, முடிபத்தும் - பத்துத் தலைகளும், ஒரு கொத்து என - ஒரு பனம்பழக்கொத்துபோல, உதிர்த்த - கீழே உதிரும்படி செய்த, திறலோன் - ஸாமர்த்தியமுடையவனும், மத்துஉறுமிகுத்த தயிர் - மத்தை வைத்துக்கடையும்படியான அதிகமான தயிரில், மொய்த்தவெணெய் - மேலே வந்த வெண்ணெய்யை, வைத்து - உரியில் வைத்ததை யெடுத்து, அது உணும் - அதைச் சாப்பிடுகிற, அத்தன்-நமக்கு வேண்டியவனுயுமிருந்த எம்பெருமானிருக்கும், இடமாம் - இடமான, அத்தி கிரி-ஹஸ்தி மலையானது, பத்தர்வினை - பக்தர்களுடைய கர்மங்களை, தொத்து அற - வாஸனையுடன், அறுக்கும் - அறுத்துவிடும், அத்திகிரி - அந்த சக்கிராயுதமானது, அணி - அது செய்யும் வேலையை மலை செய்துவிட்டபடியால் அது திருக்கைக்கு வெறும் அலங்காரமே.

---

குறிப்பு:— (1) முதல் 'அத்தி கிரி' என்பதற்கு ஹஸ்திகிரி என்றும், இரண்டாவது 'அத திகிரி' என்பதற்கு சக்ரம் என்றும் பொருள்.

மூலமந்திர அதிகாரத்தில் மூலமந்திரத்தினல் ஸித்தி அடைந்தவனை ஸ்தோத்ரம் பண்ணுகிற இடத்தில் ஒரு பாட்டு.

எட்டுமா மூர்த்தி யெண்கண்ண னெண்டிக்
கெட்டிறை யெண்பிர கிருதி
எட்டுமா வரைக ளீன்றவெண் குணத்தோ
னெட்டெணு மெண்குண மதியோர்க்
கெட்டுமா மலரெண் சித்தி யெண்பத்தி
யெட்டு யோகாங்க மெண்செல்வம்
எட்டுமா குணமெட் டெட்டெனுங் கலையெட்
டிரதமே லனவுமெட் டினவே. (45)

(ப-ரை) எட்டு மா மூர்த்தி - எட்டுப் பெரிய உடம்புகளை உடைய ருத்திரன், எண்கண்ணன் - நான்கு முகங்களில் எட்டுக் கண்ணையுடைய பிரம்மா, எண்திக்கு - எட்டுத் திக்குக்கள், எட்டு இறை - கிழக்கு முதலான எட்டுத் திக்குக்களுக்குப் பாலகர்களான இந்திரன் முதலான எட்டு திக்பாலர்கள், எண் பிரகிருதி -

ஐந்து பூதங்கள், மஹத், அஹங்காரம், மனது ஆகிய எட்டுவித மான பிரகிருதிகள், எட்டு மா வரைகள்-ஹிமயம் முதலான எட்டு பெரிய மலைகள், ஈன்ற எண் குணத்தோன் - இவைகளையெல்லாம் உண்டுபண்ணின எட்டு குணமுள்ளவனான எம்பெருமான், எட்டு எனும் - இவ்விதமான எம்பெருமானைச் சொல்லுகிற எட்டெழுத்தாகிய மூலமந்திரத்தை அநுஸந்தாநம் பண்ணுகிற, எண் குணம் மதியோர்க்கு - எட்டுக் குணமுள்ள புத்திமான்களுக்கு; மேலே சொல்லப்போகிறவைகளில் கிடைக்காதது ஒன்றுமில்லை. எட்டு மா மலர் - எட்டுப் பெரிய புஷ்பங்கள், எண்சித்தி - எட்டு ஸித்திகள், எண்பத்தி - எட்டுவிதங்களான பக்திகள், எட்டு யோகாங்கம் - யமம், நியமம், ஆஸநம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியாநம் ஆகிய இந்த ஏழு அங்கங்களுடன் சேர்ந்த ஸமாதி, எண் செல்வம் - அணிமா முதலான எட்டு ஐசுவரியங்கள், எட்டுமாகுணம் - எட்டுப் பெரிய குணங்கள், எட்டு எட்டு எனும் கலை - அறுபத்துநான்கு கலைகள், எட்டு இரதம் மேலனவும் - எட்டு ரஸங்களுக்கு மேலான சாந்தி ரஸமும், இவைகளெல்லாம் மூலமந்திரத்தை அநுஸந்தாநம் பண்ணுகிறவர்களுக்குப் பிரயாஸமில்லாமல் வரும்.

குறிப்பு:— (1) ருத்திரனுடைய எட்டு உடம்புகளாவன— ஐந்து பூதங்கள், சந்திரன், ஸூரியன், யாகம் பண்ணுகிறவன்.

(2) எம்பெருமானுடைய எட்டு குணங்களாவன— கர்மத்துக்கு உட்படாமை, கிழத்தனமில்லாமை, மரணமில்லாமை, பசியில்லாமை, தாஹமில்லாமை, சோகமில்லாமை, நித்தியமான போகங்களை யுடையவனாயிருப்பது, நினைத்ததை முடிக்கவல்லனாய் இருப்பது.

(3) புத்தியின் எட்டு குணங்கள்— (1) சொல்லும் விஷயத்தை வாங்கிக்கொள்வது, (2) அதை மறந்துபோகாமல் வைத்துக்கொள்வது, (3) அதை நினைவுக்குக் கொண்டுவருவது, (4) பிறருக்குச் சொல்லுவது, (5) சொல்லாத விஷயத்தைச் சேர்த்துக்கொள்வது, (6) சொல்லியிருப்பதை விடவேண்டிய இடத்தில் விட்டுவிடுவது, (7) அர்த்தத்தை நன்றாய் அறிவது, (8) உண்மையை அறிவது.

(4) எட்டுப் புஷ்பங்களாவன— (1) ஒருவனுக்கும் தீங்கு செய்யாமை, (2) இந்திரியங்களை யடக்குவது, (3) எல்லாரிடத்தும்

இரக்கமுள்ளவனுயிருப்பது, (4) ஒருவன் செய்த குற்றத்தைப் பொறுத்துக்கொள்வது, (5) தன்னையும் எம்பெருமானையும் பற்றிய அறிவு, (6) தபஸ், அதாவது போகங்களைக் குறைத்துக் கொள்ளுதல், (7) தியாகம், (8) உண்மை பேசுவது. புஷ்பங்கள் எப்படி எம்பெருமானுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்குமோ, அப்படியே இந்த எட்டும் அவனுக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதால் புஷ்பங்கள் என்று சொல்லப்படுகின்றன.

(5) எட்டு ஸித்திகளாவன— இதை யெடுத்துக்கொள்ள வேண்டியது,இதை விடவேண்டியதென்கிற விசாரமாகிய ஊஹம், யுக்திகளைக் கொண்டு விசாரிப்பதாகிய தர்க்கம், ஆசாரியனிடத்தில் ஒரு விஷயத்தைக் கேட்பது, மூன்று விதங்களான துக்கங்களைப் போக்குவது, வேண்டியவனுடன் சேருவது, தாநம். எட்டு ஸித்திகளை வேறுவிதமாயும் சொல்லலாம். அவைகளாவன— (1) அத்யயநம்: (2) அங்கங்களைப் படிப்பதாலுண்டாகும் வேதத்தின் அர்த்த ஜ்ஞாநம், (3) நியாயங்களைக்கொண்டு விசாரித்து அர்த்தம் இன்னதென்று தீர்மானிப்பது, (4) பெரியோருடன் சேர்ந்து தான் அறிந்ததை ஸ்திரப்படுத்திக்கொள்வது, (5) ஸந்தேஹமும் தப்பெண்ணமுமில்லாமல் உண்மையான அர்த்தத்தை எப்போதும் நினைத்துக்கொண்டிருப்பது, (6,7,8) மூன்று தாபங்கள் போவது. தாபங்களாவன— தன் உடம்பினாலுண்டாவது, மழை காற்று முதலான தேவர்களாலுண்டாவது, பிராணிகளால் உண்டாவது.

(6) எட்டு பக்திகள்— இதைப் பற்றி 52-வது பக்கம் புருஷார்த்தகாஷ்டாதிகாரத்தின் 1-வது பாராவைப் பார்க்க.

(7) எட்டுச் செல்வங்களாவன— தன்னுடைய உடம்பை ஸூக்ஷ்மமாகப் பண்ணிக்கொள்வது- அணிமா; அதைப் பெரிதாகப் பண்ணுவது- மஹிமா; அதைக் கனமில்லாமல் பண்ணுவது- லகிமா; அதைக் கனமுள்ளதாகப் பண்ணுவது- கரிமா; இதற்கு உடம்பை எல்லாரும் ஆசைப்படும்படியாய் பண்ணுவதென்றும் பொருள் கொள்ளலாம். எல்லாரையும் தன் வசப்படுத்திக்கொள்வது- வசித்வம்; எல்லாரையும் நியமநம் பண்ணுவது- ஐசுவரியம்; தனக்கு வேண்டியதை யடைவது- ப்ராப்தி; தான் நினைத்ததற்குத் தடையில்லாமை- பிராகாமியம்

(8) எட்டுமா குணம்— இவைகள் ஒருவன் மோக்ஷத்தை யடையும்போது தோன்றும். அவைகள் கீழே எம்பெருமா னுக்குச் சொன்ன குணங்கள்.

---

சரமச்லோகாதிகாரத்தில் நான்கு பாட்டுக்கள் சேர்க்கப்பட் டிருக்கின்றன. அவைகளில் முதல் பாட்டு.

ஒண்டொடியாள் திருமகளுந் தானு மாகி
யொருநினைவா லீன்றவுயி ரெல்லா முய்ய
வண்டுவரை நகர்வாழ வசுதே வர்க்காய்
மன்னவர்க்குத் தேர்ப்பாக னாகி நின்ற
தண்டுளவ மலர்மார்பன் றானே சொன்ன
தனித்தருமந் தானெமக் காய்த் தன்னை யென்றுங்
கண்டுகளித் தடிசூட விலக்காய் நின்ற
கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின் றானே. (46)

(ப-ரை) ஒண் தொடியாள்-விளங்குகிற கைவளைகளையுடைய, திருமகளும் - பிராட்டியும், தானும் ஆகி, ஒரு நினைவால் - ஒரே ஸங்கல்பத்தாலே. ஈன்ற உயிர் எல்லாம்-உண்டுபண்ணின எல்லா ஜீவன்களும், உய்ய - பிழைப்பதற்காக, வண் துவரை நகர் வாழ - மஹிமை பொருந்திய துவாரகையென்னும் பட்டணத்திலிருக் கும் ஜநங்கள் வாழும்படி, வசுதேவர்க்கு ஆய் - வஸுதேவர்க்குத் திருமகனாய் அவதாரம் செய்து, மன்னவற்கு-ராஜாவான அர்ஜுந னுக்கு, தேர் பாகன் ஆகிநின்ற, தண் துளவம் மலர்மார்பன்-குளி மையான துளஸீ புஷ்பமாலையை மார்பிலுடையவனான எம்பெரு மான், தானே சொன்ன, தனி தருமம்தான் - ஒப்பில்லாத ஸித் தோபாயனான அவன், எமக்காய்-நமக்கு உபாயமாக ஆகி, தன்னை, என்றும் - எப்போதும், கண்டு, களித்து - ஸேவித்து ஸந்தோ ஷப்பட்டு, அடிசூட - அவன் திருவடிகளில் கைங்கரியம் பண்ணு வதற்கு, விலக்காய் நின்ற - பிரதிபந்தகமாயிருந்த, கண்புதையல் விளையாட்டை - கண்ணாமூச்சி விளையாட்டை, கழிக்கின்றான் - விட்டுவிடுகின்றான்.

(கருத்து) எம்பெருமான் பிராட்டியுடன் கூட ஓரே மன தினால் உண்டுபண்ணின எல்லா ஆத்மாக்களும் பிழைப்பதற்காக, துவாரகை என்னும் பட்டிணத்தின் ஜனங்கள் வாழும்படி வஸு தேவருக்குத் திருமகனாய் அவதாரஞ் செய்து, பிறகு அர்ஜுந

ணுகிய ராஜாவை ரதத்தில் வைத்துத் தான் அந்த ரதத்தை ஓட்டிக்கொண்டு நின்று, தானே ஸ்ரீகீதையை உபதேசம் பண்ணினான். அதன் கடைசி சுலோகத்தில் ஸித்தோபாயமாக காட்டப்பட்ட அவனே நாம் ஸமர்ப்பித்த ஆத்மரக்ஷாபரத்தை ஒப்புக் கொண்டு, நாம் திருநாட்டுக்குப் போய் எப்போதும் அவனை ஸேவித்து ஸந்தோஷப்பட்டு, அவனுக்குக் கைங்கரியங்கள் செய்வதற்கு விலக்காய் நின்ற கர்மபந்தத்தை நடத்துகிற விளையாட்டை விட்டுவிடுகிறான்.

குறிப்பு:— (1) பிராட்டியுடன் கூட ஆத்மாக்களை உண்டு பண்ணினான் என்பதினால், உண்டுபண்ணி, ரக்ஷித்து, அழிப்பதையும், மோக்ஷம் கொடுப்பதையும் எம்பெருமானொருவனே செய்கிறதில்லை என்றும், பிராட்டியுடன் கூடவே நின்று செய்கிறான் என்றும் காட்டப்படுகிறது. ஆகையினால் சரம ச்லோகத்தில் என்னை (மாம்) என்று தன்னை மாத்திரம் சொன்னபோதிலும், அதற்குத் தன்னையும் பிராட்டியையும் என்று பொருள். இது த்வயம் என்கிற ரஹஸ்யத்தில் தெளிவாய் விளங்குகிறது.

(2) ஆத்மாக்கள் பிழைப்பதற்காக என்பதற்கு தானே உபதேசம் செய்தான் என்பதுடன் ஸம்பந்தம்.

(3) வாழும்படி என்பதற்குத்திருமகனைப் அவதாரம் செய்து என்பதுடன் ஸம்பந்தம்.

(4) தானே உபதேசம் செய்தான். வேறொருவன் முகமாய் இதைச் செய்யவில்லை.

(5) பாட்டில் 'தனித் தருமம்' என்று சொல்லியிருக்கிறது. தருமம் என்றால் ஒரு பலனை ஒருவன் அடைவதற்கு ஸாதனம் என்று பொருள். அந்த ஸாதனம் இரு வகைப்படும். (1) பலனைக் கொடுக்கிறவன். (2) அவனை அதைக் கொடுக்கும்படி செய்வது மற்றொன்று. முதல் உபாயத்தை ஸித்தோபாயம் என்றும், இரண்டாவதை ஸாத்திய உபாயம் என்றும் சொல்லுகிறது. இங்கே எம்பெருமான் முதலில் சொன்ன உபாயம்.

6. இதுவரையில் நாம் எம்பெருமானிடம்போய் அவனை அநுபவித்துக் கைங்கரியம் செய்வதற்குத் தடையாய் இருந்தது எம்பெருமானுடைய விளையாட்டு. குழந்தைகள் ஒருவன் கண்ணைக்கட்டி மற்றவர்களைப் பிடிக்கும்படி செய்து அவன் அங்கும்

இங்கும் திரிவதைப்பார்த்து ஸந்தோஷப்படுகிறார்கள். அப்ப டியே எம்பெருமானும் தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் இவை களில் நமக்கு உண்மையான அறிவில்லாமல் செய்து விஷயங்களை அநுபவிப்பதற்காக அங்குமிங்கும் ஓடுவதைப் பார்த்து லீலா ரஸத்தை அநுபவிக்கிறான். அவனிடம் நாம் பிரபத்தி பண்ணின வுடன் நம்முடைய விஷயத்தில் தன் விளையாட்டை முடித்துக் கொண்டு நமக்கு அறிவைக்கொடுத்து தன்னிடம் அழைத்துக் கொண்டு போகிறான்.

---

சரமச்லோகத்தில் 'எல்லாதர்மங்களையும் விட்டு' என்பதை விதியாகக்கொண்டு அப்படி விடுவது பிரபத்திக்கு அங்கமென்று சிலர் சொல்லுகிறார்கள். இந்த பக்ஷத்தில் அந்த வாக்கியத்திற்கு ஸரியான பொருள்களைப் பாட்டினால் அருளிசசெய்கிறார்.

மூண்டாலு மரியதனின் முயல வேண்டா
முன்னமதி லாசைதனை விடுகை திண்மை
வேண்டாது சரணநெறி வேறோர் கூட்டு
வேண்டிலய னத்திரம்போல் வெளிகி நிற்கும்
நீண்டாகு நிறைமதியோர் நெறியிற் கூடா
நின்றனிமை துணையாக வென்றன் பாதம்
பூண்டா லுன்பிழை களெல்லாம் பொறுப்பே னென்றப்
புண்ணியனார் புகழ னைத்தும் புகழுவோமே (47)

(ப-ரை) அரியதனில் - செய்யமுடியாத உபாயத்தை, மூண் டாலும் - செய்ய ஆரம்பித்தாலும், முயலவேண்டாம் - அதில் பிரயாஸப்படவேண்டாம், முன்னம் - செய்ய ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே, அதில் ஆசைதனை - அதைச் செய்யவேண்டும் என்கிற ஆசையை, விடுகை - விடுவது, திண்மை - நல்லது, சரணநெறி - பிரபத்தியாகிய உபாயமானது, வேறு ஓர் கூட்டு - வேறொன்றின் சேர்க்கையை, வேண்டாது, வேண்டில் - ஒருவன் தன் புத்தியினால் ப்ரபத்திக்கு ஒன்றை அங்கமாக எண்ணிச் செய்தால், அயன் அத்திரம்போல் - பிரம்மாஸ்த்ரம்போல், வெள்கி - வெட்கப்பட்டு, நிற்கும், நிறைமதியோர்-நிறைந்த புத் தியையுடையவர்கள், நீண்டாகும் - நீண்டகாலம் செய்து முடிக்கவேண்டிய, நெறியில் - மார்க்கத்தில், அதாவது பக்தி யோகத்தில், கூடா-சேராத, நின் - உன்னுடைய, தனிமை - உபா

யமில்லாமலிருக்குமிருப்பை, துணையாக, என்தன் பாதம் - என்னுடைய திருவடிகளை, பூண்டால் - சரணமாகப் பற்றினால், உன் பிழைகளெல்லாம் பொறுப்பேன், என்ற - என்று சரமச்லோகத்தில் சொல்லுகிற, புண்ணியனார் - ஸநாதநதர்மமென்று சொல்லப்பட்ட எம்பெருமானுடைய, புகழ் அனைத்தும் - புகழும்படியான எல்லா நல்ல குணங்களையும், புகழுவோம் - பிரீதியுடன் கொண்டாடுவோம்.

(கருத்து) ஒருவன் தன்னாலே செய்ய முடியாத கர்மயோகம் முதலானவைகளைச் செய்ய ஆரம்பித்தாலும் அவைகளில் மறுபடியும் பிரயாஸப்படவேண்டாம். இது ஒரு அர்த்தம். (2) அவைகளைச்செய்ய ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே அவைகளைச் செய்யவேணுமென்கிற ஆசையைவிட்டு அவைகளை ஆரம்பிக்காமல் இருப்பதே நல்லது. (3) பிரபத்தி ஆகிய உபாயமானது பரிகரவிபாக அதிகாரத்தில் சொன்ன ஐந்து அங்கங்களைத் தவிர வேறு அங்கங்களை வேண்டுகிறதில்லை. (4) ஒருவன் தன் புத்தியினால் பிரபத்திக்கு ஒன்றை அங்கமாக எண்ணிச் செய்தால் பிரம்மாவினுடைய அஸ்திரமானது வேறொன்றினுடைய சேர்க்கையைப் பொறுக்காமல் வெட்கப்பட்டு ஒதுங்கியிருப்பதுபோல், பிரபத்தியும் விலகி நிற்கும். ஆகையால் வெகுகாலம் செய்து முடிக்கக் கூடிய பக்தியோகத்தைச் செய்யமுடியாமல் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற நீ, இப்படி வேறு உபாயமில்லாமல் இருக்கிற உன்னுடைய தாழ்மையைத் துணையாகக்கொண்டு, என்னுடைய திருவடிகளை உபாயமாகப்பற்றினால், நான் உன்னுடைய எல்லாப் பிழைகளையும் பொறுப்பேன் என்று எம்பெருமான் தானே அருளிச்செய்திருக்கிறான். அவ்விதமான வாத்ஸல்யத்தையுடைய எம்பெருமானுடைய கல்யாண குணங்களை நாம் கொண்டாடுவோம்.

குறிப்பு:— பாட்டில் முதல் இரண்டு அடிகளால் எல்லா தருமங்களை விட்டு என்பதற்குச் சரியான பொருள் சொல்லப்பட்டது. மூன்றாவது அடியால் சரணம் விரஜ என்பதின் பொருளும், நான்காவது அடியால் சுலோகத்தின் இரண்டாவது பாதியின் பொருளும் சொல்லப்பட்டன.

"என்னை ஒருவனையேஉபாயமாகப்பற்று" என்பதில் ஒருவனை யே என்பதற்குப் பொருளைப் பாட்டாலே அருளிச் செய்கிறார்.

சாதனமு நற்பயனு நானே யாவன்
  சாதகனு மென்வசமா யென்னைப் பற்றும்
சாதனமுஞ் சரணநெறி யன்று மக்குச
  சாதனங்க ளிந்நிலைக்கோ ரிடையி னில்லா
வேதனைசேர் வேறங்க மிதனில் வேண்டா
  வேறெல்லா நிற்குநிலை நானே நிற்பன்
தூதனுமா நாதனுமா மென்னைப் பற்றிச்
  சோகந்தீ ரெனவுரைத்தான் சூழ்கின் றானே (48)

(ப-ரை) நல் பயனும் - நீ வேண்டுகிற நல்ல பலனும், சாதனமும் - அதற்கு வேண்டிய (ஸித்த) உபாயமும், நானே ஆவன்; சாதகனும் - ஸாத்தியமான உபாயத்தைச் செய்கிறவனும், என் வசமாய், என்னை பற்றும் - என்னை உபாயமாகப் பற்றுவன், சரணநெறி-ஸாத்திய உபாயமான பிரபத்தியும், உமக்கு, சாதனமும் - முக்கியமான சாதனமும், அன்று, சாதநங்கள் - பக்தியாகிய ஸாதநங்கள், இ நிலைக்கு - இந்த பிரபத்திக்கு, ஓர் இடையில் நில்லா - நடுவில் இருக்காது. வேதனைசேர்-துக்கம் சேர்ந்த, வேறு அங்கம் - வேறு அங்கங்களை, இதனில் - இந்த பிரபத்தியானது, வேண்டா-வேண்டாது, வேறுஎல்லாம் நிற்கும்-வெவ்வேறு பலன் களுக்கு உபாயமாகச் சொல்லப்பட்டவைகளின், நிலை - நிலையில், நானே நிற்பன் - நானேயிருப்பன், தூதனும் - தூதனும், நாதனும்-நாதனுயுமிருக்கிற, என்னைப் பற்றி, சோகம் தீர் என - உன்னுடைய சோகத்தை விட்டுவிடு என்று, உரைத்தான் - சொன்னவன், சூழ்கின்றான் - வளைத்துக்கொள்ளுகிறான்.

(கருத்து) 1. நீ வேண்டுகிற நல்ல பலனும் அதற்கு உபாயமும் நானே. அதாவதுஉனக்குப்பலனான நானே உனக்கு அதைக் கொடுப்பேன்; 2. பிரபத்தியைச் செய்கிற நீயும் எனக்குட்பட்டு என்னை உபாயமாய் பற்றுகிறாய். ஆகையால் நீ பிரதாநமான உபாயமன்று; நானே பிரதாநமான உபாயம். 3. நீ செய்கிற பிரபத்தியானது உனக்கு மோக்ஷத்தைக் கொடுக்கிற உபாயமன்று, அது வியாஜமாத்திரம், கொடுக்கிறவன் நானே. 4. பக்தியோகம் செய்கிறவன் முதலில் பிரபத்தி பண்ணி பிறகு பக்தி

யோகத்தைச் செய்து மோக்ஷத்தை அடைகிறுன். அப்படி பக்தியானது பிரபத்திக்கும் மோக்ஷத்திற்கும் நடுவில் அங்கியாக இருக்கவில்லை. பிரபத்தியே நேரே மோக்ஷம் கிடைக்கும்படி செய்யும். 5. பரிகரவிபாக அதிகாரத்தில் சொன்ன அங்கங்கள் தவிர கஷ்டப்பட்டுச் செய்யும்படியான வேறு அங்கங்கள் பிரபத்திக்கு வேண்டியதில்லை. 6. எவனெவனுக்கு எங்கெந்த உபாயம் செய்யமுடியாமல் வருத்தம் உண்டாகிறதோ, அவனவனுக்கு அந்தந்த உபாயங்களின் ஸ்தாநத்தில் நான் இருந்து அவனவன் வேண்டுவதைக் கொடுப்பேன். இப்படி 'என்னை ஒருவனையே' என்கிற சொல்லுக்கு அர்த்தம் கொள்ளலாம். இப்படி உனக்கு ஸ்வாமியாய், வாத்ஸல்யத்தினுலே பாண்டவர்களுக்குத் தூதனுய்ப்போன என்னை உபாயமாக நீ பற்றி உன்னுடைய துக்கத்தைத் தீர் என்று சொன்ன எம்பெருமான் தன் லாபமாக தானே வந்து நம்மை வளைக்கிறுனே.

---

இந்த அதிகாரத்தின் நாலாவது பாட்டு

தன்னினைவில் விலக்கின்றித் தன்னை நண்ணுர்
  நினைவனைத்துந் தான்விளைத்தும் விலக்கு நாதன்
என்னினைவை யிப்பவத்தி லின்று மாற்றி
  யிணையடிக்கீ ழடைக்கலமென் றென்னை வைத்து
முன்னினைவால் யான்முயன்ற வினையால் வந்த
  முனிவயர்ந்து முத்திதர முன்னே தோன்றி
நன்னினைவா னுமிசையுங் கால மின்றே
  நாளையோ வென்றுநகை செய்கின் றுனே (49)

(ப-ரை) தன் நினைவில் - தன்னுடைய ஸங்கல்பத்திற்கு, விலக்கு இன்றி - தடையில்லாமல் தன்னை நண்ணுர் - தன்னை அடையாதவர்களுடைய, நினைவு அனைத்தும் - எண்ணங்கள் எல்லாவற்றையும், தான் விளைத்து - தானேயுண்டுபண்ணி, விலக்கும் - போக்கும்படி பண்ணுகிற, நாதன், என் நினைவை - என்னுடைய எண்ணத்தை, இ பவத்தில் - இந்த ஜந்மத்தில், இன்று, மாற்றி - ஏதோ ஒரு வியாஜத்தைக் கொண்டு மாற்றி, இணை அடி கீழ் - தன்னுடைய இரண்டு திருவடிகளின் கீழ், என்னை அடைக்கலம் என்று வைத்து - என்னை ரக்ஷிக்கவேண்டிய வஸ்துவாக எண்ணிவைத்து, முன் நினைவால் - முன்னுலேயிருந்த என்னு

டைய தப்பெண்ணங்களாலே, யான் முயன்ற வினையால் - நான் செய்த கர்மங்களாலே, வந்த - உண்டான, முனிவு -கோபத்தை, அயர்ந்து-விட்டுவிட்டு, முத்தி தர - மோக்ஷத்தைக் கொடுப்பதற்கு, முன்னே தோன்றி, நல் நினைவால் - நல்ல எண்ணத்தாலே, நாம் இசையும் காலம் - வைகுந்தத்திற்கு வருகிறோம் என்று நாம் ஒப்புக்கொள்ளும் காலமானது, இன்றோ நாளையோ என்று, நகை செய்கின்றான் - சிரிக்கிறான்.

(கருத்து) எம்பெருமான் எவன் தன்னை அடையவில்லையோ அவனுடைய எல்லா எண்ணங்களையும் தானே உண்டாக்கி அவைகள் போரும்படியாகவும் செய்கிறான். இப்படி அவன் ஸங்கல்பத்தினாலே செய்யும்போது அவனைத் தடுப்பவர் ஒருவருமில்லை. இப்படிப்பட்ட என் ஸ்வாமியான எம்பெருமான் இந்தப் பிறப்பில் ஸம்ஸாரத்தில் உண்டாகும் என்னுடைய ஆசைகளை யாதிருச்சிக ஸுக்ருதம் முதலான வியாஜம் உண்டான இப்போது மாற்றி, என்னைத் தன்னாலே ரக்ஷிக்க வேண்டியவஸ்துவாக தன்னுடைய திருவடிகளில் வைத்தான். முன்னாலே உடம்பே ஆத்மா என்கிற எண்ணத்தினால் நான் செய்த கர்மங்களினால் உண்டான கோபத்தை அதாவது நிக்ரஹம் செய்யவேணுமென்கிற எண்ணத்தை விட்டுவிட்டு, மோக்ஷத்தைக்கொடுப்பதற்காக முன்னாலே தோன்றுகிறான். நாம் நல்ல நினைவினால் உடனே திருநாட்டுக்கு வருகிறோம் என்று சொல்லுவோமா? அல்லது இங்கே கொஞ்சகாலமிருந்து உடம்பு கீழே விழுந்தவுடன் வருகிறோம் என்று சொல்லுவோமாவென்று சிரிக்கிறான்.

---

ஆசாரியகிருத்ய அதிகாரத்தில் சேர்த்திருக்கும் பாட்டு. இந்த ரஹஸ்யத்ரய ஸாரத்தை எம்பெருமான் ஸ்ரீ தேசிகனுக்குத் தெளிவாகக் காட்டி, அதைப் பிழையில்லாமல் எழுதும்படி செய்தான் என்று அந்த இடத்தில் சொல்லியிருக்கிறது. இதற்கு உதாரணமாக முதலாழ்வார் மூன்று பேர்கள். இருக்குமிடத்தில் எம்பெருமான் வந்து, இருட்டு வேளையில். அவர்களை நெருக்கியபோது, அவர்கள் ஜ்ஞாநத்தினால் எம்பெருமானைத் தெரிந்துகொண்டு, மூன்று அந்தாதிகளைப்பாடினார்கள். இப்படி எம்பெருமான்தான் அவர்களைப் பாடும்படி செய்தான் என்று ஒரு பாட்டை அருளிச் செய்கிறார்.

பாட்டுக் குரிய பழையவர் மூவரைப் பண்டொருகால்
மாட்டுக் கருடரு மாயன் மலிந்து வருத்துதலால்
நாட்டுக் கிருள்செக நான்மறை யந்தி நடைவிளங்க
'வீட்டுக் கிடைகழிக் கேவெளி காட்டுமிம் மெய்விளக்கே.

(ப-ரை) பாட்டுக்குஉரிய - எம்பெருமானைப்பாட்டுக்களாலே ஸ்தோத்திரம் பண்ணத் தகுந்தவர்களான, பழையவர் மூவரை - முதலாழ்வார்கள் மூன்று பேரை, பண்டு ஒருகால் - முன்னே ஒரு காலத்தில், மாட்டுக்கு - தனத்துக்கு, அதாவது தன்னுடைய விபூதிகளான ஜீவன்களுக்கு, அருள் தரும் - கிருபை செய்யும், மாயன் - ஆச்சரியங்களான வேலைகளைச் செய்யும் எம்பெருமான், மலிந்து - மிகவும், வருத்துதலால் - வருத்தப்படுத்தினதால், நாட்டுக்கு - லோகத்துக்கு, இருள் - அஜ்ஞாநம், செக - போகும்படியாயும், நால் மறை அந்தி - நான்கு வேதங்களின் முடிவிலிருக்கிற உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட, நடை - பக்தி பிரபத்தி என்கிற உபாயங்கள், விளங்க - நன்றாய் தெரியும்படியும், வீட்டுக்கு இடைகழிக்கு - ஒரு வீட்டின் ரேழியில் உண்டான, இ மெய்விளக்கு - உண்மையைக் காட்டும்படியான அந்தாதிரூபமான விளக்கானது, வெளிகாட்டும் - பிரகாசத்தை யுண்டுபண்ணும்.

(கருத்து) முதலாழ்வார்கள் மூன்று பேர்களை முன்னொரு காலத்தில் எம்பெருமான் ஒரு ரூபம் எடுத்துக்கொண்டு அவர்களுக்கு நடுவே புகுந்து அவர்களை நெருக்கினன். எதற்காகவென்றால் அவன் தன்னுடைய ஸொத்தான ஜீவன்களுக்குக் கிருபைசெய்கிற ஆச்சரியமான வேலைகளைச்செய்பவனுகையாலே, இவர்களைக் கொண்டு அந்தாதிகளைச் செய்வித்து அவைகளைக் கொண்டு அந்த ஜீவன்களைப் பிழைப்பிக்கவேண்டுமென்று. அந்த ஆழ்வார்கள் இருந்த வீட்டின் ரேழியில் அவர்கள் செய்த அந்தாதிரூபமான ஒரு விளக்கு உண்டாயிற்று. அவை நான்கு வேதங்களில் கடைசி பாகமான உபநிஷத்துகளில் சொல்லப்பட்ட பக்தி, பிரபத்தி என்கிற உபாயங்களை நன்றாய் வெளியிடுகின்றன. அவைகளாலே லோகத்திலுள்ள அஜ்ஞாநமாகிய இருள் போய்விட்டது. ஆகையால் அவைகள் விளக்குப்போல் இருந்தன. உண்மையான உபாயங்களைக் காட்டுவதினால் அவைகளை மெய்விளக்கு என்று பாட்டு சொல்லுகிறது.

நிகமநாதிகாரத்தில் எம்பெருமானுடைய திருவடிகளே ஒருவன் உபாயத்தைச் செய்யும்போதும், பிறகு அதின் பலனை அநுபவிக்கும்போதும் அவனுக்கு உபஜீவ்யங்கள் என்று சொல்லப்பட்டன. அந்தத்திருவடிகளை ஒரு பாட்டாலே ஸ்தோத்திரம் செய்கிறார்.

உறுசகட முடைய வொருகாலுற் றுணர்ந்தன
உடன்மருத மோடிய வொருபோதிற் றவழ்ந்தன
உறிதடவு மளவி லுரலூடுற்று நின்றன
உறுநெறியோர் தருமன் விடுதூதுக் குகந்தன
மறநெறியர் முறிய பிரதானத்து வந்தன
மலர்மகள் கைவருட மலர்போதிற் சிவந்தன
மறுபிறவி யறுமுனிவர் மாலுக்கி சைந்தன
மனுமுறையில் வருவதோர் விமானத் துறைந்தன
அறமுடைய விசயனமர் தேரிற் றிகழ்ந்தன
அடலுரக படமடிய வாடிக் கடிந்தன
அறுசமய மறிவரிப தானத் தமர்ந்தன
அணிகுருகை நகர்முனிவர் நாவுக் கமைந்தன
வெறியுடைய துளவமலர் வீறுக் கணிந்தன
விழுகரியோர் குமரனென மேவிச் சிறந்தன
விறலசுரர் படையடைய வீயத் துடர்ந்தன
விடலரிய பெரியபெரு மாள்மெய்ப் பதங்களே. (51)

(ப-ரை) விடல் அரிய - ஜ்ஞாநிகளாலே விடமுடியாத, பெரிய பெருமாள் - ஸ்ரீரங்கநாதனுடைய, மெய் பதங்கள் - மிருதுவான திருவடிகள், உறுசகடம் - பலமுள்ள ஒரு வண்டி ரூபமாயிருந்த ஒரு அஸுரன், உடைய - உடைந்துபோகும்படி, ஒருகால் - ஒரு காலத்தில், உற்று - ஜாக்கிரதையாய், உணர்ந்தன - விழித்துக்கொண்டிருந்தன; உடன் மருதம் - ஒன்றோடொன்று சேர்ந்திருந்த மருதமரங்கள், ஓடிய - ஒடிந்து கீழே விழும்படி, ஒருபோதில் - ஒரு காலத்தில், தவிழ்ந்தன - தவிழ்ந்து அவைகளின் நடுவே போயின; உறிதடவும் அளவில் - உரியில் வைத்த வெண்ணெய்யையும் தயிரையும் எடுக்கும்போது, உரலூடு-கோபங்கொண்ட யசோதையால் உரலோடு கட்டப்பட்டு, உற்றுநின்றன-அத்தோடு சேர்ந்து நின்றன; உறுநெறி - யோக்கியமான நல்ல

வழியையுடைய, ஓர் - ஒப்பில்லாத, தருமன் - தருமபுத்திரனால், விடு - விடப்பட்ட, தூதுக்கு - தூதன் செய்யும் வேலையை, உகந்தன - ஸந்தோஷத்துடன் ஒப்புக்கொண்டன; மறநெறியோர்-கோபத்தையே ஸ்வபாவமாகவுடைய விரோதிகள், முறிய-நாசமாகும்படி, பிரதானத்து - பிருந்தாவனத்தில், வந்தன - வந்து ஸஞ்சரித்தன. மலர்மகள் - தாமரைப்பூவில் வஸிக்கும் பிராட்டி, கைவருட - தன் கைகளாலே பிடிக்க, மலர்போதில் - மலர்கிற தாமரைப்பூவைக் காட்டிலும், சிவந்தன - அதிகமாகச் சிவந்தன; மறுபிறவி அறுமுனிவர் - மறுபடியும் பிறப்பு வேண்டாமென்று வேண்டுகிற ருஷிகளுடைய, மாலுக்கு - பக்திக்கு, இசைந்தன - விஷயமாய் நின்றன; மனுமுறையில் - பிரும்மாவின் லோகத்திலிருந்து வைவஸ்வத மனுவின் ஸந்ததியிலிருந்து, வருவது - வந்து, ஓர் விமானத்து - ஸ்ரீரங்கமென்கிற ஒரு விமானத்தில், உறைந்தன - நித்தியவாஸம் செய்கின்றன; அறம் உடைய விசயன் - பகவானையடைவதாகிய புண்ணியத்தையுடைய அர்ஜுநன், அமர் தேரில் - இருந்த தேரில், திகழ்ந்தன - ஸாரதியாக விளங்கின; அடல் உரகம் - பலமுடைய காளியன் என்கிற பாம்பினுடைய, படம் - படங்கள், மடிய - நசுங்கும்படி, ஆடி - அவைகளின்மேல் நர்த்தநம் செய்து, கடிந்தன-அவன்கர்வத்தைப் போக்கின; அறுசமயம் - ஆறுமதங்களால், அறிவு அரிய - அறிய முடியாத, தானத்து - பரமபதத்தில், அமர்ந்தன - ஸ்திரமாயிருக்கின்றன; அணி குருகை நகர் - பூமிக்கு அலங்காரமான குருகை என்னும் பட்டிணத்துக்குத் தலைவனான, முனிவர் - நம்மாழ்வாருடைய, நாவுக்கு - நாக்கினால் பாடப்பட்ட பாட்டுக்களுக்கு, அமைந்தன - விஷயமாய் இருந்தன; வெறி உடை துளவ மலர் - வாஸனையையுடைய திருத்துழாய்மாலையினுடைய, வீற்க்கு - பெருமைக்கு, அமர்ந்தன - யோக்கியங்களாய் இருந்தன; விழுகரி - உத்தரையின் கர்ப்பத்திலிருந்து கீழே விழுந்த கரிக்கட்டையானது, ஓர் குமரன் என - ஒப்பில்லாத பரீக்ஷித்து என்ற ராஜகுமாரனாகும்படி, மேவி சிறந்தன - பிரீதியுடன்செய்தன; விறல் அசுர் - பலமுடைய அசுரர்களுடைய, படை-ஸேனைகளானது, வீய - நாசமாகும்படி, துடர்ந்தன - அவைகளைத் துரத்திக்கொண்டு போயின.

குறிப்பு:— எம்பெருமானான ஸ்ரீமந் நாராயணனே சக்கிர வர்த்தி திருமகனாகவும், கிருஷ்ணனாகவும் அவதாரம் செய்து, அவனே ஸ்ரீரங்கத்தில் சயனித்துகொண்டிருக்கிறான் என்று கருத்து. அவன் திருவடிகள், பாட்டில் சொன்னபடி பக்தர் களுக்கு வேண்டியதைக் கொடுத்து அவர் விரோதிகளை நாசம் செய்தன. அப்படியே நாமும் அவைகளை அடைந்தால் நமக்கும் இஷ்டங்களைக்கொடுத்து அநிஷ்டங்களைப் போக்குமென்று காட் டப்படுகிறது.

---

கடைசியில் ஐந்து பாட்டுக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. வருங்காலத்தில் இந்தப் புஸ்தகத்தைப்படிக்கிறவர்கள் இல்லாமல் வீணாய்ப் போய்விடுமோவென்று ஸந்தேஹப்படவேண்டாம், யாராவது தகுந்தவன் பிறந்து இதைப் படித்து விஷயங்களைத் தெரிந்துகொள்வன் என்று ஐம்பத்திரண்டாவது பாட்டால் அருளிச்செய்கிறார்.

மறையுரைக்கும் பொருளெல்லாம் மெய்யென் றோர்வார்
மன்னியகூர் மதியுடையார் வண்கு ணத்தில்
குறையுரைக்க நினைவில்லார் குருக்க டம்பாற்
கோதற்றமனம் பெற்றார் கொள்வார் நன்மை
சிறை வளர்க்குஞ் சிலமாந்தர் சங்கேதத்தாற்
சிதையாத திண்மதியோர் தெரிந்த தோரார்
பொறைநிலத்தின் மிகும்புனிதர் காட்டு மேங்கள்
பொன்றாத நன்னெறியிற் புகுது வாரே. (52)

(ப-ரை) மறை உரைக்கும் பொருள் எல்லாம் - வேதம் சொல்லுகிற எல்லா விஷயங்களும், மெய் என்று ஓர்வார் - உண் மையென்று நம்புவர், மன்னிய - திடமான, கூர்மதி உடையார் - கூர்மையான புத்தியை யுடையவர், வண்குணத்தில் - பிறருடைய நல்ல குணங்களில், குறை உரைக்க - தோஷங்களைச் சொல்ல, நினைவு இல்லார் - எண்ணமில்லாதவர், குருக்கள் தம்பால் - ஆசா ரியர்களிடத்திலிருந்து, கோது அற்ற - குற்றமில்லாத, மனம் பெற்றார் - மனதையடைந்தவர், நன்மை கொள்வார் - நல்ல விஷ யங்களையே எடுத்துக்கொள்ளுகிறவர்கள், சிறை வளர்க்கும் - ஜயில்போலிருக்கும் ஸம்ஸாரத்தை வளர்க்கும்படியான, சில மாந்

தர் - சில மனிதர்களுடைய, சங்கேதத்தால் - கட்டுப்பாட்டால், சிதையாத - கலங்காத, திண்மதியோர் - திடமான புத்தியை யுடையவர்கள், தெரிந்தது - பிரயோஜநம் அல்பமென்று தெரிந் தவைகளில், ஓவார் - ஆசையில்லாதவர்கள், பொறை நிலத்தில் - பொறுமையுடைய பூமியில், மிகும் புனிதர் - மிகுந்த புண்ணிய வான்களான ஆசாரியர்கள், காட்டும் - காட்டின, பொன்றாத - நாசமில்லாத, எங்கள் நல் நெறியில் - நம்முடைய நல்ல மார்க்கத் தில், புகுதுவார் - சேருவார்கள்.

(கருத்து) வேதம் சொல்லுகிற தத்துவம், ஹிதம், புரு ஷார்த்தம் முதலானவைகள் எல்லாம் உண்மையானவைகள் என்று நம்பிக்கை உள்ளவர்; திருடமான கூர்மையான புத்தியை உடையவர்; பிறருடைய நல்ல குணங்களை விட்டு அவர்களிடத் தில் குற்றங்களைப் பார்க்கும் எண்ணமில்லாதவர்; ஆசாரியர்க ளிடத்திலிருந்து தோஷமில்லாத ஜ்ஞாநத்தைப் பெற்றவர்; நல்ல விஷயங்களையே எடுத்துக்கொள்ளுகிறவர்; ஸம்ஸாரத்தை வளர்க்கும்படியான சில மந்தபுத்திகளுடைய கட்டுப்பாடுகளால் கெடாத திருடமான மனதையுடையவர்; அல்பமான புருஷார்த் தங்களை ஆசைப்படாதவர்—இந்த குணங்களை உடைய ஒருவர் பின்காலத்திலும் பிறந்து பொறுமையே ஸ்வபாவமாக உடைய இந்த பூமியில் இருக்கும் பெரியோர்கள் காட்டும் நம்முடைய சாச்வதமான மார்க்கத்தில் பிரவேசிப்பர். ஆகையால் இந்த கிரந்தம் வீணாகாது.

---

நம்முடைய மனது விஷயங்களில் போய் இழிவதினாலே இந்த தோஷத்தைப் பார்த்து ஆசாரியர்கள் நமக்கு நல்ல அர்த் தத்தை உபதேசிப்பார்களோ மாட்டார்களோ என்று வரும் ஸந்தேஹத்திற்குப் பதில் பாட்டாலே அருளிச்செய்கிறார்.

இதுவழி யின்னமு தேன்றவ ரின்புலன் வேறிடுவார்
இதுவழி யாமல வென்றறி வாரேங்க டேசிகரே
இதுவழி யெய்துக வென்றுகப் பாலென் பிழைபொறுப்பார்
இதுவழி யாமறை யோரரு ளால்யா மிசைந்தனமே. (53)

(ப-ரை) இதுவழி இன்அமுது - இந்த மார்க்கம் இனிமை யான அமிருதம், என்றவர் - என்று உபதேசித்தவர்களும்,இன்

புலன் - அல்பமான சப்தம் முதலான விஷயங்களை, வேறு இடு வார் - விலக்குகிறவர்களுமான, எங்கள் தேசிகர் - நம்முடைய ஆசாரியர்கள், இது வழியாம் - இது நல்ல வழியாகும், அல - இது நல்ல வழியன்று, என்று அறிவார் - என்று தெரிந்தவர்கள், இது வழி - இந்த வழியாக, எய்துக என்று - நீங்கள் போக வேண்டுமென்று, உகப்பால் - ஸந்தோஷத்தாலே, என் பிழை - என்னுடைய பிழைகளெல்லாம், பொறுப்பர் - பொறுப்பார்கள், மறையோர் அருளால் - வேதமறிந்தவர்களுடைய கருணையாலே, இது வழியாம் - இது வழியென்று, யாம் இசைந்தனம் - நாம் ஒப்புக்கொண்டோம்.

(கருத்து) நம்முடைய ஆசாரியர்கள், இந்தப் புஸ்தகத்தில் சொன்ன விஷயங்களே நல்ல மார்க்கம்; இவைகள் அமுதம்போல் மிகவும் இன்பமாய் இருக்கும் என்று உபதேசம் செய்திருக்கிறார்கள். அவர்கள் ஸாரமில்லாத சப்தம் முதலான விஷயங்களைத் தாங்களும் விலக்கி நம்மிடத்திலிருந்தும் அவைகளை விலக்குவார்கள். எம்பெருமானுடைய கிருபையே மோக்ஷத்திற்கு உபாயம், வேறு ஒன்றும் அல்ல என்று அவர்கள் அறிவார்கள். இந்த பிரபத்தி மார்க்கமே பூமியில் எங்கும் பரவவேண்டும் என்று நினைத்து நல்ல வழியை நாலு பேருக்குச் சொல்லிக்கொடுக்கிற ஸந்தோஷத்தாலே நம்முடைய எல்லாக் குற்றங்களையும் பொறுப்பர்கள். வேதமறிந்த ஆசாரியர்களின் கருணையினாலே இந்த புஸ்தகத்தில் சொன்ன மார்க்கத்தை நாமும் நல்ல மார்க்கமாக ஒப்புக்கொண்டோம்.

---

எட்டு மிரண்டு மறியாத வெம்மை யிவையறிவித்
தெட்டவொண் ணாத விடந்தரு மெங்களம் மாதவனார்
முட்ட வினைத்திரள் மாள முயன்றிடு மஞ்சலென்றார்
கட்டெழில் வாசகத் தாற்கலங் காநிலை பெற்றனமே. (54)

(ப-ரை) எட்டும் - எட்டெழுத்தான மூலமந்திரத்தையும், இரண்டும் - த்வயம் சரமச்லோகம் என்கிற இரண்டையும், அறியாத நம்மை, இவை அறிவித்து - இவைகளைத் தெரியும்படி செய்து, எட்ட ஒண்ணாத இடம் - கிட்டப்போகமுடியாத பரம பதத்தை, தரும், எங்கள் அ மாதவனார் - நம்முடைய அந்த லக்ஷ்மீ

பதியான எம்பெருமான் கிருஷ்ணனாய் அவதரித்து, வினைத்திரள்-கர்மங்களுடைய கூட்டமானது, முட்ட - முழுவதும், மாள - நசிக்கும்படி, முயன்றிடும் - பிரயத்நம் செய்கிறவராயும், அஞ்சல் என்றார் - பயப்படவேண்டாமென்று சொன்னவராயுமிருக்கிற அவருடைய, கட்டு எழில் - நன்றாய் விளங்குகிற, வாசகத்தால் - சரமச்லோகத்தால், கலங்கா நிலை - கலங்காதிருக்கும்படியான இருப்பை, பெற்றனம் - அடைந்தோம்.

(கருத்து) எட்டெழுத்தான மூலமந்திரத்தையும், த்வயம் சரமச்லோகம் என்கிற மற்ற இரண்டு ரஹஸ்யங்களையுமறியாத நம்மை ஆசாரியர்களிடம் சேர்த்து, அவர்களைக்கொண்டு அவைகளின் அர்த்தத்தை நமக்கு லக்ஷ்மீபதியான எம்பெருமான் அறிவித்தான். அவனை அடையாதவர்களாலே எட்டமுடியாதபரமபதத்தை நமக்குக்கொடுப்பன்; நம்முடையவினைக்கூட்டங்கள்முழுவதும் நாசமாகும்படி அவன் பிரயத்நம் பண்ணுவன்; அவன் 'நீ பயப்படாதே' என்று சொல்லியிருக்கிறான். நன்றாய் விளங்குகிற அவனுடைய வாக்கியமான சரமச்லோகத்தாலே கலங்காதிருக்கும்படியான இருப்பை அடைந்தோம்.

---

உம்முடைய புஸ்தகத்தை வேறு ஸம்பிரதாயத்தில் இருப்பவர்கள் தாழ்த்தியாக நினைத்தால் என்ன செய்கிறது என்பதற்கு இரண்டு பாட்டுக்களாலே பதில் அருளிச்செய்கிறார்.

வானு ளமர்ந்தவர்க்கும் வருந்தவரு மிந்நிலைகள்
தானுள னுயுகக்குந் தரமிங்கு நமக்குளதே
கூனுள நெஞ்சுகளாற் குற்றமெண்ணி யிகழ்ந்திடினும்
தேனுள பாதமலர்த் திருமாலுக்குத் தித்திக்குமே. (55)

(ப-ம்ரை) வானுள் அமர்ந்தவர்க்கும் - ஸ்வர்க்கலோகத்திலிருக்கிறவர்களுக்கும், வருந்த வரும் - கஷ்டப்பட்டுவருகிற, இந்நிலைகள், இப்புஸ்தகத்தில் சொன்ன இருப்புகளை, தான் உளனாய் - தாம் உடையவராய், உகக்கும் தரம் - பிறருக்கு இவைக

ளிருப்பதைக் கண்டு ஸந்தோஷப்படும் ஸ்வபாவமானது, இங்கு - இந்த உலகத்திலே, நமக்கு, உளது - உண்டு, ஆகையால், கூன் உள - கோணலையுடைய புத்திகளையுடைய, நெஞ்சுகளால் - மனதையுடையவர்களால், குற்றம் எண்ணி - குற்றங்களை நினைத்து, இகழ்ந்திடினும் - இகழப்பட்டாலும், தேன் உள - தேனிருக்கிற, பாதமலர் - தாமரைகள்போலிருக்கிற திருவடிகளையுடைய, திருமாலுக்கு - லக்ஷ்மீபதிக்கு, தித்திக்கும் - போக்யமாயிருக்கும்.

(கருத்து) ஸ்வர்க்கலோகத்தில் இருக்கிறவர்களுக்கும் இந்த புஸ்தகத்தில் சொன்ன இருப்புகள் பிரயாஸப்பட்டு வரும். அந்த இருப்புகள் நமக்கு உண்டாய், அவைகள் உள்ளவரைக்கண்டு ஸந்தோஷப்படும்படியான ஸ்வபாவமானது விரோதிகள் அதிகமாயிருக்கிற இந்த பூமியிலே இருக்கும்போதே நமக்கு உண்டாகியிருக்கிறது. வக்ரமான புத்தியை உடையவர்கள் இந்தப் புஸ்தகத்தில் குற்றத்தை நினைத்து அதைத் தூஷித்தாலும் எனக்கு வருத்தமில்லை. எம்பெருமானுக்கு இது போக்கியமாயிருக்கும்.

வெள்ளைப் பரிமுகர் தேசிக ராய்விர காலடியோம்
உள்ளத் தெழுதிய தோலையி லிட்டனம் யாமிதற்கென்
கொள்ளத் துணியினுங் கோதென் றிகழினுங் கூர்மதியீர்
எள்ளத் தனையுக வாதிக ழாதே னெழின் மதியே. (56)

(ப-ரை) கூர்மதியீர்-கூர்மையான புத்தியையுடையவர்களே, வெள்ளைப் பரிமுகர் - வெண்மை நிறமுள்ள ஹயக்கிரீவர், தேசிகராய் - அப்புள்ளாராகிய ஆசாரியராக அவதரித்து, விரகால் - உபதேசரூபமான உபாயத்தால், அடியோம் உள்ளத்து - என்னுடைய மனதில், எழுதியது - எழுதியதை, யாம் ஓலையில், இட்டனம் - எழுதினோம், இதற்கு என் - இதில் என்ன குற்றமுண்டு? கொள்ள - இது நன்றாயிருக்கிறதென்று ஒருவன் எடுத்துக்கொண்டாலும், கோது என்று - குற்றமென்று, இகழினும் - இகழ்ந்து பேசினாலும், என் எழில் மதி - அழகான என்னுடைய மனதானது, எள்ளத்தனை உகவாது-கொஞ்சங்கூட ஸந்தோஷப்படாது, இகழாது - வருத்தப்படாது.

(கருத்து) கூர்மையான புத்தியுள்ளவர்களே! வெண்மை நிறமுள்ள ஹயக்ரீவர், என்னுடைய ஆசாரியரான அப்புள்ளாராக அவதரித்து, என் மனதில் எதை எழுதினரோ, அதை எழுத்தாணிபோல் ஓலையில் நான் எழுதினேன். இந்தப் புஸ்தகத்தில் என்ன குற்றம் இருக்கும்? அது நன்ருய் இருக்கிறதென்று ஒருவன் அதை எடுத்துக்கொண்டாலும் என் மனது கொஞ்சமும் ஸந்தோஷப்படாது; அதில் குற்றம் எண்ணி ஒருவன் தூஷித்தாலும் என் மனது கொஞ்சமும் வருத்தப்படாது. ஏனென்ருல் என் மனது சாஸ்திரம் சொல்லுகிற விஷயத்தில் திருடமான நம்பிக்கை உடையதாகிய ஸம்பத்தை உடையது.

குறிப்பு:— இது ஸர்வேச்வரனுலே எழுதப்பட்டபடியாலே ஒரு குற்றமிருக்கமாட்டாது. மனிதனுல் எழுதப்பட்டதானுல் குற்றமிருக்கலாம்.

---

ஸ்ரீமதே வேதாந்தராமானுஜ மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே கோபாலார்ய மஹாதேசிகாய நம: ॥

ஜ்ஞானவைராக்யானுஷ்டானஸௌபாக்யாய ஸ்ரீமதே வேதாந்த ராமானுஜ மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ॥

---

அதிகாரஸங்கிரஹம் முற்றிற்று.

---

# பாட்டுக்களின் அகராதி.




| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| அந்தணரந்தியர் | 37 | திருவுடன் வந்த | 15 |
| அமையாவிவை | 17 | தேறவியம்பினர் | 25 |
| அறமே பரமென்று | 43 | தேனூர் கமலத் திரு | 60 |
| அறிவித்தன ரன்பர் | 41 | நடைபெறவங்கி | 63 |
| ஆரண நூல் | 8 | நன்னிலமாமது | 62 |
| ஆராதவருள் | 102 | நிலை தந்த | 19 |
| ஆளுமடைக்கலம் | 13 | நின்ற நிலைக்கு | 35 |
| இதுவழியின்னமுது | 119 | நின்ற புராணன் | 29 |
| இன்பத்தில் | 4 | நின்றனமன்புடை | 55 |
| உண்மையுரைக்கும் | 75 | நீளவந்தின்று | 9 |
| உத்தம வமர்த்தலம் | 104 | பாட்டுக்குரிய | 115 |
| உயர்ந்தநங் காவலன் | 82 | புருடன் மணிவரமாக | 101 |
| உளதான வில்விளை | 58 | பொய்கை முனி | 1 |
| உறுசகடமுடைய | 116 | பொருளொன்றென | 22 |
| எட்டுமாமூர்த்தி | 105 | மருளற்ற தேசிகர் | 96 |
| எட்டுமிரண்டும் | 120 | மறையுரைக்கும் | 118 |
| என்னுயிர் தந்து | 6 | மன்னவர் விண்ணவர் | 46 |
| எறியெழிற்பதம் | 65 | மன்னுமனைத்துறைவாய் | 67 |
| எற்றிமனத்தெழில் | 97 | முக்கிய மந்திரம் | 49 |
| ஒண்டொடியாள் | 108 | முன்பெற்ற ஞானமும் | 98 |
| ஐதுமிரண்டை | 89 | மூண்டாலுமரியதனில் | 110 |
| கண்ணனடியிணை | 103 | வரிக்கின்றனன் | 71 |
| காளம் வலம்புரி | 11 | வாதியர்மன்னும் | 27 |
| குறிப்புடன் மேவும் | 94 | வானுளமர்ந்தவர்க்கும் | 121 |
| சாதனமுநாற்யனும் | 112 | விண்ணவர் வேண்டி | 51 |
| செப்புச் செவிக்கு | 100 | வெள்ளைப்பரிமுகர் | 122 |
| தகவாற்றரிக்கின்ற | 72 | வேண்டும் பெரும்பயன் | 31 |
| தின்னிணைவில் விலக்கு | 113 | வேதமறிந்த பகவர் | 53 |

